# திவ்யார்த்த தீபிகை

## ஓர் ஆய்வு

# DIVYARTHA DIPIKAI

## A STUDY

This book is published with the financial
assistance of Thirumala Thirupathi
Deva-sthanams Under their scheme
"Aid to publishing Religious Books"

**Dr. K. K. A. Rangarajan,** M.A., Ph.D.
**TIRUPATI**

**1994**

# மதிப்புரை

**காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி அருளிய**
**திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகை**
**ஆய்வு செய்தவர் : ஸ்ரீ உ.வே. கோயில் கந்தாடை**
**அண்ணன் ரங்கராஜ ஐயங்கார், M.A., Ph.D.,**

வேத வேதாந்தங்களின் ஸாரமாக ஆழ்வார்கள் அருளிய திவ்ய ப்ரபந்தங்களும், இவற்றால் தேறும் ரஹஸ்யங்களும் நம்மாழ்வாரிடம் அதிகரித்து ஸ்ரீமந் நாதமுனிகள் முதல் புத்துயிர் பெற்று வளர்ந்து வந்தது, ஸ்ரீவைஷ்ணவ தர்சனம், இதற்கு ஸ்தாபகர்களாய் விளங்கிய ஆசார்ய பரம்பரை ஸ்ரீமணவாள மாமுனிகள் வரையில் செழித்து வந்தது பின்னர் இத்தகைய தலைவர் இல்லாமையால் ஏறக்குறைய அறுநூறாண்டுகள் நிலவிய இருள் காஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமியின் அவதாரமாகி பாஸ்கர உதயத்தால் குலைந்து, ஸ்ரீவைஷ்ணவ தர்சனம் வளரும் வாய்ப்புப் பெற்றது. இந்த ஸ்வாமி பட்டர், வேதாந்த தேசிகர் இவர்களைப் போல இளம் பிராயத்திலேயே தமிழ் நூல்கள், ஸம்ஸ்க்ருத க்ரந்தங்கள் யாவுங் கற்று, மஹநீயர்களது திருவடிகளில் படிந்து அருளிச் செயல் வ்யாக்யானங்கள், ஸ்ரீபாஷ்யம், ரஹஸ்யங்கள் யாவும் பயின்று கரைகண்டவரானார். வேதமும் வேத பாஷ்யமும் இவர், மெய்ஞ்ஞானர் மேலுந் தழைத்து, இவர் வித்யா ஸாகரமாக விளங்கி, மஹாமஹிம உபாத்யாயர் என்று பாராட்டப் பெற்றார்,

சிறந்ததோர் ஆசார்ய பரம்பரையின் திலகமாகப் பிறந்த இவர், பூர்வாசார்யர்களைப் போல் ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தைப் பரப்பத் திருவுள்ளங் கொண்டு ஆங்காங்கே யாத்ரையாக எழுந்தருளி ப்ரவசநம் செய்து தந்தார் அன்றியும் மணிப்ரவாள நடையில் அமைந்துள்ள ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களை யாவரும் எளிதில் ஓதி உய்யுமாறு தமிழ் நடையில் பல நூல்களால வெளியிட்டார், இவ்வகையில் இவர் அச்சிட்ட க்ரந்தங்கள் தமிழில் 250க்கு மேற்பட்டவை, தெலுங்கில் 41, ஹிந்தியில் 6. இவர் திவ்யப்ரபந்தங்களுக்குத் தமிழ் நடையில் அருளிய உரை திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகை என்ற திருநாமம் பெற்றது.

இந்நூல்களைப் பற்றியே ஸ்ரீ.உ வே. ரங்கராஜ ஐயங்கார் ஸ்வாமி ஆராய்ந்து, ஸ்ரீவேங்கடேச்வர பல்கலைக் கழகத்தினால் "டாக்டர்" பட்டம் பெற்று மேன்மையுறுகிறார். முதல் நூல்

களான வ்யாக்யானங்களையும் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி அருளிய உரைகளையும் ஆழ்ந்து ஆராய்ந்தல்லது இத்தகைய ஆராய்ச்சி நூல் வரைதற்கில்லை. இவர் தம் அரிய முயற்சி வெற்றி பெற்றமையால் இவருக்கு அடியேனுடைய வாழ்த்தும் பாராட்டும்

திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில் ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி அருளிய சருக்துக்கள் ''முன்னோர் மொழியைப் பொன்னே போல் போற்றி'' என்பது போல பூர்வாசார்யர்கள் அருளிய கருத்துக்களை விளக்குவதோடு, அவசியமான இடங்களில் தமது அபிப்பிராயத்தையும் வெளியிட்டிணைத்ததாகும். இவரது உரை நடை கப்பிரமாண தூய தமிழாய்ப் படிப்பதொன்றே இன்பகரமாகும். இன்ப வெள்ளமாகிய அருளிச் செயல்களைப் பயிலும் இன்பத்திலும் மேம்பட்டது இவற்றிற்கு ஆசார்யர்கள் அருளிய வ்யாக்யானங்கள்; ''Poetry in Prose'' என்றவாறு சொல் நயம் அடர்ந்தவை, படித்து இன்புறும் இடங்கள் பலபல ''துள்ளி ஊடும் நறையூரே'' என்ற இடத்தில் வ்யாக்ரயதா, ஆண் நண்டிற்கு ஆதரவில்லை என்பதை, ''திருநறையூர்—பெண்ணரசு நாடாயிற்றே'' என்கிறார். ''புரிந்து மதவேழம்'' என்ற பாசுரத்தில் ''முன் நின்று'' என்பதை விளக்கும் விதம்; ஆசார்யன் முன்பு சிஷ்யன் போல், இளமூங்கிலைத் தேன் கலந்து பிடியின் முன் நீட்டும் என்பதை இவர் விளக்குவது—திருவாவிதனத்தின் போது தூப தீபங்கள் ஏந்துவதுபோல, நீட்டும் என்பதால், பிடி இதை ஆதரித்து ஏற்கவில்லை என்கிறார். ''ஏறு சேவகனார்க்கு என்னையும் உளன் என்மின்களே'' என்றசொற்கோவையால் ராம பிரானது ரக்ஷணம் நோக்கு, இந்த ரக்ஷணத்தை நோக்கி ஒருத்தி உளள் என்ற கருத்து மிகச் சிறந்தது ஒவ்வொரு திருவாய் மொழிக்கும் அவதாரிகை வரையும் போது பாசுரங்கள் யாவற்றையும் ஆராய்ந்து தேறிய கருத்துக்கள் கோவைப்பட வழங்குவர் ஆசார்யர்கள் இவ்வாறான அவதாரிகைகளுள் மிகச்சிறந்தது ''மின்னிடை மடவார்கள்'' என்பதன் அவதாரிகை என்பதை படித்து அநுபவிக்கலாம். ''துணையும் சார்வும்'' போன்ற கருத்தைத் தெளிவு படுத்த வ்யாக்யாதா, துணை—இளைய பெருமாள் போல்வார், சார்வு—ஸ்ரீ பரதாழ்வான் போல்வார் என்று காட்டியிருக்கிறார், இவ்வாறான சுவை எங்கும் அடர்ந்து வ்யாக்யானங்களை ஸேவிப்பது அம்ருத ப்ராசகம போல் பேரின்பம் நல்கவல்லது பிறவி ஒன்றிலேயே இந்த க்ரந்தங்களின் இன்பம் யாவும் நுகர்வதற்கில்லை.

இவ்வகைகளிலே சிறப்புற்ற வ்யாக்யானங்களை ஆதாரமாகக் கொண்டு காஞ்சி ஸ்வாமி, இவற்றை விளக்கியதோடு, தமது

உரை வளத்தாலே இன்ப அநுபவத்தை மேன்மேலும் பெருக்கு கிறார். இவரது உரையின் தனிப்பட்ட சிறப்புகள் யாவற்றை, ஆய்வு செய்த ஸ்வாமி வெளியிட்டுள்ளார் முக்கியமானவை:

(1) ஐதிஹ்யங்களைக் கொண்டும், சில உலக அநுபவங்களைக் கொண்டும் விளக்கம் அருளியது,

(2) பாடபேதங்களை ஆய்ந்து எந்தப் பாடம்சிறப்புடையது என்பது ஆதரித்து விவரிப்பது.

(3) அகப்பொருள் கருத்துக்களை தெளிவுபட விளக்குவது.

(4) ஸ்ரீ பாஷ்யம், ஸ்ரீவசந பூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் போன்ற க்ரந்தங்களிலிருந்து மேற்கோள் காட்டி விளக்குவது. உதாரணமாக, ''தனிச்சிறையில் விளப்புற்ற'' என்ற இடத்தில் 'சிறையிருந்தவள் ஏற்றம்'' என்று காட்டுவது

(5) இலக்கணக் குறிப்புகள் மேற்கோளுடன் தருவது.

(6) பதவுரையைத் தெள்ளத் தெளிவாக வரைந்து இதன் மூலம் உரை வழங்குவது.

(7) பண்டைத் தமிழ் நூல்களை ஆராய்ந்து, சில புதிய கருத்துக்களை வழங்குவது. உதாரணமாக ''பூவைவியர்மேனி'' என்ற இடத்தில் வீ என்பது பூவைக் காட்டும். ஆதலால் பொருள் பூவைப்பூ, அதாவது காயாம்பூ என்று ஸ்வாமி குறித்திருக்கிறார்.

திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையை ஆராயும் ஸ்ரீ.உ.வே. ரங்கராஜன் ஐயங்கார் ஸ்வாமி தீபிகை என்பதற்கு நல்கும் விளக்கம்—அருளிச் செயல்களையும் இவற்றின் வ்யாக்யானங் களையும் நன்கு விளங்குமாறு காட்டுவது. இந்த தீபிகையிலிருந்து ஒளிபெற்றது, இவர் ஆராய்ந்து வெளியிட்டுள்ள நூல்; இது யாவரும் படித்துப் படித்து இன்புறும் வகையில் அமைந்துள்ளது. காஞ்சி ஸ்வாமியின் வாழ்க்கை வரலாறு பற்றி வித்வச்சிகாமணி கள் வரைந்த அபிநந்நத்தையும், மேற்கோள்களுக்கான ஆதாரங் களையும் இவர் பின்னிணைப்பாக அமைத்துள்ளார். திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களை ஆதாரமாகக் கொண்டு திவ்யார்த்த தீபிகை முழுதும் ஆய்ந்து, தமிழ் இலக்கண நூல்களையும் அறக் கற்றதால் இவர் வரைந்த இந்த ஆராய்ச்சி நூல் சிறப்புற்றது. பொலிக இத்தகைய அருமுயற்சி!

**T. S. ராஜகோபாலன்**

(செஞ்சொற்கவி—கவிரத்ந கண்டீரவ,
முன்னாள் தலைமையாசிரியர்
இந்து உயர்நிலைப் பள்ளி
திருவல்லிக்கேணி

திருவல்லிக்கேணி,
9-10-94

# Divyartha Depikai-A Study

## Preface of the Author

Spiritual India has many religions. Among those, Sri Vaishnavjsm is an unique religion which was enlightened by Alwars through their hymns. Sri Vaishnavism occupies a proper place in the society. The Bhakti-movement has widely spread in our country through Alwars between sixth and eighth centuries. Alwars praise the Almighty after obtaining the knowledge of uncomparable wisdom (jnana). Alwars hymns attracted the Acharyas. Acharyas learned hymns **Divya Prabandams** by the grace of Alwars. In this way hymns impressed the acharyas deeply. The acharyas have written commentaries for the benefit of the people. We can only know about the greatness of Alwars through the acharyas. The foremost Acharya Sriman Nathamuni comprised and codified the 4000 hymns of Alwars with the blessings of Nammalwar. The five commentaries of five acharyas for 1000 hymns of Nammalwar are called **Bhagavad Vishayam.** Manavala Mamuni praised these acharyas in his **Upadesarathina malai.**

Five commentaries on Tiruvoimoli

1. From the earliest acharyas till the period of Sri Ramanuja, devotees and disciples learned the subtlety and meanings of **Thiruvoimoli** only by word of mouth, in Guru-Sishya (Teacher-Student) tradition continuously. At the instance of Sri Ramanuja, Tirukkurugaippiran Pillan wrote a remarkable commentary called **Arayirappadi.** This is the first commentary for Tiruvoimoli.

2. **Onpadinarayirappadi** was written by Nanjeer who learned it from his preceptor, Acharya Sri Parasara Bhattar.

3. **Irupaththirnalayirappadi** was composed by Periavachchan Pillai, a disciple of Nampillai. He is called Vyakhyana Chakravarthi (Emperor of Commentaries) since he wrote commen-

taries for 4000 hymns of Alwars, with his methodical and systematic approach in his treatise.

4. **Muppaththayirappadi** was compiled by Vadakku Tiruveedhippiliai , another disciple of Nampillai. Among all the commentaries of Tiruvoimoli, that has gained {prominance so far, this work is considered to be the most informative and thoroughly an exhaustive one. This is also known as **Idu.** This has been recorded after listening to the discourses of Nampillai by Vadakku Tiruveedhi-p-pillai.

5. The last commentary was written by Vadi Kesari Alagiya Manavala Jeer, a disciple of Periavachchan Pillai. This is called **Panneerayirappadi**. This commentator was an illiterate in the beginning and he served as a cook in his acharya's house, Later he has gained most unparalleled wisdom with the grace of his preceptor. He became erudite and wrote many scholarly treatises, including the present commentary.

## *Divyartha Dipikai*

Between fourteenth and nineteenth centuries nobody has written commentary on Tiruvoimoli apart from the abovesaid five commentaries that has been in traditional practice. During the beginning of twentieth century, a commentary called **Divyartha Dipikai** for all the 4000 hymns of Alwars was written by Sriman Prathivadi Bhayankaram Annangaracharya Swamy (hear after he is called Swamy). Swamy has not adopted the term of suffix 'Padi' which means a unit of word-content of the length of thirty two letters forming a phrase. Because he elaborately discussed the meanings and rare words and sentences.

Dipikai is a Tamil rendering for the Sanskrit 'dipika'. Dipika means lamp. A lamp represents the removal of darkness and give light. Likewise Swamy's commentary removes the darkness in understanding the manipravala words in earlier commentaries, In manipravala style, 80% of the words are in Sanskrit and 20% in Tamil. So scholarly people can only understand the meaning. Even an ordinary literate cannot go through the commentaries.

unless he possesses the knowledge both in Sanskrit and Tamil. On the other hand Swamy's commentary has 75% of the words in Tamil and 25% in Sanskrit which are understandable. Certainly this commentary is a lamp (Dipikai) to refer to the other commentaries.

I have selected for my study Divyartha Dipikai with special reference to Tiruvoimoli. This was suggested to me by my brother-in-law, late Sriman U. Ve. Kidambi Srinivasavaradacharya Swamy, a benefactor of my life and to whom this book is respect fully dedicated.

I am traditionally trained in Sri Vaishnava scripts for over a decade under the lotus feet of Sriman U. Ve. Vidwan T. A. Krishnamacharya Swamy. He is an uncomparable scholar in Ubhaya Vedantha and genius in all acharyas' commentaries and epics. I have gained a little knowledge in acharyas' commentaries by his blessings. My thesis has been drafted under the paternal guidance of Dr. P. Sourirajan, former professor and Head, Department of Tamil, Sri Venkateswara University, Tirupati who has spared his valuable time and energy in getting my work completed in record time. Dr. M. Varadarajan, Lecturer in Tamil, S. V. University, has kindly helped me during the course of my research and but for his fraternal help this book would not have seen the one form.

This book has been divided in to five chapters.

Chapter 1. Swamy, his life and works

Chapter 2. Divyartha Dipikai and Tiruvoimoli-An Introduction

Chapter 3. Commentary of Tiruvoimoli Dipikai and earlier commentaries.

Chapter 4. Significance of Tiruvoimoli Dipikai.

Chapter 5. Swamy's erudition in grammar.

*Chapter 1*

This chapter begins with the nature of the city of kanchi, education in the city, Swamy's life, his services in the temple,, his compositions and his discourses, etc.

This is one of the seven sacred cities which gives solvation.

**"Ayodhya Mathura Maya Kasi Kanchi Hvanthika Puri Dwara vathichaiva sapthaitha moksha dayikaha"**

It is being called as Kanchi, Kanchipuri, Kancheepuram, Kachchi and so on. Also it is called as 'Sathyavratha Kshetra.', Explaining the nature of Kanchi, Swamy underlined the importance of that city being called as 'Perumal Koil' as there are eighteen temples located among the 108 Divyadesas (temple cities).

Kanchi was not only capital city during the Pallava rule but also it was well developed in religious aspects. Saivite and Vaishnavite religions played their role in the spiritual development in Kanchi. Many saints, eminent scholars like Poigai Alwar and Acharya Vedantha Desika were born in Kanchi.

The religions, which take their source in the Vedas are called Vedic Religions. Accordingly, Sri Vaishnavism is a vedic religion. Sanskrit and Tamil are regarded as the right eye and left eye of Srivaishnavism quotes from Vedas as well as 4000 hymns of Alwars, which are authenticated and accepted by learned acharyas, Kanchi is a renowned seat of Vaishnavism. Sri Ramanuja, who was born in Sriperumbudur, 40KM from Kanchi, came to serve Lord Sri Varadarajaswamy,

It is interesting and curious to know about the early education of Swamy at Kanchi. Mudumbai family, who were later christianed as Prathivadi Bhayankarm, for being the title drawn from the name of 'Hasthigiri Natharanna' by Nayanavaradacharya son of Vedantha Desika. Such an illustrious family has produced many erudite scholars. That name is still continuing to this day as Pradhivadi Bhayankaram family. In that family Anna Rangacharya Swamy was born. He had four daughters and only one son. He was born in the

year 1891-in Visakha star of Panguni. Tamil month during Vikruthi year. His parents named him as Annangaracharya. Later he was popularly called as 'Kanchi Prathivadi Bhayankaram Annangaracharya Swamy.

He started his early studies at the feet of his father. He widened his intellectual horizon further with the help of many great scholars like Sriman Gadi P. B. Ananthacharya Swamy, his maternal grand father, Jeer Swamy, maternal uncle Sriman Kidambi Krishnaswamy and others. He learned vedic texts and its commentary with beneign guidance of Sriman Sudarsanacharya Swamy at his age of twenty two years. With regard to Tamil grammar, Swamy gained the knowledge from Sriman Vai. Mu Sadagopa Ramanujacharyaswamy, who was called 'Tamizh Tatha' — grand father of Tamil.

At the age of twelve, he learned prosody and poetry both in Sanskrit and Tamil. In his boyhood he was awarded gold medal prize. Swamy's parents adorned him with gold bangles to his hands. So he was called as 'Thangakkappu Anna' (Gold bangle Anna).

His life mission was to spread the theme of Vaishnavism, to to write books for his followers to follow the theme, and devout attachment with Divyadesas and on early acharyas.

He started his discourse at Hyderabad, when he accompanied Sriman Jagadguru Gadi Ananthacharya Swamy in the temple of Seetharam Bagh (1907). By the grace of Gadi Swamy he delivered his first lecture on the life of Sri Ramanuja at the age of 16. From that day he continued his lectures and gave discourses in all the nook and corners of the country on various topics.

He had a number of disciples. He atracted the disciples by way of explaning the gist of the topics He had a practice of giving discourse at the particular Divyadesa as mentioned in the centum. For example in Tiruvoimoli, sixth centum praises Lord Sri Srinivasa of Thirumala. That centum was recited and explai-

ned at the Seven Hills in the presence of prominent persons Likewise every centum used to be completed at the related Divyadesas like Srirangam, Tirukkannapuram and soon.

Every year he had been giving discourses in the month of Margali (December-January). Everyday his discourses on one single hymn of Sri Andal during the time of two hours. Andal praises the Lord by her hymns called Tiruppavai which contains thirty hymns. On one occasion he would disguise himself as Araiyar-who serves the Lord in a few temple towns hereditarily in front of Lord by dancing as per the actions in the hymns.

Apart from this, this chapter reveals his writing, experiences, services to the temple, close attachment with earlier acharyas etc. with their commendable quotations.

## *Chapter 2*

This Chapter explains the genesis, growth and development of Divyartha Dipikai, structure of the commentary, name of Tiruvoimoli, etc. under nine topics. Until the emergence of Swamy's commentary for 4000 hymns, there was a lacunae in knowing the manipravala commentaries of acharyas and only those commentaries were enlivening. Further, there was no appearance of a fresh commentary till the birth of Swamy. Since the standard of education in Vaishnava literature has been gradually deteriorating, Swamy was forced to write the commentary on 4000 hymns of Alwars. Some persons commented in their own way without following the earlier commentaries. On the other hand, a few scholars had shown their talents in one way' i.e., in Tamil only without comparing the Sanskrit texts. So scholars in two languages - Sanskrit and Tamil - were decreasing in number. As a result nobody could do research on Alwars hymns with the depth of knowledge.

It is well known that Divya Prabandams were being rehabilitated during the last decade of nineteenth century. Swamy was only the scholar who revived the commentaries.

At the age of nineteen, he had written first commentary for **Ramanuja Nootranthathi**. Later during 1914 he had written commentary to **Mudalayiram**, i.e. first thousand hymns. This was opposed by the then H. H. Vanamamalai Jeer Chinna Kaliyan Swamy, who later patronised and encouraged him to continue his writing for the hymns, as the earlier commentaries of acharyas would disappear. His commentary will show his erudition even in his preface to his text and this commentary must be useful for those who have inadequate acpuaintance with the hymns.

His Dipikai for Mudalayiram and Peria Tirumoli (second thousand) were completed in 1927. In 1933 a commentary on Tiruvoimoli (third thousand) has come out as first edition. Towards the end of 1935 the fourth thousand hymns was also completed. However, copies of the commentary for all the four thousand hymns were available from 1953 onwards.

During the nineteenth century Sriman Nathamuni and his followers, praised the Alwar's experiences in oral literatures, Their hymns blossomed after the birth of Sri Ramanuja.

## *Structure of Divyartha Dipikai*

Swamy gave the commentary structure for 4000 hymns of Alwars like Peria Vachchan Pillai. Nobody has written such Commentary so far after the period of Swamy. This commentary is legible and clear in its nature. It reveals the relations between God-Alwars and Alwars-Acharyas with regard to rare meanings and special style of writings.

Nampillai's commentary explains in particular, Dhwaya Manthra (dual sacred sentences) whereas Panneerayirappadi implies Bhattar's theme on Artha Panchaka - Para, Vyuha, Vibhava· Antharyami and Archa. But Swamy's commentary is distinguished in every respect among the other commentaries. Though it follows Nampillai's commentary on most places, Swamy's proficiency in elaborating it exists in his commentary.

Beginning with a preface, stanza and explaining each word of the hymn are his style of writing. When he takes a hymn, he explains with conjunction from previous hymn and the next onward hymn. 'gist of hymn, special notes for specific word Tamil-Sanskrit quotations, rare meanings, grammatical points, etc

The method of explaining Tiruvoimoli word by word meaning was created by Acharya Vadikesari Alagiya Manavala Jeer. There was a gap between fourteenth and nineteenth centuries. Swamy cleared that obstacle in his period. This shows the ability in ascertaining the valuable meaning of Tiruvoimoli. It is interesting to note that in his commentary he has establishad the nomencla- ture of Tiruvoimoli which no acharya has given earlier. Further Swamy shows the greatness of Alwar and his hymn of Thiruvoi- moli following Acharya Hrudayam's tenets and we can enjoy Swamy's experiences This is very useful to the readers

Tiruvoimoli has been pronounced by supreme words with divine voice in melodious style, with regard to the Supreme Being. So the thousand hymns of Nammalwar is called Thiruvoi- moli. Due to the sake of difference from Tirumoli of thousand hymns rendered by Tirumangai Alwar, it was named as Tiruvoimoli It was systematised for chanting of Nammalwar hymns as an integral part of the temple, whereas other hymns are chanted during the procession of the deity

## *Chapter 3*

This chapter explains tha preface' stanza, meaning of word, substance of the stanza, special notes, Tam . Sanskrit grammatical notes, philosophical meaning, names of Lord and gist of each stanza at the end of tense.

Though Dipikai, in its structure, has not followed the method of propogating the Vaishnavite principles, as explained by Nampillai and others, it has special message, which is under- standable and legible in knowing Lord's attributes, gunas,

plays, etc He had not failed to follow in mentioning the importance of the earlier commentaries.

In the preface Swamy reveals the nature of Alwar as well as uncomparable nature of Lord Further he shows the continuity between previous pasuram (hymn) and the present. For example in the preface of '**Poruma neelpadai**' Acharyas describe the Godly love with Nammalwar Bhattar goes further and defines that not only He gives scope for love with Him but naturally He gives with His pleasing manner without any expectation from Alwar and shows His highest character (guna).

Swamy follows the same method, without mentioning directly Bhattar's commentary, but quoting Acharya Vedantha's **Thatparya Rathnavali**, in which he has used the world '**avyojodarabat**' of Bhattar.

Likewise in many places he quotes the early acharyas, versions.

## *Chapter 4*

This chapter majestically enlightens the speciality of Divyartha Dipikai on the following topics:

Speciality of Divyartha Dipikai
Speciality of Tiruvoimoli
Speciality of tense
Gist of the tense
Significance of hymn
Alwar's inner thought and Dipikai and
Pecularity of Dipikai

Further, these seven topics elaborately describe the inner ideas of Swamy, inner thoughts of earlier acharyas and so on.

Among the four Prabandams of Nammalwar, Tiruvoimoli is an ocean of Tamil Veda, having of thousand branches like Sama Veda. Tiruvoimoli happens to be supreme in its sound, style and pronounciation. It prefixes the word 'Tiru' in its name. This has been spelt by 'Satagopa' (Nammalwar), a pious saint with oratorical tongue. Hence Nammalwar is also called '**Tirunaveerudaya Piran**'.

Swamy used to say that Tiruvoimoii is food for all the Sri Vaishnavas. He quotes '**Blessed am I to feed the devout with this nectarean hymnal**' The opening word '**Bhakthamrutham**' the ambrosia for God-lovers (the invocatory sloka) composed by Sriman Nathamuni,is derived from thii song, based on the Alwars intention as set out, in this song' Thus he describes the super speciality of Tiruvoimoli that is elaborately dealt with in this chapter.

Swamy is a commentator of commentators.The inner thoughts of Alwar had been grasped only by acharyas. By the act of Commentaries were having style of language, examples, quotations idioms, etc. Thus the commentaries were developed. Some scholars wrote commentaries to the earlier commentaries for understanding the meanings of Alwar's hymns. In that way,Swamy had written commentary to the earlier commentaries. Through this way Swamy legibly shows the inner thoughts of Alwar as well as acharyas

## *Chapter 5*

This study concludes with the grammatical skill of Swamy. He had used all the similes in his commentary. He differs in some places with the earlier acharyas.

He does not fail to show literally grammatical note from the hymns. These notes appeared on the basis of **Tholkappiyiam and Nannool**. In the Idu such grammatical points and may not be noticed as is it gives importance to Alwar. In panneerayirappadi commentary such grammatical notes appear apart from Alwar's experiences of God.

In such a way Swamy's literacy skill by explaining grammatical point is not-worthy. This book consists of eighteen Annexures.

I have briefly given some glimpses in each chapter of this book. I felt it very interesting to go through the entire commentary when I learnt in the lotus feet of my acharya Sriman U. Ve. T. A. Krishnamacharya Swamy. I am obliged to Prof. P. Sourirajan and Dr. M. Varadarajan for their invaluable guidance.

**Dr K. K. A. Rangarajan**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமான் உ. வே. வித்வான், ந்யாய சிரோமணி

## கி. அ. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமி

## அணிந்துரை

ஸ்ரீமான் K. K. A. ரங்கராஜன் M A அவர்கள்—ஸ்ரீ. உ. வே. மஹாவித்வான் ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் உலக மக்களனைவரும் உய்யுமாறு எழுதி வெளியிட்டருளிய எண்ணிலடங்காத நூல்களில் ஒன்றான திருவாய்மொழித் திவ்யார்த்த தீபிகையுரையைப் பற்றியதோர் ஆராய்ச்சி நூலையெழுதி அது காரணமாக, திருப்பதி ஸ்ரீ வேங்கடேச்வர யூனிவர்ஸிடியால் 'டாக்டர்' பட்டம் சூட்டிக் கௌரவிக்கப்பட்டுள்ளார்.

இவர் அடியேனிடம், திருப்பல்லாண்டு, திருப்பாவை அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, உபதேச ரத்தினமாலை முமுக்ஷுப்படி முதலிய நூல்கள் சிலவற்றை அவற்றின் வ்யாக்யானங்களுடன் பாடங்கேட்டவராவர்.

இவர் ஸ்ரீகாஞ்சியிலேயே பிறந்து வளர்ந்தவராகையாலே ஸ்ரீ காஞ்சி ஸ்வாமியின் திறத்தில் தமக்கு உண்டான பக்திப் பெருக்கு மிகவும் தூண்ட, தம்முடைய ஆராய்ச்சிக்கு உரியதாக அவர்தம் நூற்கடலில் ஒன்றினைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது வியப்பிற்கு உரியதன்று ஆனால் போற்றத்தக்கது.

இவ்வாராய்ச்சி நூல் 1 ஸ்ரீ காஞ்சி ஸ்வாமியின் வாழ்வும் பணியும், 2 திருவாய்மொழித்தீபிகை, 3 திருவாய்மொழித்தீபிகையும் முன்னோருரைகளும் 4 திருவாய்மொழித் தீபிகையின் சிறப்பு, 5 ஸ்ரீ ஸ்வாமியின் இலக்கணப்புலமை என்று பெயர் பெற்ற ஐந்து இயல்களையும், ஒவ்வோரியலிலும் பல கூறுகளையும் கொண்டுள்ளது. மேலும் இந்நூலுக்கு அங்கமாக 'பின்னிணைப்பு என்றொரு பகுதி மிகவும்விரிவாக அமைந்துள்ளது.

இந்நூல் முழுவதும் எல்லோராலும், சிறப்பாக ஸ்ரீவைஷ்ணவர்களால, மிகவும சிறப்பாக நாட்டில் பல்வேறு பகுதிகளில் பரந்துள்ள—ஸ்ரீகாஞ்சீஸ்வாமியின் பக்தர்களால் படித்து இன்புறத்தக்கதாகும் ஆராய்ச்சியாளர்க்கும் பயன்படுவதாகுமிது

இவ்வாராய்ச்சி நூல் இப்போது அச்சிட்டு வெளியிடப்படுவது மகிழ்ச்சிக்கு உரியது. இதன் ஆசிரியராகிய ஸ்ரீமான் டாக்டர் K K A. ரங்கராஜன் அவர்களுக்கு மேன்மேலும் அறிவும் முயற்சியும் வளருமாறு, திருவேங்கடமுடையான் பூவார்கழல்களிலும் தென்னத்தியூரான் துயரறு சுடரடிகளிலும் ஆழ்வாரெம்பெருமானார் சீயர் ) திருவடிகளிலும் மனமார வேண்டி விடை பெறுகிறேன்

பெருமாள் கோவில் — இங்ஙனம்

11—9—94 — **கி. அ. கிருஷ்ணதாஸன்**

ஸ்ரீ

# முன்னுரை

தெருளுற்ற வாழ்வார்கள் சீர்மை யறிவாரார்
அருளிச் செயலை யறிவாரார் - அருள்பெற்ற
நாத முனிமுதலாம் நந்தேசி கரையல்லால்
பேதைமனமே யுண்டோ பேசு.

(உபதேச ரத்தின மாலை 36)

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தின் தனிச்சிறப்பு ஆசாரியர்கள் அவ்வவ் காலத்து அதற்குத் தந்துள்ள உரை விளக்கங்களாகிய வியாக்கியானங்களே ஆகும். காலம், இடம், கற்போர் சூழ் நிலைக்கேற்ப இந்த உரைகள் ஒன்றுக்கொன்று விளக்கமாகவும், ஒன்றையொன்று நிறைவு செய்வது போலவும் அமைந்து செல்கிறது. இவ்வாறு அமைந்த உரைகளுள், இக்காலத்திற்கேற்ற வாறு சுவாமி அருளிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்த உரையே 'திவ்வியார்த்த தீபிகை' ஆகும். இவற்றில் அமைந்த சிறப்பைச் சொல்லுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

பெரியவாச்சான் பிள்ளை போலவே சுவாமி அருளிய திவ்வியார்த்த தீபிகை உரையும் நாலாயிரத்திற்கு முழுவதுப் அமைந்ததை அறிஞர் அனைவரும் அறிவர். இந்நாலாயிரத்துள் 'அவயவி' என்று சிறப்பிக்கப்பெறும் நம்மாழ்வாரருளிய சாம வேத சாரமாகிய திருவாய்மொழி தனிச்சிறப்புடையது. எனவே தான் முன்னோர்கள் இதற்கு ஐந்து உரைகள் இயற்றியுள்ளனர். இந்தச் சிறப்பு நோக்கித் திவ்வியார்த்த தீபிகையில் திருவாய் மொழியே இங்கு ஆய்வுப் பொருளாக மேற்கொள்ளப்பட்டது. தீபிகையின் திறமெல்லாம் பொங்கி நிறைந்து புலப்படுவது இத் திருவாய்மொழித் தீபிகையிலேயே ஆம்.

இவ்வாறு ஆசாரியர் ஒவ்வொருவரின் உரை வளங்களைப் பற்றி இன்று பல ஆய்வுகள் தோன்றி வருகின்றன. அவற்றுள் டாக்டர் தெ. ஞானசுந்தரத்தின் (சென்னை) 'வைணவ உரை வளம்', டாக்டர் இரா. அரங்கராசனின் (மதுரை) 'நம்பிள்ளை உரைத் திறன்', டாக்டர் மா. வரதராஜனின் (திருப்பதி) 'பன்னீராயிரப்படி—ஓர் ஆய்வு' என்னும் முனைவர் பட்ட ஆய்வேடுகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. இதனை ஒட்டி இந்த நூற்றாண்டில் நம் கண்முன்னே தோன்றி வைணவச் செல்வராக வாழ்ந்து மனம், மொழி, மெய்களால் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தை உலகுக்கெல்லாம் உணர்த்தி 1983இல் ஆசாரிய

திருவடி எய்திய காஞ்சி மகாவித்துவான் ஸ்ரீமான் உ. வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமியின் நினைவாக அவர் சீரையும் சிறப்பையும் புலப்படுத்துமாறு இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. மேலும் இந்நாள் வரை சுவாமியின் திவ்வியார்த்த தீபிகையின் ஆய்வினை எவரும் மேற்கொள்ள வில்லை என்பதும் இங்குக் குறிக்கொள்ளத் தக்கது

இந்த ஆய்வு வரலாற்று நோக்கிலும், விளக்கவியல் நோக்கிலும் அணுகப் பெற்றுள்ளது.

சுவாமி அருளிய திருவாய்மொழிக்கமைந்த தீபிகையுரை முதன் முதலில் 1933இல் பதிப்பிக்கப்பட்டது. அது கிடைப்ப தில்லை எனவே, அதற்குப் பின்வந்த நான்கு பதிப்புகளில் 1949 முதல் 1957 வரை திருவாய் மொழிக்கமைந்த தீபிகை உரையே இந்த ஆய்வுக்கு முதன்மை ஆதாரமாக மேற்கொள்ளப்பட்டது இவ்வாய்வேடு,

1. காஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமி—வாழ்வும் பணியும்
2. சுவாமியின் திவ்யார்த்த தீபிகை—திருவாய்மொழித் தீபிகை.
3. திருவாய்மொழித் தீபிகையும் முன்னோர் உரைகளும்
4. திருவாய்மொழித் தீபிகையின் சிறப்பு
5. இலக்கணப் புலமை

ஆகிய ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

காஞ்சி மாநகரம் தொன்று தொட்டுக் கல்வியில், குறிப்பாக, வைணவ சமயம் வளர்ச்சி பெற்ற பட்டணமாகத் திகழ்கையால் அந்நகரில் வாழ்நத காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கரா சாரிய சுவாமியின் வாழ்வும் பணியும் பற்றி முதல் இயல் ஆய்கிறது இதில் காஞ்சியும் கல்வியும், சுவாமியின் தோற்றம், சுவாமியின் வாழ்வு, சுவாமியின் வாழ்வின்கண் சொந்த அனுபவங் கள், அவரருளிய திவ்வியார்த்த தீபிகையின் பெருமை என்று பல செய்திகள் ஆராயப் பெற்றுள்ளன.

இத்தகு பெருமை பெற்ற திவ்வியார்த்த தீபிகை அமைப்பை விளக்கும் இரண்டாவது இயல். ''திவ்வியார்த்த தீபிகை-திருவாய் மொழித் தீபிகை'' என்னும் இவ்வியலில் திவ்வியார்த்த தீபிகையின் தோற்றம், பெயர்க்காரணம், திருவாய்மொழி உரைகள், திருவாய் மொழித் தீபிகையின் அமைப்பு ஆகியவை இடம் பெறுகின்றன

அடுத்து அமையும் இயல் 'திருவாய்மொழித் தீபிகையுரையும் முன்னோர் உரைகளும்'' என்பது இந்த மூன்றாவது இயலில் தீபிகையின் அமைப்பு, முன்னோர் உரைகளின் சொல், பொரு-

ளாட்சிகளைப் பயன்படுத்தல் ஆகிய தலைப்புகளில் பல உட்பிரிவுகளைக் கொண்டு இவர்தம் உரைப்போக்கு எடுத்துரைக்கப் பெறுகின்றன.

நான்காவது இயல் "திருவாய்மொழித் தீபிகையின் சிறப்பு" என்னும் தலைப்பில் அமைந்தது. இதில் தீபிகை உரை எழுதிய சுவாமியின் திருவுள்ளமும், அத்திருவுள்ளத்திலுறைந்த முன்னோர்களான ஆசாரியர்களின் திருவுள்ளமும், அந்த ஆசாரியர்கள் அறிந்த ஆழ்வார் திருவுள்ளமும்; அந்த ஆழ்வார் அனுபவித்த இறைவனின் நிலையும் ஆகிய இவை, திருவாய்மொழித் தீபிகை, யின் சிறப்பு, திருவாய்மொழியின் சிறப்பு, பதிகத்தின் சிறப்பு, பதிகத்தின் திரண்ட கருத்து, பாசுரச் சிறப்பு, ஆழ்வார் திருவுள்ளக்கிடக்கையும் தீபிகையும், தீபிகையின் தனித்தன்மை என்னும் ஏழு வகைகளாக ஆராயப் பெற்றுள்ளன.

"இலக்கணப் புலமை" என்னும் ஐந்தாவது இயலில் திவ்வியார்த்த தீபிகை உரையில் சுவாமி வெளிப்படுத்தியுள்ள அவர்தம் இலக்கணப்புலமை பல்வேறு நிலைகளில் ஆராயப்பெற்றுள்ளது. தொல்காப்பியம், நன்னூல் முதலான நூல்களின் அடிப்படையில் ஆழ்வார்தம் திருப்பாசுரங்களுக்குத் தக்க முறையில் இலக்கணப் புலமையோடு குறிப்புகளைச் சுவாமிகள் தந்துள்ள திறம் இதில் விளக்கப்பெற்றுள்ளது.

ஆய்வு நோக்காகக் கொண்ட திவ்வியார்த்த தீபிகையின்கண் அதன் உட்பிரிவான திருவாய்மொழித் தீபிகையுரையின் சிறப்புகள் இரண்டாவது இயல் தொடங்கி ஐந்தாவது இயல்வரை எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

இந்த ஐந்து இயல்களின் அடிப்படையில் தொகுக்கப்பெற்றனவெல்லாம் பின்னிணைப்பில் முறைப்படுத்தித் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொர் இயலின் முடிவுலும் முடிவுகள் கூறப்பட்டுள்ளன. இயல் பகுப்புகளை அடுத்து ஆய்வு அடிப்படையான பின்னிணைப்புகளும், அவற்றையடுத்து ஆய்வுக்குத் துணையெய்த நூல்களின் பட்டியலும் தரப்பெற்றுள்ளன. இவை ஆய்வாளர்க்குத் துணை செய்வன.

இவ்வாய்வு நூலில் அடியேனுடைய அறியாமையிருலும் கவனக்குறைவிருலும் ஏற்பட்டுள்ள சொற் குற்ற, பொருட் குற்றங்களைப் புலவர் பெருமக்கள் தம் பெருந்தன்மை என்னும் குணத்தினல் அடியேனைப் பொருத்தருள வேண்டுகிறேன்

**ஸ்ரீ வேங்கடேச கருணா கலிதாபிஷேக**
**ஸ்ரீ யாமுநார்ய குருவர்ய க்ருபாத்தயோதம் !**
**ஸ்ரீ க்ருஷ்ண ஸூரி பத பங்கஜ ப்ருங்க ராஜம்**
**ஸ்ரீ க்ருஷ்ண பாத மனகம் ஸததம் நமாமி !**

**கோ. க. அண்ணன் ரங்கராஜன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ. கோ | — | அமரகோசம் |
| அதி. ஸ்தவம் | — | அதிமாநுஷ ஸ்தவம் |
| அதி. ஸா. | — | அதிகரண ஸாராவளி |
| அலங். | — | அலங்கார சாஸ்த்ரம் |
| அஷ்ட. | — | அஷ்ட ச்லோகி |
| ஆ. இ. | — | ஆசார்ய இருதயம் |
| உ. ஆ. | — | உரை ஆசிரியர் |
| கிரா | — | கிராதார்ஜுன காவ்யம் |
| கீதா | — | கீதா பாஷ்யம் |
| கீதை | — | பகவத் கீதை |
| கோதா | — | கோதா ஸ்துதி |
| ச. க. | — | சரணாகதி க்த்யம் |
| சதுச் | — | சது: ச்லோகி |
| சதுச். பா | — | சது: ச்லோகி பாஷ்யம் |
| சம்பூ. | — | சம்பூராமாயணம் |
| சு. | — | சுலோகம் |
| சுதர்ச. | — | சுதர்சன சதகம் |
| தயா | — | தயா சதகம் |
| தே பஞ் | — | தேவாதிராஜ பஞ்ஜகம் |
| தை உப | — | தைத்திரீய உபநிடதம் |
| தொல் | — | தொல்காப்பியம் |
| த்ர உப | — | த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி |
| நடா | — | நடாதூரம்மாள் |
| நா ஸூ | — | நாராயண ஸூக்தம் |
| நூ | — | நூற்பா |
| ப.பக்; | — | பக்கம், பக்கங்கள் |
| ப ஆ | — | பதிப்பாசிரியர் |
| பஞ் ஸ்தோ | — | பஞ்சாயுத ஸ்தோத்ரம் |
| பராங் | — | பராங்குசாஷ்டகம் |

| | | |
|---|---|---|
| பா ஸஹ | — | பாதுகா ஸஹஸ்ரம் |
| புரு ஸூ | — | புருஷ ஸூக்தம் |
| ப்ர சூ | — | ப்ரம்ஹ ஸூத்ரம் |
| மகா | — | மகாபாரதம் |
| மனு | — | மனுஸ்ம்ருதி |
| மு மா | — | முகுந்த மாலை |
| மேலது | — | அதே நூல் |
| யதி ஸ | — | யதிராஜ ஸப்ததி |
| யாத | — | யாதவாப்யுதயம் |
| ரிக் | — | ரிக்வேதம் |
| வ இ | — | வடமொழி இலக்கணம் |
| வரத பஞ் | — | வரதராஜ பஞ்சாஸத் |
| வரத ஸ்தவம் | — | வரதராஜ ஸ்தவம் |
| வரா ச | — | வராஹ சரம ச்லோகம் |
| ஜி ஸ் | — | ஜிதந்தா ஸ்தோத்ரம் |
| ஸங் ஸூ | — | ஸங்கல்ப ஸூர்யோதயம் |
| ஸஹ | — | ஸஹஸ்ரநாமம் |
| ஸ ர | — | ஸச்சரித்ர ரக்ஷை |
| ஸூ உப | — | ஸூபாலோ உபநிஷத் |
| ஸூந்தர ஸ்தவம் | — | ஸூந்தரபாஹூ ஸ்தவம் |
| ஸ்தோ ர | — | ஸ்தோத்ர ரத்நம் |
| ஸ்வே உப | — | ஸ்வேதாச்வர உபநிடதம் |
| ஸ்ரீ குண | — | ஸ்ரீ குணரத்நகோசம் |
| ஸ்ரீ பா | — | ஸ்ரீ பாகவதம் |
| ஸ்ரீ பாஷ் | — | ஸ்ரீ பாஷ்யம் |
| ஸ்ரீ பாஞ் | — | ஸ்ரீ பாஞ்சராத்ரம் |
| ஸ்ரீ ரங் ஸ்தவம் | — | ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவம் |
| ஸ்ரீ ரா | — | ஸ்ரீ ராமாயணம் |
| ஸ்ரீ வ பூ | — | ஸ்ரீ வசந பூஷணம் |
| ஸ்ரீ வி த | — | ஸ்ரீ விஷ்ணு தர்மம் |
| ஸ்ரீ வி பு | — | ஸ்ரீ விஷ்ணு புராணம் |
| ஸ்ரீ வை ஸ்தவம் | — | ஸ்ரீ வைகுண்ட ஸ்தவம் |
| ஸ்ரீ ஸ் | — | ஸ்ரீ ஸ்தவம் |
| 9 (வ) | — | ஒன்பதினாயிரப்படி (வடவாசார்ய ஸ்வாமி) |

## நெறிமுறை விளக்கங்கள்

1. சுவாமி என்ற இடங்களிலெல்லாம் காஞ்சி உ. வே. பி. ப. அண்ணங்கராசார்ய சுவாமிகளையே குறிக்கும்.

2. பதிகங்களின் முதற்குறிப்பை உணர்த்தும் முறையில் 1 4 குறிப்புகளில் வந்த இடத்தில், முதல் எண் திருவாய்மொழிப் பெரும்பகுதியான பத்தையும், இரண்டாவது எண் அப்பத்தில் உள்ள பதிகத்தையும் குறிக்கும்.

3 1-1-1 என்பது முதற்பத்தில் முதல் பதிகத்தில் முதற்பாடலை குறிக்கும்.

4. 1-1-1 தீபிகை என்னும் போது சுவாமி அருளிய திருவாய் மொழித் தீபிகையுரையைக் குறிக்கும்.

5. 1-1-1 36, 24, 12, 9, 6 என்பன முறையே திருவாய்மொழியில் பத்து, பதிகம், பாடல் அதற்கு உரையான முப்பத்தாறாயிரப் படி, இருபத்துநாலாயிரப்படி, பன்னீராயிரப்படி, ஒன்பதினா யிரப்படி, ஆறாயிரப்படி என்பதைக் குறிக்கும்.

6. சுவாமியின் திபிகை உரையில் மேற்கோள் காட்டும் பாசுரங் கள் எல்லாம் அவரமைத்த பாங்கிலேயே வகையுளி ஏதுமின்றி அப்படியே எடுத்தாளப்பட்டுள்ளன. ஆய்வாளரால் மேற் கோள் காட்டப்பெறுகிற பாசுரங்கள் வகையுளி செய்யப் பெற்றுக் கொடுக்கப்பெற்றுள்ளன.

7. சுவாமி என்னும் வடசொல் முன்னர்ப் பலவிடங்களில் வல் லெழுத்துக்கள் மிகவில்லை என்பதும் இங்குத் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

8. ஆழ்வார் என்ற சொல் நம்மாழ்வாரையே குறிக்கும்.

9. 'இலக்கணப் புலமை' என்னுமியலில் வரும் 1-4 7 போன்ற எண்கள் தீபிகையுரையைக் காட்டும்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# நன்றியுரை

**''காஞ்சி ஸௌம்யவரோபயந்த்ரு யமிராட் காருண்ய ஸம்பாதித
ஸ்ரீமத் த்ராவிட வேதபாஷ்ய விசதக்ஞானாம்ருதாஸ்வாதகம்
வாத்ஸ்ய ஸ்ரீமதநந்த தேசிக க்ருபா ஸம்ப்ராப்த பாஷ்யாம்ருதம்
வந்தே வாதி பயங்கரார்யகுலஜம் ஹஸ்த்யத்ரி நாதம்குரும்''**

*காஞ்சி மாநகரில் எழுந்தருளியுள்ள அழகிய மணவாள ஜீயர் ஸ்வாமிகளுடைய தயையாலே ஸம்பாதிக்கப்பட்ட, மங்களகரமான தமிழ் வேதமாகிய திவ்யப்ரபந்தங்களுடைய பாஷ்யத்தில் (பேருரைகளில்) தெளிவான ஞானமாகிற அம்ருதத்தைச் சுவைக்கப்பெற்றவரும், ஸ்ரீவத்ஸ குலத்தில் தோன்றிய (ப்ரதிவாதி பயங்கரம் காதி) அநந்தாசாரிய ஸ்வாமியினுடைய கிருபையாலே ஸ்ரீபாஷ்யமாகிய அம்ருதத்தை அடையப் பெற்றவரும், ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவின் குலத்தில் உதித்தவருமான ஹஸ்த்யத்ரிநாதர் (அண்ணங்கராசாரிய ஸ்வாமி) என்கிற திருநாமத்தையுடைய ஆசாரியரை வணங்கித் துதிக்கிறேன்*

அடியேன் சிறிய ஞானத்தன மறந்தும் புறந்தொழா மாந்தரானவர்களுக்குப் பிறந்து காஞ்சியில் இளமைக் கல்வியுடன் ஆசாரிய ஸ்தோத்ர பாடங்களையும் ஸ்ரீமான் உ. வே. ஜகதாசாரிய ஸிம்மாசனாதிபதி, பத்ம விபூஷண, மஹாவித்வான காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமி (காஞ்சி ஸ்வாமி) ஸ்ரீமான் உ.வே, தி.வி. சிங்கராசாரிய ஸ்வாமி, ஸ்ரீமான் உ வே. தி. அ. ஸ்ரீசைலம் கிருஷ்ணமாசாரிய ஸ்வாமி, ஸ்ரீமான் ஸ்ரீரங்கம் பி.ப ராமானுஜாசாரிய ஸ்வாமி, ஸ்ரீமான் உ.வே. மடவிளாகம் தி. அ. கோபாலாசாரிய ஸ்வாமி ஆகியோரிடம் காஞ்சி ஸ்வாமி நிறுவிய பாடசாலையிலும், அடியேன் அத்திம்பேரிடமும் பயிலும் பேறு படைத்தேன்.

பள்ளியின் இறுதிப் படிப்பிற்குப் பிறகு சென்னையில் ஆங்கிலத் தட்டெழுத்துத் தேர்வுகளில் தேர்ந்தபின் காஞ்சியில் ஸ்ரீமணவாள மாமுனிகளின் சாத்துமுறை (6-11-67) நடந்தேறிய பின் அடியேனுடைய தமக்கையின் கணவர் (அத்திம்பேர்)

அடியேனைத் திருப்பதிக்கு (7-11-67) அழைத்து வந்து திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தின் பணியில் அமர்த்தினர் (8-11-67) பள்ளி இறுதிப் படிப்பும் தட்டெழுத்தும் தேறிய அடியேனை அவர் தம் கருணையினால் கல்லூரிக் கல்வியைத் தொடங்கும் படிச் செய்தார். இவ்வாறு அடியேன் 'ஸாத்மிக்கஸாத்மிக்க' என்னுமா போலே அடியேனுடைய கல்வியை வளர்த்துக் கொண்டேன். திவ்யப் பிரபந்தங்களில் சில பகுதிகளையும் முறையே ஸ்ரீமான் உ. வே. வித்வான் கிருஷ்ணமாசாரிய ஸ்வாமியிடமும் ஸ்ரீமான் உ.வே தி. அ. கோபாலாசாரிஸ்வாமியிடமும், திருவாய்மொழியில் சில பகுதிகளை ப்ரஹஸ்பதி ஸ்ரீமான் உ.வே. கோம்பூர் சேஷாத்ரி அய்யங்கார் ஸ்வாமியிடமும் அதிகரித்துக் கொண்டேன். பின்னர் ஸ்ரீமான் உ,வே தி.அ. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமியின் திருவடிகளில் பணிந்து வைணவ மறைப் பொருளான முமுட்சுப்படி முதலியனவும் மற்றும் திருப்பாவை திருப்பல்லாண்டு, கண்ணி நுண் சிறுத்தாம்பு அமலனாதிப்பிரான், ஸ்தோத்ரத்நம், பகவத் விஷயம் (பன்னீராயிரப்படி) முதலானவற்றின் வியாக்யானங்களைப் பல வருடங்கள் காலக்ஷேப முறையில் பயில வாய்ப்புக் கிட்டியது.

பல்கலைக் கழக இளநிலைக் கல்வி (B Com) பயிலும் போதே பலகலைக் கழகத்தில் தமிழ்த் துறையை ஏற்படுத்தியவரும் முதல் பேராசிரியருமான திருவாளர் டாக்டர் நசுப்புரெட்டியார் அவர்கள் முதுநிலைக் கல்வியில் தமிழைப் பாடமாக எடுத்துக் கொள்ளுமாறு அன்புடன் பணித்தார். அதன் விளைவாக திருவாளர் பேராசிரியர் டாக்டர் பொன். சௌரிராஜன் அவர்களின் தமிழ் நெஞ்சமும் அளப்பரிய அறிவுத் திறனும் பன்னீர்க் குப்பியால் தெளித்த பன்னீர் ஆறாகப் பெருகி முனைவர் பட்ட ஆய்வுக்கு வித்திட்டது.

ஞானாசிரியரின் அருளால் வைணவக் கட்டுரைகள் பதினைந்துக்கும் மேற்பட்டு எழுதும் வாய்ப்பும் கிட்டியது. முனைவர் பட்டத்திற்காகப் பதிவு செய்தபின் 'ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமிகளும் வைணவமும்' என்னும் தலைப்பில் ஒரு புத்தகமும் வெளியிட நேர்ந்தது காஞ்சி ஸ்வாமியின் அருளுரையில் ஆழங்கால் பட வேண்டுமென்று எனக்கு அவ்வப்போது அறிவுறுத்தி, ஊக்குவித்துத் தூண்டா விளக்காயராகிய என் தமக்கையின் கணவரான, ஆசாரிய திருவடிகளை அடைந்த ஸ்ரீமான் உ, வே. கடாம்பி ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமி, நியாய சிரோமணி அவர்கள் காஞ்சி ஸ்வாமியின் 'திவ்யார்த்த தீபிகை' என்னும் தலைப்

பைத் தேர்ந்தெடுத்து ஆய்வு செய்யுமாறு பணித்தார். இவ்வாறு பலவிதமாகத் திருத்திப் பணி கொண்ட அப்பெருந்தகையின் திருவடிகளை நெஞ்சில் நிறுத்தி வணங்குகிறேன் அவருடைய நினைவாக இந்நூலை அவருக்குச் சமர்ப்பணம் செய்கிறேன்.

இவ்வாய்வுக்கு மேற்பார்வையாளராக இருந்து தீபிகை உரை ஆய்வைச் சிறந்த முறையில் பகுத்துக் கொடுத்து வழிகாட்டியாக இருந்த பேராசிரியர் சௌரிராஜன் அவர்களுக்கு என்றென்றும் என் உளங்கனிந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்

எந்தன் ஆய்வுக்கு முன்னோடியான வைணவ மரபு நூல்களைக் காலக்ஷேப முறையில் இவ்வாய்வுக்குப் பதிவு செய்யுமுன்பே சொல்லி வைத்த இருமொழிப் புலமை நிரம்பப்பெற்ற அடியேனின் ஞானசாரிய ஸ்வாமியுமான ஸ்ரீமான் உ. வே. வித்வான் தி. அ. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமி, நியாய சிரோமணி அவர்கள் திருவாய் மொழித் திவ்வியார்த்த தீபிகையின் சீர்மைகளை அடியேனுக்கு எடுத்தியம்பித் தெளிவு பெற வேண்டிய இடங்களைச் சுட்டித் தெளிவு பிறப்பித்தும்

> குடிசெய்வ லென்னும் ஒருவற்குத் தெய்வம்
> மடிதற்றுத் தான்முந் துறும்.

என்னும் பொய்யா மொழியினைக்காட்டி அடியேனை ஊக்குவித்தும் இப்புத்தகத்திற்கு அணிந்துரை அளித்தும அருள் செய்த இப் பெருந்தகையின் திருவடிகளுக்கு என் தலையல்லால் கைம்மாறு ஏதுமறிகிலேன்.

அப்பெருந்தகையின் திருத்தம்பியரான ஸ்ரீமான் உ வே தி அ. கோபாலசாரிய ஸ்வாமி, வியாகரண சிரோமணி, அவர்கள் அருகிலேயே இருந்து ஆய்வில் ஏற்பட்ட ஐயங்களை நீக்கி, அறிவு புகட்டி யருளிய பெருமை என் நெஞ்சு நின்றும் நீங்காது. அப்பெரியாரின் திருவடிகளில் அடியேன் தலை தாழ்த்தி வணங்குகிறேன்.

ஸ்ரீமான் உ.வே. தி அ. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமி அவர்களின் சிறந்த சீடரும், அவருடைய அன்புக்கிலக்கானவரும் என் சிறந்த நெருங்கியநண்பருமான ஸ்ரீமான் டாக்டர் மா. வரத

ராஜன் அவர்கள் நீங்கா நிழல் போல் என்னுடனிருந்து என்னை விரைவு படுத்தி எல்லாவற்றாலும் ஊக்குவித்து உதவிய செய்ந் நன்றிக்கு எந்நன்றி செய்வேன்

இவ்வாய்வேடு முடியும் தருணத்தில் அழகும் அமைப்பும் பெற விரைந்துதவிய பேராசிரியர் முனைவர் இரா. குமரவேலன் சென்னைப் பல்கலைக் கழகம், அவர்களுக்கு என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீமான் உ.வே.மேதாவி டாக்டர் எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன் வடமொழித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம், (ஆசிரியர் 'கீதாசாரியன்') அவர்களும் அவருடைய துணைவியார் ஸ்ரீமதி பூமா வேங்கடகிருஷ்ணன் அவர்களும் தங்களுக்கு எவ்வளவு வேலைகளிருப்பினும் மனங்கோணாது என்னுடைய ஆய்வேடு புத்தக வடிவத்தில் வருவதற்குப் பெரிதும் உதவினர். அத்தம்பதி யார்க்கு என் நன்றி எந்றென்றும் உரித்தாகுக.

செஞ்சொற்கவி, கவிரத்ந கண்டீரவ, அபிநவமட்டர்பிரான் அபிநவ வித்யா பாஸ்கர, வித்யா ரத்ந ஸ்ரீமான் உ. வே திருக் கண்ணபுரம் ராஜகோபாலாசார்ய ஸ்வாமி, B A, L T, முன்னாள் தலைமை ஆசிரியர், இந்து உயர்நிலைப்பள்ளி, திருவல்லிக்கேணி, (சென்னை) அவர்களை அடியேன் அண்டி இந்நூலுக்கு ஓர் அறிமுகம் அல்லது அணிந்துரை அளிக்குமாறு கேட்டவுடன் எவ்விதத் தடையும் சொல்லாது தம்முடைய உடல்நலம் தளர்ந்த போதிலும் உள்ளம் தளராது இந்நூலுக்கு மதிப்புரையளித்த இப்பெரியார்க்கு என் தலையைத் தாழ்த்தி வணங்குகிறேன்.

இந்நூல் புத்தக வடிவில் வெளிவரப் பேருதவி புரிந்தவர் சிலர். அவர்களாவர், திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார், டாக்டர் எம். வி. ஜயராமன் அவர்கள் (பெங்களூர்), T. V. S. நிறுவனத்தார், மற்றும் பைசானி மாதவய்ய செட்டி தர்ம நிதி நிறுவனத்தார் ஸ்ரீகிருஷ்ண பௌண்டேஷன்ஸ் (பம்பாய்) J V கோகுல் தர்மநிதி நிறுவனத்தார், (பம்பாய்) ஸ்ரீ ஸத்ய நாராயண அகர்வால் (பம்பாய்) மற்றும் சிலர் ஆகும். அவர்கள் யாவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என் மாமனார் திருமலை திருப்பதி தேவஸ்தான தீர்த்தகாரர் ஸ்ரீமான் உ.வே.தி.அ.பு. கிருஷ்ணமாசாரிய ஸ்வாமிகளும் பல விதத்தில்

அடியேனுக்கு ஊக்கமளித்ததற்கு என் க்ருதக்ஞையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

காஞ்சி ஸ்வாமியின் அருளுக்குப் பாத்திரமான ஆன்மீகச் செம்மல் திரு இ. வ. கிருஷ்ணன் அவர்கள் (குரு அச்சகம், திருவல்லிக்கேணி) அச்சு வேலையை மிக நேர்த்தியாகச் செய்து இந்நூலை அழகுற வெளிவரச் செய்த பெருமை அவரையே சாரும். அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

இந்நூலில் என்னுடைய அத்திம்பேரின் உருவப் படத்தை (Photo) சேர்ப்பதற்குக் கொடுத்துதவிய என் தமக்கைக்கும் அவரது குடும்பத்தாருக்கும் என் நன்றி உரித்தாகுக

இந்நூலில் அடியேனுடைய அறியாமையினால் ஏற்பட்ட குற்றங்குறைகளைப் பெரியோர் அவர்கள் தம் இயற்கை இன்னருளால் பொருத்து அடியேனை மன்னித்தருள வேண்டுகுறேன்.

டாக்டர் கோ. க. அ. ரங்கராஜன்

# பொருளடக்கம்

# காஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமி - வாழ்வும் பணியும்

1.0.

காஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமியின் வாழ்வும் பணியும் என்னும் இவ்வியல், காஞ்சியும் கல்வியும், வைணவ சமயம், சுவாமியின் வாழ்வு, அவர்தம் பணி, கோயில் தொண்டு, எழுத்துப் பணி, சொற்பொழிவுப் பணி ஆகிய பொருள்களைக் கொண்டது

## 1.1. காஞ்சியும் கல்வியும்

காஞ்சி கல்வியால் சிறப்புற்றது.[1] சமயக்கல்வி அன்று தொட்டு இன்றுவரை இங்குச் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. இந்துக்களுக்குப் புனிதமான முக்தியை அளிக்கவல்ல ஏழு நகரங் களுள் ஒன்றாகக் கருதப்படுகிறது.[2]

காஞ்சி என்னும் நகரமானது காஞ்ச், காஞ்சிபுரம், காஞ்சிபுரி, கச்சி என அழைக்கப்படுகிறது. 'ஸத்யவ்ரத க்ஷேத்ரம்' எனவும் அழைப்பதுண்டு [3] காஞ்சியைக் 'கச்சி' என்றே ஆழ்வார்களும் தம் பாடங்களில் பாடியுள்ளனர்.[4] கஞ்சி, கச்சி என்பதன் மரூஉ மொழி என்றும், காஞ்சி மரங்கள் மிகுதியாக உள்ள ஊர் என்றும் கூறுவர்.[5]

ஆழ்வார்களால் பாடப்பெற்ற காஞ்சி மாநகரம் பதினெட்டு வைணவத் திருத்தலங்களைத் தன்னிடத்தே கொண்டு பக்திப் பெருக்கினை அளித்து வருகிறது.[6] பெருமாள் கோயில்' எனவும் காஞ்சி அழைக்கப்படுகிறது.[7]

## 1.2. வைணவ சமயம்

காஞ்சி மாநகரம் தலைநகரமாக விளங்கியதோடல்லாமல் பெருங்கல்விக்கூடமாகவும், சைவ வைணவ சமயங்கள் வளர்ச்சி பெற்ற இடமாகவும் விளங்கி வந்தது. முதலாழ்வார்களில் முதல் வரான பொய்கையாழ்வார், பேரறிஞராகிய வேதாந்த தேசிகர் ஆகிய பெரியோர்கள் தோன்றிய ஊர் காஞ்சி ஆகும். 'அர்த்த சாத்திரம்' என்னும் அரசியல் நீதி நூலை இயற்றிய சாணக்கி யனும், சங்கீதச் சிற்பி எனப்படும் சியாமா சாஸ்திரிகளும்,[8] திருக்குறளுக்கு மிகச்சிறந்த உரையை அமைத்த பரிமேலழகரும்[9] காஞ்சியில் தோன்றியமை குறிப்பிடத்தக்கது.

இந்தியாவில் சமயமும் தத்துவமும் ஒன்றாகவே திகழ்கின்றன. சமயமானது நல்ல நெறிகளைக் கொண்ட கூட்டம் என்பர்.[10] சிறப்பாக ஒருவராலோ அல்லது ஒரு குழுவினராலோ மக்களின் நலங்கருதிச் சமைக்கப்படுவதே சமயமாகும்.[11] மனிதனை மனிதனாகவும் தெய்வமாகவும் ஆக்கவல்லது சமயம். இந்திய சமயங்களில் பல வைதிக சமயங்களாகும்.

வேதம், உபநிடதம், கீதை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு கொள்கைகளை அமைக்கும் சமயங்களே வைதிகச் சமயங்களாகும். அவற்றுள் வேதத்தையும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களையும் இரு கண்களாகக் கொண்டவர்கள் வைணவ சமயத்தினர் ஆவர். விஷ்ணுவைத் தலைமைக் கடவுளாகக் கருதி வணங்குவது வைணவமாகும்.[12] இவ்வைணவ சமயம் காஞ்சியில் நன்கு பரவியிருந்தது. அதற்குக் காரணம் நூற்றெட்டு வைணவத் திருத்தலங்ககளுள் பதினெட்டுத் திருத்தலங்கள் இதில் அமைந்ததே எனலாம்.[13] இப்படிப்பட்ட வைணவ சமயம் நிலவிவந்த காஞ்சியில், ஸ்ரீபெரும்பூதூரில் அவதரித்த இராமானுசர் தம் இளமையில் கல்வி கற்க வந்ததும், திருக்கச்சி நம்பிகள் எனும் ஆசாரியர் சென்னைக்கருகிலுள்ள பூவிருந்தமல்லியில் அவதரித்துக் காஞ்சி வரதராசப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்யக் காஞ்சியை அடைந்ததும் குருபரம்பராப்ரபாவம் கூறும்[14] செய்திகளாம். இராமானுசர் மனத்திருந்த விசிஷ்டாத்வைத சந்தேகங்களைத் தெளிவிக்க திருக்கச்சி நம்பிகள் வாயிலாக வரதராஜப் பெருமாள் ஆறு வார்த்தைகள் அருளியதும் ஈங்குத்தான்.[15]

## 1 3. காஞ்சி அண்ணங்கராசாரிய சுவாமியின் மூதாதையர்

இவ்வண்ணம் வைணவ சமயப் பெரியார்கள் தோன்றியும் வாழ்ந்தும் புகழ்பெற்ற காஞ்சியில் சுவாமியின் மூதாதையர் கல்விக் கடலாகவும், நிதியாகவும் திகழ்ந்து விளங்கியுள்ளனர். இவ்வாறு வழிவழியாகவே ஆசார்ய குடும்பத்தில் தோன்றியவரான 'ஹஸ்திகிரி நாதரண்ணா' என்னும் ஆசாரியர் நிருஸிம்ம மிச்ரன் என்னும் மாயாவாதியை வாதப்போரில் வென்று 'பிரதிவாதி பயங்கரர்' என்னும் விருது பெற்றார். அந்த விருதே குடிப் பெயராகத் திகழ்ந்து பின்னானார்களுக்கும் வழங்கப்பட்டு வருகிறது.[16] இச்குடும்பத்தில் அண்ணா ரங்காசாரிய சுவாமி என்பவர் தோன்றிக் கல்விக் கடலாகவும் வேதாந்த வித்யா நிதியாகவும் திகழ்ந்தார்.[17]

### 1. 4. சுவாமியின் தோற்றம்

கல்விக் கடலாகத் திகழ்ந்த அண்ணா ரங்காசாரிய சுவாமிக்கு நான்கு புதல்விகளும் ஒரு மகனும் பிறந்தனர்.[18] ஒரே மகனாக விக்ருதி ஆண்டு (கி,பி.1891) பங்குனித் திங்கள் விசாகத்தன்று காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமி பிறந்தார்.[19]

### 1. 5 சுவாமியின் கல்வி

காஞ்சியில் தோன்றிய சுவாமியின் கல்வி எல்லையற்று இறுதிநாள் வரை தொடர்ந்தது. ஒருபுறம் வடமொழி, மற்றொரு புறம் தமிழ், இன்னொரு'புறம் மற்ற மொழி நூல்கள் எல்லாம் பயின்று அதனால் பெற்ற அவர்தம் ஞானம் கடல்மடை திறந்தாற் போன்றது என்பது அவர் வெளியிட்டுள்ள நூல்கள் வாயிலாக அறியப்பெறும். வடமொழி வேதாந்த, வைணவ மரபு நூல்களைத் தம் தந்தையாரிடத்தும்,[20] சாத்திர நூல்களைப் பிரதிவாதி பயங்கரம் காதி அனந்தாசாரிய சுவாமியிடத்தும்,[21] மற்றும் பாடசாலைகளிலும்[22] பயின்றார். சுவாமி தமிழ் நூல்களைத் தம் பாட்டனாரான சஷ்டி வரதாசாரியசுவாமியிடம் கற்றார். அவர் அவ்வாறு கற்ற நூல்கள் தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், கம்பராமாயணம், அஷ்டப் பிரபந்தம் ஆகியன ஆகும்.[23] இவற்றைச் சந்தை[24] சொல்லித் தம் மனத்தில் பதிய வைத்துக் கொண்டுள்ள பாங்கு தீபிகையுரையைக் காணும்போது தெள்ளிதின் புலனாகும். மற்றும், கிரந்தம், தெலுங்கு, நாகரி, ஆங்கிலம் ஆகிய எழுத்துக்களைச் சுவாமியின் மாமாதாத்தாவான இடாம்பி கிருஷ்ண சுவாமியின்பால் அதிகரித்ததைக் காணலாம்.[25] சுவாமி தம் இருபத்திரண்டாம் வயதில் வேத வாத்தியார் என அழைக்கப்படும் மாம்பள்ளம் சுதர்சனாசாரிய சுவாமியிடத்தில் வேதத்தையும், வரியடைவே அதன் பாஷ்யத்தையும் (விரிவுரையையும்) கற்றுணர்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.[26] சுவாமி தம் 'ஜீயர் தாத்தா'விடம்[27] தமிழ் நூல்களையும், வைணவ நூல்களையும் கற்றதோடல்லாமல் வை. மு. சடகோபாசாரிய சுவாமியிடத்தும் சில தமிழ்நூல்களைக் கற்றது அறியத்தத்கதாகும்.[28] பெரும்பாலும் யாப்பு தண்டி, வில்லிபாரதம் முதலியன அவரிடம் சுவாமி கற்றிருக்கக் கூடும்.

இவ்வாறு சுவாமி மேலும் பற்பல பெரியோர்களிடம் கல்வி யின்றது அவர்தம் பன்மொழிப் புலமையால் விளங்குகிறது.[29]

### 1. 6. சுவாமி பெற்ற பரிசுகள்

சுவாமி தம் இளமையில் கற்ற கல்வியின் சிறப்பால் பல பரிசுகளைப் பெற வாய்ப்புக் கிட்டியதை உணரலாம். சுவாமி தம் பன்னிரண்டாம் வயதில் கத்ய, பத்ய சுலோகங்களை இயற்றியும் அவற்றிற்குத் தமிழாக்கம் செய்தும், அப்போது தலைமைத் தேர்வாளராக இருந்த ஸ்ரீமத் திருமலை அனந்தாண்பிள்ளை புரிசை ஸ்ரீரங்காசாரிய சுவாமிகளிடம் காட்டி அவரது ஆசிபெற்றுப் பரிசும் பெற்றமை இங்குக் குறிப்பிடத்தக்கது.[30]

இவ்வாறே மற்றொரு சமயம் இவர் தேர்வு ஒன்றில் சிறப்பாக வெற்றிபெற்று மைசூர் கஸ்தூரி ரங்காசாரிய சுவாமியால் இரண்டு பவுன் தங்கப்பதக்கம் பரிசாக அளிக்கப் பெற்றார். சுவாமியின் பெற்றோர்கள் அதை அவர் கைகளுக்குக் காப்பாக அணிவித்தனர். அதனால் 'தங்கக்காப்பு அண்ணா' என்று சுவாமியை அழைத்ததும் அவர்தம் வாழ்வில் அறியத்தக்கது.[31]

### 1. 7. சுவாமியின் வாழ்வு

சுவாமி பெரும்புகழோடு வாழ்ந்த வாழ்வைப் பற்றி ஆராயும் போது 'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும் திருவள்ளுவர் வாக்கு நினைவுக்கு வருகிறது.[32] இவர்தம் வாழ்வு மூன்று குறிக்கோள்களாக அமைந்துள்ளது

ஒன்று, வைணவ சித்தாந்தத்தைச் சொற்பொழிவுகளின் வாயிலாகத் தேசமெங்கும் பரப்புவது.

இரண்டாவது, பின்புள்ளார் கற்றறிந்து நடப்பதற்காக அச்சித்தாந்தத்தை நூல் வடிவமாக எழுதி வெளியிடுவது.

மூன்றாவது, ஆழ்வார்களால் பாடப்பெற்று திருக்கோவில்கள் தோறும் வீற்றிருக்கும் இறைவன் வடிவழகில் ஈடுபடுதலும், ஆசாரியர்கள்பால் கொண்ட பேரன்பும் அவர்தம் வாழ்வின் முக்கிய அனுபவமாகக் கொள்ளத்தகும். சாதாரணமாக உலக வாழ்வில் வாழ்ச்சி என்பதும், அதனால் பெறும் இன்பம் என்பதும் வெவ்வேறாக இருக்கும். ஆனால் மேற்கூறிய மூன்று நோக்கங்களில் வாழ்வதையே வாழ்ச்சியாகக் கொண்டவர் சுவாமி எனச் சொல்வது பொருந்தும்.

### 1. 7. 1. சொற்பொழிவுப் பணி

சுவாமி வைணவ சித்தாந்தத்தைத் தேசமெங்கும் பரப்பிய பாங்கினைப் பார்க்கும்போது இவர்தம் சொல்லாற்றல் நன்கு புலப்படுகின்றது. இவ்வாறு இவர்தம் சொற்பொழிவுப் பணி சிறந்து விளங்குவதைக் காணமுடிகிறது.

பிரதிவாதி பயங்கரம் காதி அனந்தாசாரிய சுவாமிகளின் பேரருளால் 'எம்பெருமானார் வைபவம்' பற்றி முதன் முதலாகச் சுவாமி தம் பதினாறாவது வயதில் ஐதராபாத் நகரில் சொற்பொழிவாற்றினார்.[33] இவர்தம் சொற்பொழிவு உள்ளடங்கா ஆர்வத்தை வெளிக்கொணர்வது ; ஆழ்வார்கள்பால் ஆசாரியர்கள் கொண்ட அனுபவங்களை எடுத்துரைக்கும் ஆற்றல் மிக்கது. இது வளர்ந்து வளர்ந்து அமுது போன்று திரண்டது. சுவாமியின் சொற்பொழிவுகள் வைணவ சித்தாந்தத்தை எடுத்துரைக்கவும் வலியுறுத்தவும் வல்லவாறு அமைந்தன. இவ்வாறே அருளிச் செயலின் சொற்பொழிவுகளும் கேட்பவர்களின் மனத்தைக் கொள்ளை கொண்டன. சான்றாக, 1931 ஆம் ஆண்டு முதல் இராமாயணச் சொற்பொழிவு இருமுறையும், பாகவதச் சொற்பொழிவு இருமுறையும் நடைபெற்று வந்தன. பிறகு தோத்திர ரத்நம், சதுச்ச்லோகீ, திருமந்த்ரார்த்தம், ஆசாரிய இருதயம, பகவத் கீதை முதலானவற்றின் சொற்பொழிவுகளும் நடைபெற்று வந்தமை புலனாகிறது. இச்சொற்பொழிவுகள் சென்னை பக்த கலா பரிஷத் சபையாரால் நெய்யொழுக்குப் போல் நடத்தப் பெற்று 1936 ஆம் ஆண்டுக்கு முன்னமே அவை மூவாயிரத்துக்கும் மேற்பட்ட சொற்பொழிவுகளாக அச்சபையாரால் கணக்கிடப் பெற்றுள்ளன 1936 ஆம் ஆண்டு முதல் திருப்பல்லாண்டு தொடக்கமாக அருளிச் செயல்களின் சொற்பொழிவு ஆரம்பித்து பகவத் விஷயம் வரை[34] முடிவுசெய்யப் பெற்றது. பகவத் விஷயச் சாத்துமுறை அந்தந்தத் திவ்விய தேசத்தில் நடைபெற்று வந்தது குறிப்பிடத்தக்கது அதாவது திருவேங்கடப் பதிகமான 'உலகமுண்ட பெருவாயன்' என்பதன் சாத்துமுறை திருமலையிலும், திருவரங்கத்துப் பதிகமான 'கங்குலும் பகலும்' என்பதன் சாத்துமுறை திருவரங்கத்திலும் இதுபோல் சில பதிகங்களின் சாத்துமுறைகள் திருமாலிருஞ்சோலைமலை முதலான திவ்விய தேசங்களிலும் நடத்தப்பட்டு ஆண்டாள் பாரித்த 'நூறுகடா நிறைந்த அக்கார வடிசிலும்' திருமாலிருஞ் சோலைமலை எம்பெருமானுக்குச் சமர்ப்பிக்கப்பட்டமை

சுவாமியின் வாழ்க்கையில் முக்கிய அம்சங்களாகக் கருதப் படுகின்றன.[35] இவ்விதச் சொற்பொழிவுகள் 1913 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்று நிகழ்த்தப்பட்டுள்ளன. அவையெல்லாம் எழுதி அச்சிடப்பெற்றுள்ளன [36] அவ்வகைச் சொற்பொழிவுகள் சொற்பொழிவாளர்களுக்கு மிகவும் உதவுமாறு 'ஸ்ரீராமாநுஜ பூஷணம்' என்ற தலைப்பில் ஏழும், 'பக்தாம்ருதம்' என்ற தலைப் பில் நாற்பதுமாக அமைந்துள்ளன.[37] மேலும் தம்முடைய அறுபத்திரண்டு, அறுபத்துமூன்று, அறுபத்துநான்கு வருட நிறைவுகளில் நினைவுமலர்களாக அந்தந்த எண்ணிக்கைகளில் சொற்பொழிவுகள் வெளிவந்துள்ளமையும் காணத்தக்கது [38]

பகவத் விஷயச் சொற்பொழிவு போன்று ஒவ்வோராண்டும் மார்கழி மாதத்தில் திருப்பாவை உபந்யாசம் (சொற்பொழிவு) பல்லாண்டுகளாக நடைபெற்று வந்தமையும் புலனாகிறது. அச் சொற்பொழிவுகளில் ஒருநாள் 'அரையர் சேவை' என்பதும் நடை பெறும். அச்சேவையைக் கண்டு களிக்க யாவரும் வந்திருந்து ஆராவமுதத்தைப் பருகிச் செல்வர் என்பதும் சுவாமியின் சரிதையில் காணப்பெறும்.[39]

### 1, 7, 2, எழுத்துப் பணி

மேற்கூறியபடி சுவாமி ஆற்றிவந்த சொற்பொழிவுகளை நூல்வடிவமாக அமைத்ததோடு நில்லாமல் பின்புள்ளார் கற்றறிந்து நடப்பதற்காக வடமொழி தென்மொழிகளிலுள்ள வேதார்த்தங்களையும் நூல்வடிவமாக எழுதி அளித்தபெரும் உதவி எவராலும் மறத்தலரிது. பின்னிணைப்பு எண் : 1. இது பற்றியே வைணவக் கலைக்களஞ்சியமாகச் சுவாமி போற்றப் பட்டுள்ளமை புலனாகிறது [40] இப்படிப்பட்ட எழுத்துப்பணி வடமொழி, தமிழ்மொழி, தெலுங்குமொழி, இந்திமொழி ஆகிய நான்கு வகைகளில் அமைந்துள்ளது ஈங்குக் காணப் பெறுகிறது.

### 1. 7. 2. 1. வடமொழிப் பணி

தம்முடைய பதினெட்டாம் வயது தொடங்கியே வட மொழியில் கட்டுரைகளை 'மஹாசாந்த:' என்னும் புனைப் பெயர் பூண்டு எழுதி வந்தார்.[41] அவருடைய அறுபது வயது வரை 155 வடமொழி நூல்களை எழுதியுள்ளார்.[42] இவற்றில் பாலகோபதேச மாலிகா, தர்மவாதம் என்ற வடமொழி நூல்கள்

1908 ஆம் ஆண்டே அச்சிடப் பெற்றன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

### 1. 7. 2. 2. தமிழ் மொழிப் பணி

சுவாமி வடமொழியில் வல்லுநராகத் திகழ்ந்ததோடல்லாமல் தமிழ்மொழியிலும் யாப்பறி புலமைபெற்று இருபதாம் வயதிலேயே தமிழ் நூல்களையும் எழுத ஆரம்பித்தார். அவை செந்தமிழ் நூல்களாகவும் மணிப்பிரவாள நூல்களாகவும் தமிழ்நூற் பகுதியில் 266 நூல்கள் இடம்பெற்றுள்ளன [43] இவை பன்னிரண்டு துறைகளில் அமைந்துள்ளன.

### 1. 7. 2. 3. தெலுங்கு மொழிப் பணி

இவ்வாறே தெலுங்கு மொழியிலும் தமது நாற்பதாவது வயது முதல் நூல்கள் எழுதியுள்ளார். தெலுங்கு மொழியில் நாற்பத்தேழு நூல்கள் வெளிவந்துள்ளன.[44]

### 1. 7. 2 4. இந்தி மொழிப் பணி

இந்தி மொழியிலும் தமது நாற்பதாவது வயது தொடக்கத்திலிருந்து எட்டு நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளது விளங்கும்.[45]

இப்படி நான்கு மொழிகளிலும் எளிமையாகப் பேசவும், எழுதவும் தமக்குச் சக்தியில்லாத காலமே தம் நினைவுக்கு வரவில்லை என்று அவர் எடுத்துக்காட்டுவது அவர்தம் பன்மொழிப் புலமையை உணர்த்துகிறது.[46]

### 1. 8. சுவாமி வாழ்வின்கண் சொந்த அனுபவங்கள்

சுவாமியின் வாழ்வில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக் காணும்போது தன்னிகரில்லாச் சிறப்பையும் இறைவனுடைய அனுபவத்தில் திளைத்த உயர்வையும் காணலாம் எடுத்துக்காட்டாக, வானமாமலை சின்ன கலியன் சுவாமி என்னும் சீயர் யாத்திரையாகத் திருநின்றவூருக்கு வந்தபோது, சுவாமி வடமொழிப் பத்திரிகையில் எழுதிய கத்ய, பத்ய சுவையறிந்து, ரகசிய நூல்களிலிருந்து ஒரு நூற்பாவையும், திவ்வியப் பிரபந்தத்திலிருந்து இரு பாசுரங்களையும் வடமொழிச் சுலோகமாக எழுதுமாறு பணித்தார் சுவாமியும் எழுதிக்காட்டி அதனால் ஏற்பட்ட மகிழ்ச்சியைத் தம்முடைய வாழ்வில் உயர்ந்ததாகக் கருதுவர்.[44அ]

சுவாமி தம் வாழ்நாளில் முக்கிய குறிக்கோளாகக் கொண்டதைத் 'தென்னாசாரியர் கருவிலே ஊறிக் கிடப்பதாகும்

என்பர். அதாவது 'நெறிகாட்டி நீக்குதியோ' [45]அ என்ற நம்மாழ்வார் திருவாக்குப்படித் தன்னைவிட்டு நீங்குவதற்காக இறைவன் காட்டிய வழிகளிலே நாம் கிடந்து துவளலாகாது என்பர். சான்றாக,

''காம்பறத் தலைசிரைத்து உன்கடைத் தலையிருந்து வாழும்
சோம்பரை யுகத்திபோலும் சூழ்புன லரங்கத்தம்மானே'' [46]அ

என்று தொண்டரடிப் பொடியாழ்வார் அருளியதை உறுதிப் பாடாகக் கொள்ளும்படிக் கூறுவர் [47]

### 1. 8 1 ஆசாரியர்பால் அனுபவம்

ஆழ்வார் திருவுள்ளமறிந்து உரைவழங்கிய பூருவாசாரியர் களில் கடைக்குட்டியான மணவாள மாமுனிகள் திறத்தும், அவர்தம் உரைத்திறத்தும் சுவாமிக்கு இருந்த ஈடுபாடு ஒப்பற்றதாகும் அவ்வீடுபாட்டைக் கீழே காணலாம்

சுவாமி தம் அறியாக் காலத்துள்ளே அன்பு செய்வித்தது ஆசாரிய இருதய நூலாகும். இந்நூலினை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இயற்றினார். இந்நூலுக்கு மணவாள மாமுனிகள் நூலாசிரியரின் திருவுள்ளக் கருத்தைப் பின்பற்றி உரையிட்டருளியுள்ளார். மாமுனிகள் தம் உரையில் ஆழ்ந்த பொருள்களைக்காட்டியுள்ளார் இப்படிப்பட்ட ஆழ்பொருளைச் சுவாமி கசடறக் கற்றுத் தெளிந்து அதனால் ஏற்பட்ட அனுபவத் தால் யாவரும் எளிதில் அறியுமாறு 'ஆசாரிய இருதயப் பதவுரை' என்ற நூலை 1951ஆம் ஆண்டில் வெளியிட்டார். இந்நூல் நான்கு பிரிவுகளாக அமைந்துள்ளது. இதில் பதப்பொருளைக் காட்டி, கொண்டுகூட்டு முறை, தெளிந்த கருத்து ஆகியன கொண்டு இந்நூல் மிளிர்கிறது.[48]

'பச்சை மாமலைபோல் மேனி பவளவாய்க் கமலச் செங்கண்ண'னைக்[49] கண்டு களிக்கும் மானிடப் பிறப்பு அரிதிலும் அரிது. அத்தகு பிறப்பில் அவனைப் பற்றிய திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களைக் கற்றல் இன்னும் அரிது. அவ்வாறு மானிடப் பிறப்புப் பிறந்து ஆழ்வார் அருளிச் செயல்களை அறிந்து வைத்தும் மணவாள மாமுனிகள்தம் பெருந்தகு தெய்வத் திருவாழ்வை அறியாது வாழ்தல் கொடிதினும் கொடிது. அத்தகு கொடுமைக்கு ஆளானோர் பலர். அவர்கட்கெல்லாம் மாமுனிகள் தம் வாழ்வைச் சொல்லியும் எழுதியும் வழங்கிய வள்ளல் சுவாமி ஆவர்.[50]

இவ்வாறு மாமுனிகள்பால் கொண்ட ஆழ்ந்த அன்பைத் தெரிவிக்கும் வகையில் அவர் தாம் அருளிய நான்கு இரகசிய வியாக்கியானங்களில் ஆளவந்தார் முதலாக வாதிகேசரி அழகிய மணவாளச் சீயரீறாகவுள்ள முன்னோர்களின் ஸ்ரீ ஸூக்திகளை மேற்கோள்களாக எடுத்துக்காட்டியிருக்கும் இடங்களின் விவரணத்தைத் திரட்டி "மாமுனிவன் மேற்கோள் விளக்கு" என்ற சிறுநூலாக வெளியிட்டது அவர்தம் பெருமையை எடுத்துக் காட்டுவதாகும்.

### 1. 8. 2. கோவில் தொண்டு

சுவாமியின் எழுத்துப்பணி மூலமாகத் திவ்வியப் பிரபந்தங்களுக்கு அமைத்த தீபிகை உரை, குறிப்பாகத் திருவாய்மொழிக்கமைந்த உரை பெரும்பாலும் நம்பிள்ளையின் திருவுள்ளத்தைப் பின் சென்று அமைந்துள்ளமையால் இவர்க்கு நம்பிள்ளையின் பாலுள்ள ஈடுபாடு புலனாகின்றது. மேலும் இதனை அரண் செய்யும் வகையில் அவரருளிய திருவாய்மொழித் தீபிகை உரையில் "குழாங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்"[51] என்ற தொடருக்கு நம்பிள்ளை அருளிச்செய்த ஒரு திவ்வியமான உரைத் தொடரை எடுத்துக்காட்டுகிறார்.

> "அவன் பக்கலிலே நிக்ஷிப்தபரராயிருக்கிற
> நீங்கள் நால்வரிருவர் இங்கிருக்கும் நாலு
> நாளும் த்யாஜ்யமான அர்த்தகாமங்களைப்
> பற்றிச் சீறுபாறென்னாதே நம்பெரிய
> குழாத்திலே போய்ப்புகுமளவும் ஒரு மிடறாய்
> அநுபவிக்கப் பாருங்கோள்"[52]

என்னும் இத்தொடர், "ஸ்ரீவைஷ்ணவர்களின் ஹ்ருதயத்திலே எப்போதும் குடிகொண்டிருக்கத்தக்கது" என்று சுவாமி இடித்துரைக்கிறார். இதனால் சுவாமிக்கு நம்பிள்ளைபாலுள்ள அளப்பரிய அவாவை நினைத்தல் தகும். மேலும் தீபிகை உரையில் ஆங்காங்கு நம்பிள்ளையின் உரைத்தொடரை அனுபவித்துக் காட்டியதை ஆராயும்போதும் நம்பிள்ளையின்பால் சுவாமிக்குள்ள பேரன்பு காணப்பெறுகிறது.

சான்றாக

> "நம் ஆசாரியர்கள் ஆழ்வாரருளிச் செயல்களின்
> ஆழ்பொருள்களைத் தாங்கள் அறிகிறபுடையும்,
> அப்பொருள்களை வெளியிடுவதற்கு அவர்கள்
> பங்க்திகளமைக்கிற அழகும்! அநுபவிக்க அநுபவிக்க
> நீராயுருகு மென்னாவி. அந்த திவ்ய மதுர

**பங்க்திகளின் சுவையை யநுபவிப்பாரில்லையே**
**யென்னுமழுகையோடே இப்பாட்டினுரையைத்**
**தலைக்கட்டி மேலே செல்லா நின்றேன்''[53]**

என்கிறார் சுவாமி. இப்படி ஆசார்யர்களின் உரைத்திறனை அனுபவித்ததனால் அவர்கள் மீது ஏற்பட்ட அவா குறிப்பாக, நம்பிள்ளைபால் ஏற்பட்ட அவா உந்தவுந்த அதன் விளைவாகச் சுவாமியின் மனமானது நம்பிள்ளைக்குக் கோவில் கட்டும் பணியிலே ஈடுபட்டது.

நம்பிள்ளைக்குப் பிறகு ஆசாரியன்-சீடன், தந்தை-மகன் என்கிற முறையில் வழிவழியாக உரைத்துவந்த ஈட்டை மணவாள மாமுனிகளுக்குப் பிறகு நாடு நகரங்களும் நன்கறியச் செய்த சுவாமி இத்தகு அவாவைக் கொண்டு காஞ்சியில் பேரருளாளன் திருவருளினாலும் ஆசாரியர்களின் ஆசிகளினாலும் தேவப் பெருமாள் கோவிலின் முன்பே 1936 ஆம் ஆண்டு நம்பிள்ளைக்குக் கோவில் கட்டும் பணியை நிறைவேற்றினார்.[54]

இவ்வாறு சிந்தையில் எண்ணியதைச் சொல்லாலும், சொல்லியதைச் செய்கையாலும் சுவாமிகள் செய்து காட்டியதை நோக்கும்போது அவர்தம் வாழ்வில் ஒருபடிப்பட்ட மனப்பான்மையை உடையவர் என்பது நன்கு விளங்கும்.

இவர் நம்பிள்ளைக்குக் கோயில் கட்டியதோடல்லாமல் அந்நாள் தொடங்கி இந்நாள்வரை நித்திய திருவாராதனம், விழாக் காலப் பூசை ஆகியவற்றைச் செய்யத் தக்க ஏற்பாடுகளையும் செய்துள்ளார்.

அருளிச் செயலின் உறைப்பைக் காட்டும் வகையில் தீபிகை உரையை எழுதி அதனால் விளைந்த ஆசாரிய பக்திக்கு எடுத்துக் காட்டாக நம்பிள்ளையை எழுந்தருளப் பண்ணியதோடுகூட நம்பிள்ளையின் முக்கிய சீடர்களான வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை என்னும் ஆசாரியர்களையும் எழுந்தருளப் பண்ணினார்.[55]

### 1.8.3. திவ்யதேச அநுபவம்

இவ்வாறு கோவில் பணியில் சிறந்து விளங்கியதுபோல் கோவில் அத்யாபக வேதபாராயண கைங்கர்யம் செய்தலிலும் ஊற்றமுடையவராய்த் திகழ்ந்தவர் சுவாமி.[56] குறிப்பாக, காஞ்சி

தேவப்பெருமாள் கோவிலில் நடைபெறும் அருளிச்செயல் கோஷ்டியை என்றும் விடாதவராய்ச் சென்றுவந்தவர் சுவாமி.[57] ஸ்ரீபெரும்பூதூரில் இராமானுசர் உற்சவத்தின்போது பத்துநாட்களும்அங்கேயே தங்கியிருந்து வேதபாராயண கைங்கர்யத்தைச் சிறப்புறச் செய்தமை அறியலாம்.[58]

இப்படி உபய கோஷ்டியிலும் கலந்து அனுபவித்து வாழும் நாளை வாழ்ச்சியாகக் கொண்டவர் சுவாமி. இத்தகு வாழ்வை வாழ்ச்சியாகக் கொண்ட சுவாமி தமக்கு முக்கியப் பேறாகக் கருதுவது மானிடப் பிறவி பெற்று வேத, வேதாந்த, வேதாங்கங்களை ஓதி உணர்வதற்கு உறுப்பாக வைணவ குலத்தில் பிறக்கப் பெற்றதே ஆகும். மேலும் இறைவனது இயல்பு, வடிவு, குணம், விபூதி, திருவிளையாடல்கள் இவற்றை அருளிச்செயல் மூலமாகவும், அவற்றிற்கமைந்த உரைகள் மூலமாகவும் கசடறக் கற்பதனால் விளைந்த மகிழ்ச்சி வைகுந்தத்திலும் கிட்டாது என்பது ஆகும். அவர் அடைந்த பெருமகிழ்ச்சியில் முக்கியமாக இரண்டைக் கருதுகிறார்:

1. இறைவனது குழாங்களிலும், இறைவனடியார் குழாங்களிலும் கலந்துகொண்டு இதனால் பெறும் பேரின்பம் ஒன்று.

2. இந்தப் பேரின்பத்தைப் பெறத் தாம் பாக்கியம் பெற்றமையால் உண்டாகும் மகிழ்ச்சி மற்றொன்று.[59]

இவ்வனுபவங்களைப் பல ரசிகர்களும் அனுபவிக்கும்படிக் 'கங்குலும் பகலும் கண்துயிலறி' யாமல் இருந்தபோது நெஞ்சிலோடும் அனுபவங்களைக் காட்டிச் செல்வர்.[60]

இவ்வாறு சுவாமி தம் வாழ்வில் மேற்கொண்ட ஒவ்வொரு பணியின் நிறைவைத் தாம் வாழ்ந்த நாள்வரை கண்டவர். சுவாமியின் நிறைந்த வாழ்வை நினைக்கும்போது திருவள்ளுவரின் பொய்யாமொழி நினைத்தற்பாலது.[61]

### 1. 8. 4. சுவாமியின் வாழ்வில் அரிய நிகழ்ச்சிகள்

சிறுபிராயத்தில் கசடறக் கற்ற சுவாமியின் வாழ்வில் தொடர்ந்து அரிய நிகழ்ச்சிகள் பல நடந்துள்ளமை அறியலாம். சான்றாக, சென்னை, திருவல்லிக்கேணி வேத வேதாந்த வர்த்திநீ சபையில் திவ்வியப் பிரபந்தங்களின் மூலத்திலும், அவற்றிற்கமைந்த உரைகளிலும் தேர்வுகொடுத்து 'சூர்க்கத்திப் பரீட்சை,யில் தேர்ச்சியும் கண்டார்.[62]

## 1 9. சிறந்த நூல் - திவ்வியார்த்த தீபிகை

மேற்கூறியபடியே பல நோக்கில் சுவாமியின் எழுத்துப்பணி களைக் காணும்போது சிறந்த நூலாகத் திகழ்வது நாலாயிரத் துக்கும் அமைந்த 'திவ்வியப் பிரபந்த திவ்வியார்த்த தீபிகை' ஆகும்.

நாதமுனிகள் தொடக்கமான பூருவாசாரியர்கள் இல்லை யென்றால் அருளிச்செயலின் சீர்மையை அறிவாரில்லை. அந்த அருளிச்செயல்கள் இல்லையெனில் அவற்றை அருளிய ஆழ்வார் களின் சீர்மையை உணர வழியில்லை. இதனை அரண்செய்யும் விதத்தில் மாமுனிகளின் பாசுரம் அமைந்துள்ளது.[63] மேலும் ஆழ்வார்களின் ஏற்றத்தையும், அருளிச்செயல்களின் ஏற்றத் தையும், அவற்றிக்கு ஆசாரியர்கள் உரைத்த உரைகளின் ஏற்றத் தையும் உலகமறியச் சொல்லவேண்டுமென்ற மாமுனிகளின் மனத்திற்கு ஏற்பச் சுவாமி திவ்வியப் பிரபந்தம் அனைத்திற்கும் தீபிகை உரையை அமைத்து உணர்த்தியது அறியற்பாலதாகும்.[64] இதுபற்றியே திவ்வியார்த்த தீபிகை சிறந்த நூல் எனக் கருதப் பொருந்தும்.

இப்படிப்பட்ட சிறந்த நூலான திவ்வியார்த்த தீபிகை முதன் முதலாக 1927 ஆம் ஆண்டு இராமானுச நூற்றந்தாதிக்கு எழுதப்பட்டுப் பின்னர் முதலாயிரம் தொடக்கமாக வளர்ச்சி யடைந்து திருவாய்மொழிக்குப் பல பதிப்புக்கள் வெளியிடப் பட்டன. அவற்றுள் 1933 ஆம் ஆண்டு முதற்பதிப்பு வெளி வந்தது. பிறகு ஐந்து பதிப்புக்கள் வந்திருப்பினும் 1933 ஆம் ஆண்டுப் பதிப்பும், 1953 ஆம் ஆண்டுப் பதிப்புமே நூல் நிலையங்களில் காணப்படுகின்றன.

### முடிபுகள்

1. அண்ணங்கராசாரிய சுவாமி தோன்றிய காஞ்சி 'வாலறிவன் நற்றாள் தொழும்' சமயக்கல்வியில் சிறந்த இடம் என்பது நிறுவப்பட்டது.

2. அங்கு வைணவச் சான்றோர் பலர் தோன்றி விசிஷ்டாத் வைத தத்துவத்தையும் ஆழ்வார் அருளிச்செயல்களையும் போற்றி வந்தது குறிப்பிடத்தக்கது;

3. அவ்வாறு போற்றிவந்துள்ள வைணவச் சான்றோர் குடியில் அண்ணங்கராசாரிய சுவாமி தோன்றினார்.

4 சுவாமிக்கு அடைமொழியாக வழங்கப்பெறும் பிரதிவாதி பயங்கரம் என்பது இவர்தம் குடும்பத்தில் மூலபுருஷராகத் தோன்றிய ஹஸ்தகிரி நாதரண்ணா, நிருஸிம்ம மிச்ரன் என்ற மாயாவாதியை வென்று பெற்ற விருதாகும்.

5 சுவாமி இளமையிலிருந்தே தமிழ், வடமொழிகளில மைந்த திவ்வியப் பிரபந்தங்களையும் வேத,வேதாந்தங்களையும் சிறப்பாகக் கற்றுப் பெரியோர் போற்றுதலுக்குஉரியோர் ஆனது, பின்பற்றுவதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

6. தமிழ், வடமொழிகளல்லாமல் மேலும் தெலுங்கு, இந்தி முதலிய மொழிகளிலும் எடுத்துரைக்கவும், இனிதுஎழுதவும் கூரிய ஆற்றலை அவர்தம் பன்மொழிப் புலமை புலப்படுத்துகிறது.

7. இவர்தம் வாழ்வு வைணவ சித்தாந்தத்தை, பக்தி நெறியைச் சொல்லிப் பரப்புதல், எழுதிப்பரப்புதல் திவ்ய தேசங்கள் தோறும் வீற்றிருக்கும் இறைவன்பால் ஈடுபட்டு ஆசாரியர்கள்பால் அன்பு பூணல் ஆகிய மூன்றுநெறிகளில் அமைந்துள்ளது

8. இந்த நெறிகளை இந்திய, உலகமொழிகளில் தெளிவு செய்த திறத்தினர் சுவாமி ஒருவரே ஆவர்.

9 பூருவாசாரியர்களின், சிறப்பாக நம்பிள்ளையின் உரைப் போக்கை நெஞ்சிற்கொண்டு இவர் திவ்'வியார்த்த தீபிகை அருளினது குறிப்பிடத்தக்கது.

10. அருளிச் செயல்களில் தெளிவுபெறத் தமக்குப் பெரிதும் உதவிய நம்பிள்ளைக்குக் கோயிலெடுத்து நித்ய பூசைக்கு ஏற்பாடு செய்து, தம் ஆசாரிய பத்தியை நிலைநாட்டினது அவரது வாழ்வின் நிறைவைப் புலப்படுத்துகிறது.

11. தொடர்ந்து உபயகோஷ்டியில் கலந்துகொண்டு அடியார் திருக்கூட்டத்தில் இடம்பெற்று இறைவனை வழிபடு தலையே வாழ்ச்சியாகக் கொண்டிருந்தார்.

12 இந்த வாழ்ச்சிக்கு வெளியீடாகவும், நம்பிள்ளைபால் கொண்ட ஈடுபாட்டின் அடையாளமாகவும் பேதையராகிய பின்னோரும் அருளிச்செயலில் ஞானம்பெற்று உய்யவேண்டு மென்ற உள்ளக்கிடக்கையால் திவ்வியார்த்த தீபிகையை இவர் அருளிச்செய்தார் என்பது இந்த இயலில் கூறப்பெற்றது.

## இயல்-1

### அடிக்குறிப்புகள்

1. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை**, 1950, ப.6
2. "அயோத்யா மதுரா மாயா காசி காஞ்சீ
   ஹ்வந்திகா புரீத்வார வதீ சைவ ஸப்தைதா
   மோக்ஷ தாயிகா:"

   Students Sanskrit English Dict. V.S. Apte 1891, P 142
3. **ஸ்ரீவாதி பீகரார்ய ஸூக்தி மாலிகா,** பிரதிவாதி பயங்கரம் அண்ணா கைங்கர்ய சபை, சின்னகாஞ்சிபுரம், 1984, ப.2
4. (அ) "**கச்சிக்** கிடந்தவனூர்", **பெரிய திரு**. 2.6.5
   (ஆ) "நிறைந்த கச்சி யூரகத்தாய்", **திருக்குறுந்**. 8
5. மோசூர் கந்தசாமி முதலியார் (உரை), **கச்சிக்கலம்பகம்** கழகம், சென்னை, 1964, ப.1
6. **திருநெடுந்தாண்டகம்**, 8, 13, 14 (18 திவ்விய தேசங்கள்)
7. சுவாமி
8. **Guide to Kanchi** Dr. M K. Srinivasan 1967 ,P4
9. மு. இராகவய்யங்கார், **சாஸனத் தமிழ்க்கவி சரிதம்,** ப.116
10. எஸ். கிருஷ்ணவேணி அம்மையார், **செம்பொருள், முமுட்சுப்படி தோற்றுவாய்**, தி.தி.தே, வெளியீடு, திருப்பதி,1952
11. மா. வரதராஜன், '**பன்னீராயிரப்படி-ஓர்ஆய்வு**'. 1989, ப 85
12. பொன். சௌரிராசன், '**சித்திரச்சிலம்பு**', பாரி நிலையம் சென்னை, ப.100
13. **திருநெடுந்தாண்டகம்,** 8.13,14
14. எஸ் கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப. ஆ,), **குருபரம்பராப்ரபாவம்** 1975, பக் 141,165
15. மேலது, பக் 167-168
16. **ஸ்ரீவாதி பீகரார்ய ஸூக்திமாலிகா,** சபை வெளியீடு, 1950 ப.8
17. சுவாமி, **தானே எழுதிய தன் சரிதை,** 1950, ப.3

18. ஸ்ரீமான் தி.அ. கிருஷ்ணமாசார்ய சுவாமி, திருப்பதி (நேர்முகப்பேட்டி), 1981
19. எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன், கீதாசார்யன்-30, மார்ச்சு 1981
20 சுவாமி, **தானே எழுதிய தன் சரிதை**, பக்.6,11, 1950
21 மேலது, பக்.11.28.30
22. மேலது, பக்.10,11
23 மேலது, ப.31
24. சந்தை[2]-வேதம் முதலியவற்றை ஆசான் சொல்ல மாணாக்கன் இரண்டு அல்லது மூன்று முறை அவற்றைத் திரும்பச்சொல்வது
**Tamil Lexicon** Part I. Vol.III, Univ of Madras, 1928
25. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை** ப.6
26. மேலது, பக் 98-99
27. சுவாமியின் பாட்டனாரான சஷ்டி வரதாசாரிய சுவாமி துறவறம் பூண்டு, பின்னர் சுவாமியால் 'ஜீயர் தாத்தா' என அழைக்கப்பட்டார். மேலது, பக்.3,31
28. மேலது ப.76
29 மேலது, பக்.10,11,13,14,20,21,22,23
30. மேலது, ப.9
31. மேலது, பக்.12-13
32 ''தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலிற் றோன்றாமை நன்று'' (குறள் 236)
33. சுவாமி, **தானே எழுதிய தன் சரிதை** ப.30
34 பகவத் விஷயம்-பகவத் விஷயமென்பது, ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தம், திருவாசிரியம் பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு திவ்வியப் பிரபந்தங் களில் பிரதானமான திருவாய்மொழிக் கும் அதன் வியாக்கியானங்களுக்கும் தொன்றுதொட்டு வழங்கிவரும் திரு நாமமாகும்.

-**யதிராஜபாதுகா**, 83, தி.அ. கிருஷ்ணமா சாரிய சுவாமி 1988, ப.25

35. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை**, பக்.159-178.
36. ஸ்ரீராமாநுஜன்-311, ப 6 (ஸ்ரீ.அ.அனந்தாழ்வான்)
37. மேலது, பக்.346-348
38. மேலது, பக். 350-361
39. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை**, ப 239
40. **The Hindu** Madras Ed 22-6-1983 P5
41. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை**, ப. 276
42. மேலது, பக்.297-338 (பின்னிணைப்பு-2)
43. மேலது, பக்.292-296 ( " 3)
44. மேலது, பக்.291-292 ( " 4)
45. மேலது, ப.291 ( " 5)
46. கீதாசார்யன்-151, 1991, ப 31, பத்தி 71
44அ. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை** பகுதி 1, ப 85
45அ. **பெரிய திருவந்தாதி**, 6
46அ. **திருமாலை**, 38
47. ஸ்ரீராமாநுஜன் பக் 399-402
48. சுவாமி, ஆசார்ய ஹ்ருதயப் பதவுரை, சஷ்டியப்த பூர்த்தி 8ஆவது மலர், 1951
49. **திருமாலை**, 2
50. **ஸ்ரீராமாநுஜன்** 372, பக் 12-13
51 2-3-11 பாசுரம்
52. 2-3-11, 36 படி, தீபிகை
54 சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை**, பகுதி. 4, ப 258
55. மேலது, ப.261
56. நேரில் கண்டது ஸ்ரீமான் உ.வே. பி.ப ரங்கநாதசாரிய சுவாமி காஞ்சீ
57. சதாப்தி மஹோத்ஸவ ஆஹ்வாந பத்ரிகை, பி. ப. ரங்கநாதாசாரியசுவாமி, ப்ரமோத பங்குனி விசாகம் 1991.
58. ஸ்ரீபெரும்பூதூர் சதாப்தி பத்திரிகை, 20 4—91
59. **ஸ்ரீராமாநுஜன்** 378—380, பக் 2–6
60. மேலது 393—394, பக் 2-3
61. "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்" (குறள் 50)
62. சுவாமி, **தானே எழுதிய தன்சரிதை**, ப 81
63. **உபதேச ரத்தின மாலை**, 36
64. மேலது, 34

இயல்—2

# சுவாமியின் திவ்யார்த்த தீபிகை-திருவாய்மொழித் தீபிகை

2.0

"சுவாமியின் திவ்யார்த்த தீபிகை—திருவாய்மொழித் தீபிகை" என்னும் இந்த இயல் அவரருளிய திவ்யார்த்த தீபிகையின் தோற்றம், பெயர்க் காரணம், தொடர் விளக்கம், வளர்ச்சி-நிறைவு, தீபிகையின் அமைப்பு, திருவாய் மொழியின் உரைகள், திருவாய்மொழித் தீபிகை, ஆழ்வார் திருநகரி-திருவாய்மொழியின் பெயர்க் காரணம் என்னும் ஒன்பதுநோக்கில் விரிவாக இங்கு விளக்கம் தரக் காணலாம்,

பதினான்காம் நூற்றாண்டிற்குப் பிறகு திருவாய்மொழி ஈரின் உரைகளைக் கொண்டே பரப்பப்பட்டு வந்துள்ளது. புதியதாக உரை எழவில்லை. பொதுவாக நாலாயிரத்துக்கும் உரை எழவில்லை எனலாம் அறிவிற்சிறந்தோர் தோன்றினும் முன்னோர்கள் எழுதிய உரைகளைப் போற்றுதலே நன்மை பயக்குமென இருந்து வந்தனர்.

கல்வியின் தரம் படிப்படியாகக் குறைந்து வந்தது. அக்காலவைணவப் பெரியார்கள் தாம் கற்ற கலைகள் அனைத்தையும் வழங்கிச் சென்றதாகவும், அப்பெரியார்களின் இதய ஒலிகள் பலப் பல வகையாய் உரைகளின் வாயிலாகவும் அவர்களின் புலமை நலந்தோன்ற வெளிப்பட்டதாகவும் கூறுவர்.[1] ஆனால் அதற்கு மாறாகப் பிற்பட்டோர் ஓரோர் துறையில் மட்டும் புலமை பெற்றிருந்தனர். இருமொழிப் புலமை பெற்றவர்கள் மிகவும் குறைந்து வரலாயினர் அதன் காரணமாக ஆழ்வார்களின் அருளிச்செயலில் ஆழ்ந்த கருத்தினை ஆராய வழியில்லாது போயிற்று.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் நாலாயிரத் திவ்யப் பிரபந்த உரைகளுக்கு மறுமலர்ச்சி தோன்றக் காரணமாயிருந்தவர் காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய சுவாமி ஆவர் எனப் புலனாகிறது. இக்காலத்து மக்களின் நிலைமையினைக் கண்டும், முன்னோர்களின் அரிய உரைகளை இழக்க வேண்டி வருவதை மனத்திற் கொண்டும தெளிவாகவும நுட்பமாகவும் அறியும் வகையில் நாலாயிரம பாசுரங்கட்கும்

சுவாமி உரை எழுதியுள்ளார். அவ்வுரையே 'திவ்யார்த்த தீபிகை' என வழங்கப்படுகிறது.

சுவாமி முதன்முதலாக எல்லார்க்கும் இன்பம் பயக்கும் எளிய நடையில இராமாநுச நூற்றந்தாதிக்கு ஒருரையைத் தம் பத்தொன்பதாம் வயதில் எழுதினார்[2] பின்னும் 1914 ஆவது ஆண்டு முதலாயிரத்திற்கு உரையெழுதி நாற்பது பக்கங்கள் கொண்ட 'ஸ்ரீராமாநுஜன்' என்னும் மாதப் பத்திரிகையில் வெளியிட்டார். இவ்வாறு எழுதிய உரைக்கு அக்காலத்தில் எதிர்ப்புகள் எழுந்தன. குறிப்பாக அச்சமயத்தில் வாழ்ந்து வந்த வானமாமலை மடத்துச்சின்ன கலியன் சுவாமி என்பார் தீபிகை மாதப் பத்திரிகை வெளிவர மறுப்புத் தெரிவித்தார். இதனால் முன்னோர்களின் உரைகள் அடங்கிவிடும் என்று எண்ணி நிறுத்த முயன்றார். பின்னர் அந்தச் சுவாமியே தீபிகையின் தீந்தமிழின் நயத்தையும், சுவாமி மேன்மையான பொருளைச் சாதாரண மக்கட்கும் பண்டிதர்களுக்கும் புரியுமாறு எடுத்துக் காட்டுவதையும் அறிந்து அப்பத்திரிகையைத் தொடர்ந்து வெளியிடுமாறு சொன்னார்.

திவ்யார்த்த தீபிகையின் தோற்றம் என்று ஆராயும்போது சுவாமியினுடைய பரந்த அறிவுத்திறன் அவர் அருளிய தீபிகைக்கு அமைந்த முகவுரை மூலம் அறியப்படுகிறது. பின்னோர்களின் பேதைமையின் பெருமையால் முன்னோர் உரைப் பொருளின்கருத்து சிறிதும் விளங்காது எனத் தாம் எண்ணி இந்த உரையை அமைத்ததாகக் கூறுவர் சுவாமி.[3] இந்தச் சூழ்நிலையில் திவ்யார்த்த தீபிகையின் தோற்றம் இன்றியமையாததாயிற்று

## 2-2. திவ்யார்த்த தீபிகை—பெயர்க்காரணம்—தொடர் விளக்கம்—வளர்ச்சி—நிறைவு

திவ்யார்த்த தீபிகையின் பெயர்க்காரணத்தை அடுத்து ஆராயலாம். அவ்வாறு ஆராயும் போது 'தீபிகை' என்னும சொல்லின் விளக்கத்தையும, 'அர்த்த தீபிகை' என்னும் சொறக ளின் விளக்கத்தையும், 'திவ்யார்த்த தீபிகை' என்னும் தொட ரின் விளக்கதையும் அறிய முடிகிறது. எனவே, 'தீபிகை' என்னும் பெயர்க காரணத்தைக் காணுமபோது, தீபிகை என்பது தமிழ் மொழியில் வடமொழிக் கலப்புக் காரணமாக ஒரு திரிபுச சொல லாக அமைந்துள்ளது. 'தீபிகா' என்னும் வடசொல் 'ஐ' விகுதி பெற்றத 'தீபிகை' என்று தமிழில் வழங்கப்பெறுகிறது. 'தீபிகை'

என்னும் சொல் நன்னூல் நூற்பாவிற்கேற்பக் கருவிப் பொருளை உணர்த்துவதாக உள்ளது.[4] இருளிலுள்ள பொருளைக்காண்பதற்கு விளக்குத் தேவைப்படுவது போல அறிவின்மையாகிய இருளினைப் போக்கி ஞானமாகிய ஒளியைக் காண தீபிகை என்னும் விளக்குத் தேவைப்படுகிறது. சுவாமி கொடுத்துள்ள 'திவ்வியார்த்த தீபிகை' என்ற தலைப்பிலே தீபிகை என்னும் விளக்காகக் கொண்டு பார்க்கப்படும் பொருளான ஆழ்வார்களின் சொற்கள், அதற்கு ஆசாரியர்கள் வழங்கும் பொருள்கள், இவ்விரண்டிற்குமுள்ள தொடர்பு ஆகியவற்றை எடுத்துக் காட்டுவதாக அமைந்த பொருள் பற்றி 'அர்த்த தீபிகை' எனப்பட்டது. இப்படி ஆழ்வாரின் சொற்களுக்கும், ஆசாரியர் வழங்கும் பொருள்களுக்கும் காரணமான, உண்மையான, திவ்வியமான இறைவனது பெருமையைப் பேசும் நூலானது பற்றித் 'திவ்விய அர்த்த தீபிகை' என்று வழங்கியதாகக் கொள்ளத் தகும். 'உண்மையான, தெய்வத் தன்மையான அறிவை அளிக்கும்' பிரமாணங்களில் தலைசிறந்தவை அருளிச்செயலாகையினாலே அவை திவ்வியப்ரபந்தங்கள் என்றும், அவற்றில் சொல்லப்படும் விஷயங்களான தலைசிறந்த நூற்றெட்டுத் திருப்பதிகள் திவ்விய தேசங்கள் என்றும் வழங்கப் படுகின்றன. மேலும் மற்ற பிரமாணங்களை இயற்றியவர்களான இருடிகளைக் காட்டிலும் இந்தத் திவ்வியப் பிரபந்தங்களை அருளிச் செய்த ஆழ்வார்கள் மிகச் சிறப்புற்றவர்களாகையாலே திவ்விய சூரிகள் என்றும் வழங்கப்படுகிறார்கள்[5] ஆக, திவ்ய சூரிகள்: ஆழ்வார்களருளியதிவ்வியப் பிரபந்தங்கள், அவற்றில் பேசப் பெறும்இறைவனதுஇயல்பு, வடிவு,குணம், செல்வங்கள், திருவிளையாடல்கள் திவ்விய தேசங்கள் ஆகியவற்றின் பெருமைகளைக் காட்டுவதுபற்றியே சுவாமி 'திவ்வியார்த்த தீபிகை' என்னும் பெயரைச் சூட்டினது மிகப் பொருத்தமானது எனத் தோன்றுகிறது.

இவ்வாறு பெயர்பெற்ற திவ்வியார்த்த தீபிகையானது 1927இல் முதலாயிரத்திற்கும் அதே ஆண்டில் பெரிய திருமொழிக்கும் அமையப்பெற்று மற்ற இரண்டாயிரங்கட்கும் 1935ஆம் ஆண்டுக்குள் முடிவுபெற்றது. இறுதியாக 1933ஆம் ஆண்டு திருவாய்மொழிக்கு முதல்பதிப்பாக உரை அமைந்துள்ளது.[6]

இப்பதிப்பில மற்ற மூவாயிரம் பாசுரங்கட்கும் இதற்கு முன்பாகவே உரை எழுதிய பட்டியலையும் காண முடிகிறது.[7] ஆனால் இப்பதிப்பு இப்போது கிடைப்பதில்லை. இதற்குப் பிறகு பல பதிப்புக்கள் உண்டாகி, இறுதியாக சுவாமியின் பவளவிழாவின் நினைவு மாலையில் பதினேழாவது மலராகத் திருவாய்மொழிப் பத்துப் பத்துக்களுக்கும் உரைமலர்ந்து 1953இல் எங்கும் மணம் பரவிற்று. இவ்வுரையைப் பின்பற்றியே ஆராய்ச்சி மேற்

கொள்ளப்படுகிறது. இதற்கு முன் பல பதிப்புக்கள் இருப்பினும், அவை கிடைக்கப் பெறாமையாலே இப்பதிப்பின் துணைக்கொண்டு ஆய்வு செய்யப்படுகிறது.

## 2-3- திருவாய்மொழியின் உரைகள்

இப்படி வழிநூலாக அமைந்த தீபிகை உரையைக் காணும் போது அதற்கு மூல காரணமாக அமைந்த திருவாய்மொழி உரைகளைப் பற்றி அறிதல் வேண்டும். நாதமுனிகள் காலத்திலும் அதற்குப்பின் தோன்றிய ஆசாரியர்கள் காலத்திலும் வாய்மொழி இலக்கியங்களாக ஆழ்வார்களின் அனுபவங்களைப் போற்றிப் பேசி வந்தனர் ஆழ்வார்கள் காலத்துப் பாடல்கள் நாதமுனிகள், ஆளவந்தார் காலங்களில் அரும்பாகவும் போதாகவும் இருந்து, இராமானுசன் தோன்றிய பின்பே மலராக விரிந்தன என்பர்.[8]

ஆளவந்தாரின் திருவுள்ளப் பாங்கையறிந்த இராமானுசர் தம் ஞானப் பிள்ளையாகிய திருக்குருகைப்பிரான் பிள்ளான் என்பவர் மூலமாக வடசொல் மிகுத்தும், தமிழ்ச்சொல் குறைத்தும ஆழ்வாரின் திருவுள்ளக் கருத்தைத் தெரிவிக்குமாறு உரையை அமைக்கச் செய்தார். அதுவே ஆறாயிரப்படியாய் அமைந்தது இது விஷ்ணுபுராண எண்ணிக்கையில் அமைந்தது.[9]

நஞ்சீயர் என்னும் வேதாந்தி, பட்டர் என்னும் ஆசாரியரின் திருவருளினால் ஒன்பதினாயிரப்படி என்னும் உரையைத் திருவாய்மொழிக்கு எழுதினார். இது ஸ்ரீபாஷ்யத்தின் எண்ணிக்கையில் அமைந்துள்ளது.[10]

நம்பிள்ளையின் அன்புக்கிலக்கான பெரியவாச்சான் பிள்ளை என்னும் ஆசாரியரால் பெருக்காறு போலே பெருகும் அன்பு காரணமாக இதிகாசங்களுள் உயர்ந்ததான இராமாயணச் சுலோக எண்ணிக்கைக்கு ஒப்பான இருபத்துநாலாயிரப்படி என்னும் உரை அமைக்கப்பட்டது.[11]

பின்புள்ளார் யாவரும் கற்றறிந்து உய்யும்படி நம்பிள்ளை செப்பு நெறியை எழுதி உலகுக்கு உதவிசெய்த வடக்குத் திருவீதிப் பிள்ளை என்னும் ஆசாரியரின் ஈடு என்னும் முப்பத்தாறாயிரப்படி சுருதப் பிரகாசிகை என்னும் நூலுக்கு ஒப்பாக அமையப் பெற்றது.[12]

பின்னர் உலக மக்களிடம் ஆசைகொண்டு வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் என்னும் ஆசாரியர் தம்முடைய பெரிய அறிவாற்றலால் திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி என்னும் உரையை அருளினார்.[13]

இவ்வாறு ஆறாயிரப்படி தொடங்கிப் பன்னிராயிரப்படி ஈறாகத் திருவாய்மொழிக்கு ஐந்து வியாக்கியானங்கள் அமைந்துள்ளன. இவ்வைந்து உரைகளும் குறைந்த அறிவுடையவரால் அசைக்க முடியாதவாறு ஆழ்வார் திருவுள்ளப் பாங்கைப் பிரதிபலிக்கச் செய்துள்ளன; திருவாய்மொழியினைக் காப்பாற்றிப் போற்றியும் வந்துள்ளன. இவ்வுரைகளை எழுதிய ஐவரையும் திருவாய்மொழியைக் காத்த குணவாளரென்றுமணவாள மாமுனிகள் போற்றியுரைப்பர்.[14]

## 2-3-1 திருவாய்மொழி உரைகளின் வைப்புமுறை

மேற்கூறிய ஐந்து உரைகளின் வைப்புமுறைகளைக் காணும்போது அக்காலத்திற்கேற்பத் தனிப்பெருமை குன்றாது பின்போரும் கற்றறிந்து ஆய வகை செய்துள்ளது அறியற்பாலதாகும்.

### 2-3-1-1 ஆறாயிரப்படி

இராமானுசருடைய பேரருளாலே அவர் அடிக்கீழ்க் குனிந்து கேட்டதன் விளைவாக மனனம் செய்து பொருள்தெரிந்து தெளிவாக எழுதிய உரை ஆறாயிரப்படி எனப்படும். ஆகையாலே அவதாரிகை அமையப் பெறவில்லை எனச் சொல்லலாம். இதற்குக் காரணம் இராமானுசருடைய எல்லையற்ற கருணையாலே பிள்ளானை முதன்முதலாகத் திருவாய்மொழிக்கு உரை எழுதச் சொன்னதாகும்[15] இராமானுசர், ஆளவந்தார் மனத் திருத்த மூன்று குறைகளில் இரண்டாவது குறையை இவ்வுரையால் நிறைவேற்றியது புலனாகிறது.[16]

முதன்முதலாகத் திருவாய்மொழிக்குப் பிள்ளான் வரைந்த ஆறாயிரப்படியில் முன்னுரையாக அவதாரிகைகள் அமையப்பெறவில்லை. ஆறாயிரப்படியில் முழுமையாக ஓர் அவதாரிகையைக் காணாவிடினும் ஒவ்வொரு திருவாய்மொழியின் தொடக்கத்தில் அத்திருவாய்மொழியின் திரண்ட கருத்தாக அவதாரிகையில் காட்டுவர். (பின்னிணைப்பு எண்:5 )

சான்றாக, பத்துடையடியவர்' என்னும் திருவாய் மொழிக்கு அவதாரிகை அமைந்துள்ளதைக் காணலாம்.[17] மேலும் ஒவ்வொரு பாட்டின் தொடக்கத்தில் அவதாரிகை இல்லாவிடினும் அவர்

எடுத்துக்கொண்ட அளவிற்கேற்பவும் ஆழ்வாருடைய நிலைமையைச் சொல்லவும் இறைவனுடைய இயல்பு, வடிவு, குணம், திருவிளையாடல்கள் ஆகியவற்றைச் சொல்லவும் விரிவாகப் பொருள் கூறுவர்.

'ஒன்றுந் தேவும்' என்ற பதிகத்தின் முதற்பாடலுக்கு வைணவத் தத்துவார்த்தங்களை விளக்கும் வகையிலே நாராயணனைத் தவிர வேறு தெய்வத்திடம் பற்றுடையவர்களைக் குறித்து விரிவாகப் பொருள் விளக்கியுள்ளார். இது முதன்முதலாக எழுந்த உரையாதலால் உலகோர்களைத் திருத்தும் வகையிலே நான்கு அடிகளில் சொன்னதை நாற்றிசைக்கும் உரைக்கும்படிப் பொருள் விளக்கியதைக் காணலாம்.[18]

## 2.3.1 2. ஒன்பதினாயிரப்படி

பட்டருடைய இயற்கை இன்னருளால் அழகிய உரையாக ஒன்பதினாயிரப்படியை நஞ்சீயர் என்னும் ஆசாரியர் அமைத்தார். முதன்முதலாக இந்தவுரையில் திருவாய்மொழிக்கும் மற்றும் நம்மாழ்வார் அருளிய மூன்று பிரபந்தங்களுக்கும் சேர்ந்து ஒரு விரிவான அவதாரிகை அமைந்துள்ளது. இது தத்துவக் கருத்துக்களை உணர்த்தலல்லது; ஆழ்வாருடைய அருளிச்செயலின் பெருமையை வெளிப்படுத்துகிறது; திருவாய்மொழி வேதத்துக்கு ஒப்பாக அமைந்த கருத்தைத் தெளிவுபடுத்துகிறது; ஆழ்வாருடைய தன்மைகளை விளக்குகிறது; இறைவனுடைய குணங்களைக் காட்டுகிறது. இப்படி முழுமையான அவதாரிகையோடல்லாமல் ஒவ்வொரு பாட்டுத் தொடக்கத்திலும் அப்பாட்டின் திரண்ட கருத்தைக் காட்டுவர். சான்றாக,

> **''கழிமின் தொண்டீர்கள் கழித்து,**
> **தொழுமி னவனைத் தொழுதால்**
> **வழிநின்ற வல்வினை மாள்வித்து**
> **அழிவின்றி யாக்கந் தருமே''** (1 6 8)

என்னும் பாடலின் கருத்தை அவதாரிகை மூலம் காட்டுவர். அதாவது வேறு பயனைக் கருதாது இறைவனையே பயனாகக் கருதுபவர்களுக்குத் தடையெல்லாம் போக்கி அடிமையாகிற அழிவில்லாத செல்வத்தை இறைவன் தருகிறான் என்பதாகும். இக்கருத்தைப் பாடலின் ஒவ்வோர் அடியையும் பிரித்துக்கொண்டு உரை வழங்குவர்.[19] இத்தகைய நெறி இவர் வழங்கிய உரை

முழுவதும் அமையப் பெற்றதைக் காணலாம். இது பற்றியே, சொற்சேர்த்தியினுடைய ஆற்றலாலும் பொருளின் பெருமையாலும் உண்டான மிகுதியான அழகைக் காட்டுவதாகும் என்று பிள்ளைலோகஞ்சீயர் கருதுவர்.[20]

### 2.3.1.3. இருபத்துநாலாயிரப்படி

நம்பிள்ளையின் நல்லருளாலே பெரியவாச்சான் பிள்ளையால் இடப்பட்ட இருபத்துநாலாயிரப்படி என்னும் உரையின் அவதாரிகையில் நஞ்சீயரைப் போலவே இவர் எடுத்துக்கொண்ட அளவிற்கேற்ப நம்பிள்ளை அறிவித்த பொருள்களை விரிவாகக் காட்டி உரைப்பர். இப்படி திருவாய்மொழிக்கும் அந்தந்தத் திருவாய்மொழிகளின் கருத்தை அவதாரிகையாகக் காட்டி உரைப்பர் மேலும் ஒவ்வொரு பாசுரத்திற்கும் அவதாரிகை வைத்து அந்தந்த இடத்திற்கேற்பப் பாடலின் சொற்றொடர்களைப் பிரித்துக் கொண்டு பொருள் வழங்குவர் பெரியவாச்சான் பிள்ளை.

சான்றாக, 'திரிவிக்கிரமன்' என்ற பாடலில் இறைவனை அனுபவிக்குமதுவே பயனான மனத்தைத் தந்தாய் என்ற கருத்தைப் பாடலின் அவதாரிகையாகக் காட்டி உரைப்பர். இதனை விவரிக்கும் வகையிலே பாடலின் சொற்களையும் தொடர்களையும் பிரித்துப் பிரித்து ஆழ்வாருடைய மேன்மேல் எனப் பெருக்காறு போலே பெருகிவரும் பக்தியைக் காட்டும் வகையில் பொருள்களை வழங்குவர்[21]

### 2 3 1.4 முப்பத்தாறாயிரப்படி

நம்பிள்ளை செப்பு நெறியைப் பட்டோலைப் படுத்திய வடக்குத் திருவீதிப் பிள்ளையின் உரையான முப்பத்தாறாயிரப் படியில் ஆழ்வாருடைய வெவ்வேறு நிலைமைக்கு ஏற்ப அவர் தம் இயல்பு, அவர் தம் வடிவில் வேறுபாடு, வழிபடுவதில் திண்மை, பிரிவில் மயக்கம், தெளிவில் தூய்மை ஆகியவை பெருநோக்காகக் கொண்டு சிறந்து விளங்குகின்றன. இத்தகைய சிறப்பான ஈட்டிற்கு மூன்று அவதாரிகைகள் மிகவும் கம்பீரமாக அமைந்துள்ளன[22]

இவ்வாறு அமைந்துள்ள மூன்று அவதாரிகைகளின் முதல் அவதாரிகையில் வைணவமல்லாத மற்ற சமயங்களின் கொள்கைகளைக் காட்டி அவற்றிற்கு மேலான வைணவச் சமயத்

தத்துவங்களை விளக்கி அவை எவ்வாறு ஆழ்வாருடைய அருளிச் செயல்களில் அமைந்துள்ளன என்பதையும் விளக்கிக் காட்டுவர். ஆழ்வாருடைய மற்றைய பிரபந்தங்களின் கருத்தினைக் காட்டித் திருவாய்மொழியில் ஐம்பெரும் பொருளான தத்துவப் பொருளான தத்துவப்பொருள்[23] அமைந்துள்ளதையும் தக்க சான்றுகளுடன் விளக்கிக் கூறுவர்.

இரண்டாவது அவதாரிகையில் துவயத்தின் விவரணமாகத் திருவாய்மொழி அமைந்ததை ஓரோர் பத்துக்களின் திரண்ட கருத்தாக அவதாரிகையில் காட்டுவர்.

மூன்றாவது அவதாரிகையில் ஆழ்வாருடைய நான்கு பிரபந்தங்களிலுள்ள நிலைமையை எடுத்துக்காட்டித் திருவாய் மொழியினால் ஆழ்வார் பெற்ற பேற்றை எடுத்துரைப்பர். இவ்வாறு அமைந்ததோடல்லாமல ஒவ்வொரு திருவாய்மொழி யின் தொடக்கத்தின் அந்தந்தத் திருவாய்மொழியின் முன்பின் பதிகங்களின் இயைபுகளைக் காட்டித் திரண்ட கருத்தை அவதாரிகை வைத்து ஓரோர சொல்லையோ தொடரையோ காட்டி, விரிவான பொருளையும் காட்டி, முடிவிலே ஒவ்வொரு பாட்டிலுள்ள ஆழ்வாருடைய நிலைமைகளையும் இறைவனுடைய பெருமைகளையும் எளிதாக அறியும் வகையில் எடுத்துரைப்பர்.

இவ்வாறு ஒவ்வொரு பதிகத்தின் முடிவுகளிலே அந்தந்தப் பாடலில் உறைந்த ஆழ்வார் நிலைமையையோ, இறைவனின் நிலைமையையோ காட்டும் நெறியை முதல் பத்தின் முதல் பதிகம் தொடக்கமாக மூன்றாம் பத்து ஐந்தாம் பதிகம் வரை அமைத் திருக்கக் காணலாம். எடுத்துக்காட்டாக, 'கரவிசும்பு' (1-1-11) என்னும் பாசுர உரைக்கமைந்த அவதாரிகையைக் குறிப்பிடலாம் (பின்னிணைப்பில் எண். ).

இங்ஙனம் ஈட்டில் அவதாரிகைகள் அமைந்துள்ளன இவற்றைப் பின்னிணைப்பில் காணலாம்

**2 3 1 5 பன்னிராயிரப்படி**

இறுதியாக அமைந்த உரையான வாதிகேசரி அழகிய மணவாளச்சீயரின் பன்னிராயிரப் படியைக் காணும்போது, மற்ற நான்கு உரைகளிலும் அமையப்பெறாத ஒரு மங்களச்சுலோகத்தை எழுதி திருவாய்மொழிக்கு முழுமையான உரை அவதாரிகை வழங்குதலைக் காணலாம்.

நம்பிள்ளை உரை துவய நோக்கில் அமைந்துள்ளது. இவர் உரையோ திருவாய்மொழிக்கமைந்த பட்டரின் தனியனுக்கு ஏற்ப அமைந்துள்ளது[25] ஆத்மகபஞ்சக நோக்கில் இறைவனின்றி எதுவும் இயங்காது என்பதைத் தெரிவிக்கும் வகையிலே ஒவ்வொரு திருவாய்மொழியின் அவதாரிகையிலும் அந்தந்தத் திருவாய் மொழிப் பாடல்களிலமைந்த இறைவனுடைய இயல்பு, வடிவு குணம், திருவிளையாடல்கள் ஆகியன எடுத்துரைக்கப்பெறு கின்றன மேலும் பாடல்களின் அவதாரிகைகளைக் காட்டும போதும் அவதாரிகையில் முன்மொழிந்த கருத்தையே அரண் செய்யும் வகையில் அவதாரிகை அமைப்பர் சீயர். மேலும் பதவுரையில் பாடலின் பொருளைத் தவறாமல் எடுத்துரைக்கும நெறியும் அவரால் பின்பற்றப்படுகிறது [பின்னிணைப்பு எண்:]

மேற்கூறிய ஐந்து உரைகள் ஐந்து விதமான நெறிகளிலே' நடைகளிலே சீர்மை பெற்று விளங்குகின்றன.

## 2-4- தீபிகையின் அமைப்பு

மேற்கூறிய ஐந்து உரைகளின் பின்னணியிலே சுவாமியின் தீபிகை அமைந்திருப்பினும் பொதுவாக நாலாயிரத்துக்கும அமைந்த தீபிகை உரையைக் காணும்போது, பெரியவாச்சான் பிள்ளை வகுத்த உரையைவிடத் தீபிகை உரை விரிவாகவும், எளிதாகவும், இறைவன்-ஆழ்வார்-ஆசாரியர் திறத்து அமைந்த அரிய கருத்துக்களைச் சிறப்பாக எடுத்துரைக்க வல்லதாகவும காணப்படுகிறது.

## 2-4-1. திருவாய்மொழித்தீபிகை

திருவாய்மொழித் தீபிகை நம்பிள்ளை உரையின் வழிமுறை யைத் தழுவி அமைந்துள்ளதாக உணர முடிகிறது. அதாவது ஒவ் வொரு திருவாய்மொழியின் தொடக்கத்தில் அவதாரிகை கூறிப், பின்னர்ப் பாசுரத்தைக் காட்டிப், பதவுரை தந்து, பாசுர அவ தாரிகை சொல்லித் தேவையான இடங்களில் முன்பின் பாசுரங் களின் இயைபுகளைச் சுட்டிக், கருத்துப பொருள், வடவுரை, தமிழ் வடமொழி மேற்கோள், அரும்பதவிளக்கம், இலக் கணக் குறிப்புகள், பாடபேதம், பாடதிருத்தம், கொண்டு கூட்டல் ஆகியவற்றை விளக்க அமைந்தது தீபிகை உரை அமைந்துள்ளது (பின்னிணைப்பு எண் )

அறிவிற் சிறந்த ஆசாரியர்கள் இயற்றிய திருவாய்மொழி உரைகளில் மறைந்துள்ள பொருள்களை வெளிக்காட்டவே சுவாமி

தீபிகை என்னும் உரையை இயற்றினார் என்பது புலனாகிறது தாமே இலையனைத்தையும் வெளிக் கொணர வேண்டும் என்னும் அவரது உறுதிபாட்டையும் எடுத்துக்காட்டுகிறது.[25] இத்தகு உறுதிப்பாட்டைத் தம்மகத்தே கொண்டு தீபிகை—குறிப்பாக திருவாய்மொழிக்கமைந்த உரை அறிவிற் குறைவோரால அறிய மாட்டாத அரிய பொருள்களை, கால, மொழி நடை, நெறிஇவற் றிற்கேற்பச் சொல்லிச் செல்வதை உணர முடிகிறது.

பதினான்காம் நூற்றுண்டின் இறுதியில்எழுந்தபன்னீராயிரப் படி உரைக்கும் இருபதாம் நூற்றுண்டிலெழுந்ததீபிகைஉரைக்கும் இடையில் ஏற்பட்டுள்ள வெற்றிடத்தை நிரப்ப சுவாமி பதவுரை யோடு கூடிய ஓர் எளிமையான உரையை அமைத்தார் எனலாம். இவ்வாறு எழுந்த தீபிகை உரை திருவாய்மொழித்திறனைவெளிப் படுத்த உதவ உள்ளது.

### 2.4.1.1. திருவாய்மொழிப் பெயர்க்காரணம்

தீபிகை உரைத்திறன் மூலம் திருவாய்மொழிப் பெயர்க் காரணம் அறியப்படுகிறது. ஆழ்வார்கள் அருளிய திவ்வியப் பிரபந்தங்களனைத்தும் உண்மையறிவை அளிக்கும் பிராமணங் களில் தலைசிறந்து விளங்குவன ஆகையாலே அப்பெயர் பெற்றன மேலும் மேலான தெய்வமாகிய[26] திருநாராயணனது இயல்பு, குணம், வடிவு, திருவிளையாடல்கள், செல்வங்கள் ஆகியவற்றைப் பரக்க இன்னிசைப் பாக்களில் அமைத்துள்ளதாலும் திவ்வியப் பிரபந்தங்கள் என அவை வழங்கப்பெறுகின்றன அவற்றுள், மேன்மையுடைய வாயினால் சொல்லும் சொற்களினால ஆகிய நூல் எனபது பற்றித் திருவாய்மொழிக்கு இப்பெயர் அமைந்தது என்பர். இவ்விடத்தில், ஆழ்வார் வாக்குக்குண்டான சிறப்புத் தோன்றத் திருநாவீறுடைய பிரான் என்ற பெயர் விளங்குகை யாலே ஆழ்வாருடைய மேன்மை காணப்படுகிறது. இந்த மேன்மை காரணமாகவே திருவாய்மொழி என்ற பெயர் வந்த தாகக் காட்டுவா சுவாமி.[27] மேலும், திருமங்கையாழ்வார் அருளிய திருமொழியினின்றும் வேறுபாடு காணவே திருவாய்மொழி என்ற சிறப்புப் பெயர் பெற்றது என்றும் உரைப்பர் வாயமை தங்கிய மொழி என்பாருமுளர்.[28]

#### முடிபுகள்

1 தம் போதத்தை நிலைநாட்டும் கருத்தின்றி முன்னோர் உரை. பின்னோருக்கு விளக்குமாறு சுவாமி மேற்கொண்ட

தொண்டே திவ்யார்த்த தீபிகை என்னும் திவ்யப் பிரபந்த உரையாகும்.

2 திவ்யம், அர்த்தம், தீபிகை என்னும் சொற்கள் எங்கெங்கு, எவ்வெவ்வாறு தோன்றி வளர்ந்து வந்துள்ளன என்பதும், திவ்யார்த்த தீபிகை என்னும் தொடரின் பொருள் யாது என்பதும் விளக்கம் பெற்றுள்ளன.

3 திருவாய்மொழிக்கமைந்த ஐந்து உரைப்போக்கும் அவற்றிற்கமைந்த அவதாரிகை அமைப்பும் சுவாமி உரைப்போக்கோடும் அவதாரிகைப் போக்கோடும் ஒப்பிடப் பெற்று, ஓரளவு ஐம்பொருள் அடிப்படையிலும் பேரளவு திருமாலின் திவ்யகுணங்களைப் புலப்படுத்தும் நோக்கிலும் இவர்தம் அவதாரிகை அமைந்துள்ளது என்பதும், உரைப்போக்கில் தனித்தன்மைகள் யாவை என்பதும் ஒப்பிட்டு உரைக்கப் பெற்றுள்ளன.

4 வாய்மை திருமால் பற்றியே உரைக்கும் பான்மை ஆழ்வாரின் மேன்மையுடைய வாய்மொழி, திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழியினின்று இப்பிரபந்தத்தை வேறுபடுத்தும் நோக்கு என்னும் நான்கு காரணங்களைக் குறிப்பிட்டுத் 'திருவாய்மொழி' எனும் பிரபந்தத்தின் பெயரைச் சுவாமி காரண காரியங்களோடு தெளிவு செய்யும் பாங்குச் சுட்டப் பட்டுள்ளது.

## இயல்-2

### அடிக்குறிப்புகள்

1 மு. வை. அரவிந்தன், **உரையாசிரியர்கள்**, மணிவாசகர் நூலகம், சென்னை, 1977இ ப. 534

2. சுவாமி, **தானே எழுதிய சுயசரிதை**, ப. 1555

3. சுவாமி, **திவ்வியார்த்த தீபிகை, முதலாயிரம்**, ஸெளம்ய ஆண்டு

4 **நன்னூல்**, நூ. 13 எழுத்தியல், உரை.

5. ப்ரமாணம் சப்ரமேயம் ச ப்ரமாதாரச்ச ஸாத்விகா:
ஜயந்து க்ஷபிதாரிஷ்டம் ஸஹஸ்ரமத்ர ஸர்வதா

6 சுவாமி, **தீபிகை**, ஸ்ரீமுக ஆண்டு.

8. மு அருணாசலம், **தமிழ் இலக்கிய வரலாறு**, **பத்தாம் நூற்றாண்டு**, ப 566

9. **உபதேசரத்தின மாலை**, [41] உரை, பிள்ளைலோகம் சீயர், ப. 122.

10. மேலது (42) ப 1:4

11. மேலது (43), ப 126

12. மேலது (44), ப. 128

13. மேலது (45), ப 130

14. மேலது (39)

15. மேலது (41) உரை, பிள்ளைலோகம் சீயர், ப. 91

16. எஸ் கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதி.) **குருபரம்பரா ப்ரபாவம்**, 1975 ப 164

17. **ஆறாயிரப்படி**, திருவேங்கடாசாரியார் பதிப்பு, குரோதன ஆண்டு, 13 அவதாரிகை, பக். 80-81.

18. மேலது, பக் 157-166

19. 1-6-8, 9 படி

20. **உபதேச ரத்தின மாலை** (42), ப 94

21. 2-7-7, 24 படி தீபிகை

22. (1) ஈடு மகாப்ரவேசம்-முதல் ச்ரிய: பதி ப. 11
(2) ஈடு மகாப்ரவேசம்-2ஆம் ச்ரிய: பதி, ப. 20
(3) ஈடு மகாப்ரவேசம்-3ஆம் ச்ரிய: பதி, ப. 32

23. ஐப்பொருள்—அர்த்த பஞ்சகம். இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, தடை, பேறு என்பன.

24. மிக்கஇறை நிலையும் மெய்யா முயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் வாழ்வினையும் ஓதும் குருகையர்கோன்
யாழினிசை வேதத் தியல். —பட்டர் **தனியன்**

25 **ஸ்ரீராமானுசன்** 318, ப. 96

26 திவ்யம் [திவ்வியம்]—தெய்வத்தன்மையுள்ளது; மேலானது.

27. சுவாமி, **திருவாய்மொழி திவ்வியார்த்த தீபிகை** ப. 26

28. மேலது, ப 9

இயல்—3

# திருவாய்மொழித் தீபிகையும் முன்னோர் உரைகளும்

## 3.0

சுவாமியின் திவ்வியார்த்த தீபிகை, சிறப்பாகத் திருவாய் தீபிகை பற்றி முன் இயலில் ஆய்வு செய்யப்பட்டது. இவ்வியலில் அவர்தம் திருவாய்மொழித்தீபிகை அமைப்பும், அது முன்னோர் உரைகளைத் தழுவி அமைந்துள்ள பாங்கும், அஃது அமைந்துள்ள நிலையும் ஆய்வு செய்யப்படுகின்றன.

## 3-1. தீபிகையின் அமைப்பு

தீபிகையின் அமைப்பானது அவதாரிகை, பாடல் காட்டல், பதவுரை வழங்கல், கருத்துரைத்தல், குறிப்புரை காட்டல், தமிழ் வடமொழி இலக்கணக் குறிப்புக் காட்டல், தத்துவ நோக்கில் பொருள் கூறல், இறைவனின் திருநாமங்களைச் சொல்லல், ஒவ்வொரு திருவாய் மொழியின் திரண்ட கருத்தைக் காட்டல் ஆகிய ஒன்பது வகைப்பாடுகளைக் கொண்டதாகும்

### 3-1-1 அவதாரிகை

தீபிகை அமைப்பு என்ற இப்பகுதி மற்ற ஐந்து உரைகளைப் போல ஒரு கட்டுப்பட்ட வைணவக் கொள்கையைப் பின்பற்றி இல்லாவிடினும் எல்லார்க்கும் இன்பம் பயக்கும் வகையில் திருவாய் மொழியில் அமைந்திருக்கும் ஒவ்வொரு சொல்லின் பொருளையும் முன்னோர் உரைத்த வழியினின்று தவறாமல் உணர்த்தியுள்ளார் சுவாமி என்று கருதத்தக்க வகையில் இடம்பெற்றுள்ளது

தீபிகையில் நம்பிள்ளையைப் போல் ஒவ்வொரு திருவாய் மொழிக்கும் அந்தந்தப் பத்துப் பாடல்களினால் அமைந்ததிரண்ட கருத்தான ஆழ்வாரின் நிலைமை, எம்பெருமாரின் நிலைமை, இதற்கிடையில் தான் நுகரும் அநுபவம் என்பவற்றை உரிய மேற் கோள்களைக் காட்டி உலகமக்களுக்கு உணர்த்தும் வகையில் அவதாரிகைகளை அமைத்துள்ளார் சுவாமி.மேலே நடக்கவிருக்கும் ஆழ்வார் நிலைமையைப் பற்றியும், இறைவனின் தன்னிகரில்லா சிறப்பைப் பற்றியும் அவதாரிகைகள் வாயிலாக அறிய வழி வகுத் துள்ளார் சுவாமி. அத்துடன் முன் திருவாய்மொழிக்கும் அடுத்து வரும் திருவாய்மொழிக்குமுள்ள இயைபுகளையும் அவதாரிகை களில் தவறாது சுட்டுவர்.

இறைவன் நிலைமையை எடுத்துக்காட்டும் அவதாரிகைச் சான்று:

'பொருமா நீள்படை' [1-10] என்னும் பதிகத்தின் அவதாரிகையில் ஆழ்வாரோடு இறைவனுக்கு உண்டான கல்வி சொல்லபடுகிறது என்று பட்டருக்கு முன்புள்ள ஆசாரியர்கள்பணிப்பராம். ஆனால் பட்டர், கல்வியைக் கொடுத்ததோடல்லாமல் அதனை இயற்கை (இன்னருளாலே (நிர்ஹேதுகத்துவம்) இறைவன் தந்தருளித் தன்னுடைய சீலக்குணத்தை வெளிப்படுத்தி ஆழ்வாரை உருகவைத்தான் என்ற அருளிச் செய்வதாக நம்பிள்ளை ஈட்டில் எடுத்துக்காட்டுவர்.[1] அதனையே சுவாமி பின்பற்றிக் கூறுவர். மேலும் பட்டருடைய பொருளாட்சியை வேதாந்த தேசிகரும் ஆதரித்தருளியதையும் 'அவ்யாஜோதாரபாவாத்' என்ற அவரது சுலோகத் தொடரையும் சுட்டுவர் சுவாமி[2]

இவ்வாறு திருவாய்மொழியின் அந்தந்தப் பதிகத்தின் திரண்ட கருத்தைக் காட்டுவதோடல்லாமல் மேற்கூறியபடியே முன் நடந்த நிகழ்ச்சிகளின் இயைபையும், முன் இரண்டு பதிகங்களில் நடந்த ஆழ்வார் நிலைமையையும் எடுத்துக்காட்டும் வகையிலே பதிக அவதாரிகையிடுவதும் உண்டு.

ஆழ்வார் நிலைமையை எடுத்துக்காட்டும் அவதாரிகைச் சான்று:

'பொலிக பொலிக பொலிக' என்னும் பதிகத்தின் அவதாரிகையிலே ஸ்ரீவைஷ்ணவ சமூகத்தை வாழ்த்துவதாகப் பதிகம் அமைந்ததைக் காட்டுவர்[3] ஆனால் இப்பதிகத்தில் வாழ்த்துதற்குக் காரணம் யாது என்பதையும் அவர் கூறுவர். கீழே 'நண்ணாதார் முறுவலிப்ப' என்ற பதிகத்தில் ஆழ்வார் உலகோர்களின் துன்பங்களை நினைத்து அதைப் போக்குவதற்காக 'ஒன்றுந் தேவும்' என்ற பதிகத்தில் இறைவனுடைய மேன்மையைப் பரக்கப் பேசுகிறார் என்றும், அதனால் திருந்தி, உலகம், பரமபதம் என்கிற வேற்றுமை அற்று அங்குள்ளவர்களும் இங்கே வரலாம்படி இருந்த இருப்பைக் கண்டு வாழ்த்துவதாகப் 'பொலிக பொலிக பொலிக' என்ற பதிகம் அமைந்தது என்றும் காட்டுவர்.

ஈட்டில் இப்பதிகத்தைச் சேர்ந்த இரு பொருளாட்சிகள் காணப்படுகின்றன. ஒன்று, ஸ்ரீவைஷ்ணவர்களைக் காண்கைக்காக இந்நிலத்தில் நித்யசூரிகள் வர, அவர்களைக் கண்டு ஆழ்வார்

வாழ்த்துவதாக ஆளவந்தார் பொருளாட்சி காண்கிறது; இரண்டு 'நண்ணாதார் முறுவலிப்ப' [4-90] என்னும் பதிகத்தில் சம்சாரிகள் படும் துன்பத்தைக் கண்டு வருந்தி அதற்கீடாக 'ஒன்றுந் தேவும்' [4-10-0] என்னும் பதிகத்தில் இறைவனின் மேன்மையைக் காட்டிச் ஸம்சாரிகளைத் திருத்தி, அத்தாலேஸம்சாரிகள் திருந்தியதனால் பூலோகம், பரமபதம் என்கிற வேறுபாடின்றி நிதயசூரிகளும் இங்கே வர, அவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களை வாழ்த்துவதாக எம்பெருமானார் [இராமானுசர்] பொருளாட்சி காண்கிறது.

இவ்விரு பொருளாட்சிகளில் சுவாமி எம்பெருமானார் திறத்துப் பொருளாட்சியையே ஆதரித்து, அதற்கிணங்க அமைந்துள்ள 'அடிமை புக்காரையும்...கண்டு காப்பிட்டு'' என்னும் ஆசாரிய இருதயத் தொடரையும் எடுத்துக் காட்டிப் பொருத்துரைப்பர் சுவாமி [4]

ஆக, சுவாமி அமைக்கும் பதிக அவதாரிகை மூலம் ஒரே போக்கான பாசுரங்களில் திரண்ட கருத்தும், அவற்றின் இயைபுகளும் எடுத்துக் காட்டப் பெறுவது அறிய முடிகிறது.

### 3-1-2 பாடல் காட்டல்

சுவாமி திருவாய்மொழிப் பாடல்களனைத்தையும் பாடல் காட்டல் எனனும் தலைப்பில காட்டும் நெறி தனிச்சிறப்புடையதாகும். ஏனெனில் மூலப்பாடங்களைப் பின்பற்றியே பல இடங்களில் அமையப் பெற்றிருப்பினும் ஓதும் முறையில் ஏற்பட்ட இடர்ப்பாட்டையும் வியாக்கியானத்திற்கேற்பப் பாடங்களின் திருத்தங்களையும காட்டும் வகையிலே பாடல்களை அமைத்துச் செல்வர் எடுத்துக்காட்டாக ஒரு பாடல்:

**''நிறுத்திநும் முள்ளத்துக் கொள்ளும் தெய்வங்களும்மை யுய்யக்கோள்**
**மறுததுமவ னோடே கண்டீர் மார்க்கணடேயனும் கரியே**
**கறுத்தமன மொனறும் வேண்டா கண்ணனல்லால் தெய்வமில்லை**
**இறுபபதெல்லாம் அவன்மூர்த்தி யாயவர்க்கே இறும்மினே''** [5]

மேற்கூறிய பாடலின் முதலடியில் 'உய்யக்கொள்' என்றே சே. கிருஷ்ணமாசாரியசுவாமி பதிப்பும்,புதுப்பட்டு திருவேங்கடாசாரிய சுவாமி பதிப்புமகாட்டுகின்றன. [6] ஆனால், ஓதும முறையின நெறியைக் காட்ட சுவாமி 'உய்யக்

கோள்' என்னும் பொருத்தமான பாடத்தையே தம்முடைய தீபிகை யுரையிலே காட்டுகிறார்.[7] 'கொள்' என்பது முதனிலை தொழிற்பெயராகவும், 'கோள்' என்பது முதனீண்ட தொழிற் பெயராகவும், கொள்ளத்தகும்

பாடல் காட்டுதல் பயனாகத் தாம் உரைக்கப் புகும் பொருண்மைக்குரிய சொற்களை முன்கூட்டியே பாடல்களில் அமைத்துக் காட்டும் திறத்தைக் காணமுடிகிறது

### 3-1-3 பதவுரை வழங்கல்

திருவாய்மொழிக்கமைந்த உரைகளுள் பன்னீராயிரப்படி நீங்கலாக மற்ற நான்கும் பாட்டின்கண்சொற்கள் அமைந்த முறை யிலேயே ஒவ்வொரு சொல்லுக்கும் விரிந்த பொருளைக்காட்டு வதிலே நோக்காயிருக்கும். ஆனால் பன்னிராயிரப்படி உரைகாரர் தாம் வழங்கிய பொழிப்புரையாக அமைந்த உரையில் திருவாய் மொழிச் சொல் ஒவ்வொன்றுக்கும் பதவுரையாகஉரியபொருளைக் காட்டியமை புலனாகிறது. ஆனால் அவ்வுரை அந்தக்காலத்திற் கேற்ப வடமொழியோடு தமிழ்மொழி கலந்து மொழி நடை நெறி இவற்றை உட்கொண்டதாக விளங்கிவந்தது. அவற்றைத் தெரி விக்கும் வகையிலே சுவாமி அமைந்த தீபிகையில் பதவுரை சிறந்து விளங்குகிறது, பாசுரத்தைப் படித்த மாத்திரம் பொருள் விளங்காப் பொருண்மை படைத்த அதன் கருத்தைப் பதவுரை மூலம் பொழிந்து உரைப்பர் சுவாமி. இதனைப் ''பதவுரையில் பொருள்விரியாப் பாசுரத்தில் பரக்க அதன் கருத்தை இதில் பொழிந்துரைப்பேன்'' என்று தாமே கூறுவது நினைதற்பால தாகும்.[9]

> **பதச்சேத: பதார்த்தோக்தி: விக்ரஹ: வாக்யயோஜனா**
> **ஆக்ஷேபஸ்ய ஸமாதானம் வ்யாக்யானம் பஞ்சலக்ஷணம்**[10]

என்ற வடமொழி இலக்கணத்திற்கேற்பத் திருவாய்மொழி பதப் பொருளை முகத்தாலே அறியும் பதங்களைப் பிரித்துக்கொண்டு உரைவழங்குவர் சுவாமி

> ''**கூவுமாறறிய மாட்டேன் குன்றங்களனைத்து மென்கோ**
> **மேவுசீர் மாரியென்கோ விளங்குதாரகைக ளென்கோ**
> **நாவியல் கலைகளென்கோ ஞானநல்லாவி யென்கோ**
> **பாவுசீர்க் கண்ணனெம்மான் பங்கயக் கண்ணனையே**''[11]

என்று பாசுரத்தைப் படித்த மாத்திரம் இதன் பொருள் விளங் காது. இப்பாட்டிற்கு எழுவாயாக அமைந்த பாவுசீர்க் கண்ணன்,

பங்கயக் கண்ணன், எம்மானை என்று தொடங்கிக் 'குன்றங் களனைத்து மென்கோ', 'மேவுசீர் மாரியென்கோ', 'விளங்கு தாரகைகளென்கோ', 'நாவியல் கலைகளென்கோ', 'ஞான நல்லாவி யென்கோ கூவுமாறறிய மாட்டேன்' என்ற பொருள் விளங்காப் பாசுரத்தின் பதவுரையை விரித்து வெகு அழகாக எடுத்துக் காட்டுகிறார்[12] மேலும் இப்பாசுரத்தின் சொற்கள் பிரகிருதியின் தத்துவத்திற்கேற்பக் கோவையாக அமைந்துள்ளது. "பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போல் பல, சொல்லால் பொருட்கிடனாக...செய்வன செய்யுள்"[13] என்னும் நன்னூல் நூற்பாவினை உணர்த்துவது சுவாமி தமிழில் ஆழ்ந்த ஞானம் பெற்றமை விளங்குகிறது சுவாமியின் பதவுரையைப் படிக்கும் போதே பக்தியின் முதிர்ச்சி வளரும் என்பது திண்ணம்.

"துடைத்த கோவிந்தனாரே உலகுயிர் தேவும் மற்றும்

... ... — ...

கடைத்தலை சீய்க்கப்பெற்றால் கடுவினை களையலாமே"

(10-2-7)

என்ற பாடலின் சொற்களுக்குப் பொருள் விரியும் இடமெல்லாம் [ ] என்ற குறியிட்டு அதன் கருத்தை விளக்கியுரைப்பர்.[14]

எடுத்துக்காட்டாக, மேற்காட்டிய பாசுரத்திற்கு அமைந்துள்ள பதவுரையைக் கீழ் காணலாம்:

உலகு உயிர் தேவும் மற்றும் — உலகங்களையும் [மநுஷ்யாதி] ப்ராணிகளையும் தேவஜாதிகளையும் மற்றும் மஹதாதி பதார்த்தங்களையும்

துடைத்த கோவிந்தனாரே — ஒன்றொழியாமல் ஸம்ஹரித்த பெருமான் தானே

படைத்த எம் பரமமூர்த்தி — [அவற்றையெல்லாம் மறுபடியும்] படைத்தருளின பரமபுருஷன்; [அப்பெருமான்]

படைதலை வாளை பாயும் வயல் அணி அனந்தபுரம் — நீர் நிலங்களிலே வாளைமீன்கள் களித்துப் பாயாநின்ற வயல்களை அலங்கரிக்கும் அனந்தபுரத்தில்

பாம்பு அணை பள்ளிகொண்டான் — சேஷ சயனத்திலே பள்ளி கொண்டருளா நின்றான்; [அவ்விடத்தே சென்று]

கடைத்தலை சீய்க்கப்பெற்றால் — திருவாசல் விளக்குதல் முதலிய கைங்கர்யங்களைப் பண்ணப் பெற்றால்

கடுவினை களையலாம் — கொடிய பாவங்களைப் போக்கப் பெறலாம்

எனவே, ஆழ்வார் சொற்களுக்குப் பொருள் அறிவதோடல்லாமல் அப்பொருளுக்குக் காரணமாயமைந்த தொடர்களையும் கருத்துக்களையும், பதவுரையிலேயே காட்டி வழங்குவது சுவாமி அளிக்கும் தீபிகை உரையின் சிறப்பில் ஒன்றாகும்

## 3-1-4 கருத்துரைத்தல்

தமிழில் முதல் உரை நூலான இறையனார் களவியலும், அடுத்துவந்த நம்பியகப்பொருளுரையும் கருத்துரைத்தல், பொழிப்புத் திரட்டல், அகலமுரைத்தல், கண்ணழித்தல் என்ற நான்கு உரை நெறிகளைப் பின்பற்றி அமைந்துள்ளன இவ்வாறேசுவாமிதம் தீபிகை உரை அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

வைணவ உரையாசிரியர்கள் அந்தந்தக் காலத்திற்கேற்பக் கற்போர்க்கு ஆழ்வார் நோக்குப் புலப்படுமாறு ஆங்காங்கே பாடலில் அமைந்த சொல, தொடர், அடி ஆகியவற்றில் திரண்ட கருத்துக்களை ஒருசேரப் பிடித்துக் காட்டுவர். இத்தகைய நெறிகளை சுவாமி பின்பற்றிப் படிப்போர் நயம் உணர்ந்து பயன் பெறுமாறு பாடல்களின் கருத்துக்களைக் காட்டி உரைப்பர் இதனை ஆராயும்போது, இத்தகைய கருத்துரை ஆழ்வார்களின் மனநிலையிலை இறைவனுடைய வடிவு குணம், திருவிளையாடல் செல்வங்கள் ஆகியவற்றை அறிய உதவுவது தெளிவாகும்.

### 3-1-4-1 ஆழ்வார் நிலைமையை யுணர்த்தும் கருத்துரைகள்

'மண்ணையிருந்து துழாவி' என்ற பதிகத்தில் முதற்பாடலில் இறைவனுடைய சமபந்தம பெற்ற பொருள்களையும இறைவனுக்குப்பாலயான பொருளகளை யும் கண்டு அப்பெருமானையே கண்டதாக ஆழ்வார் களிக்கிறார்.

இப்பதிகம் திருத்தாயார் பாசுரமாக அமைந்துள்ளது. தன பெண்ணான பராங்குச நாயகியின் நிலைமையை எடுத்துக் காட்டும போது ''என் பெண்ணைப் பெருமயல் செய்தாற்கு என்செய்கேன் பெய்வளையீரே'' என்ற இடத்தில் ஆழ்வாரின் நிலைமையைக் காட்டும் அழகு அறியற்பாலதாகும இத்தொடருக்குரிய பொருளைப் பதவுரையில் காட்டியிருப்பினும் இந்த நிலைமையில ஆழ்வாருடைய ஆற்றாமையைத் திருத்தாயார் சொல்லாக 'ஒன்றும மாட்டுகிறிலேன்' என்றகருத்தை எடுத்துரைப்பர்.[15]

''சுடர்வளையும் கலையுங் கொண்டு'' என்ற பாடலில் ''பங்கயக் கண்ணன் சுடர்பவள வாயன்'' என்ற இடத்தில் சில குருகினங்களைக் குறித்துச் சொல்லும் போது செந்தாமரைக் கண்ணனும் அழகிய பவளம்போன்ற வாயையுடையவனுமாக

இறைவனை அனுபவித்து, பிரிந்து ஆறியிருப்பளோ என்று சொல்லவேணும் என்ற கருத்தைக் காட்டியுரைப்பர்.[16]

### 3-1-4-2 இறைவனது வடிவு, குணம் திருவிளையாடல்கள் செல்வங்கள் ஆகியவற்றில் அமைந்துள்ள கருத்துரைகள்

ஸ்ரீ சாஸ்திரி சுவாமி காட்டும கருத்துரையில் இறைவன் பரமாக அவனுடைய வடிவு, குணம், விபூதி, திருவிளையாடல்கள் ஆகியன அறிய வாய்ப்புள்ளது.

### 3-1-4-3. இறைவனது வடிவு

"காண்கொடுப்பானல்லனார்க்கும்" என்ற பாடலில் தன்னை யார்க்கும் காணக்கொடுப்பதற்கரியன் என்றவிடத்தில் மாபலிக்கு இறைவன் தன்னுடைய எல்லா வடிவழகையும் காட்டி, அவனை ஆட்கொண்டது போல அந்த வடிவழகைக் காட்டி ஆழ்வாருடைய எல்லாச் சொத்தையும் (ஸர்வஸ்வம்) கொள்ளை கொண்டான் இதனால் ஆழ்வார் மாண்குறளான வடிவைக்கண்டு அனுபவித்தது புலனாகிறது[17]

### 3-1-4-4. இறைவனது குணம்

"அமரராய்த் திரிகின்றார்கட்கு" என்ற பாடலில் "குமரனார் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனாரே" என்ற இடத்தில் இறைவனின் சீல குணத்தைக் காட்டும் வகையில் சுவாமி விளக்கம் எடுத்துரைப்பர். அதாவது இறைவன் சிவன் முதலானவர்களுக்குத் துக்கத்தைப் போக்குபவனுமாயிருப்பான். பசுக்களுக்கும் இடையர்களுக்கும் கையாளனாயிருப்பான் கெட்ட அபிமானம் உள்ளவர்களுக்கும் துக்கத்தைப் போக்குபவன். அப்படிப்பட்ட இறைவன் ஆழ்வார் இல்லாது நமக்குத் தன்னைக் கிட்டுகையில் அருமைப்படுத்தமாட்டான் என்ற கருத்தைக் காட்டுகிறார். இதனால் சீலகுணம் இறைவன்பால் காணப்பெறுகிறது.[18]

### 3-1-4-5 இறைவனின் திருவிளையாடல்கள்

"கோயில் கொண்டான் தன் திருக்கடித்தானத்தை" என்னும் பாடலில் இறைவன் ஆழ்வார் திறத்துள்ள எல்லையான அன்பினால் தனது திருக்கடித்தானத் திருப்பதியோடே கூடவந்து ஆழ்வார் திருவுள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு புகுந்தான் என்று நயமாக உரைக்கிறார் சுவாமி.

"திருக்கடித்தான நகரோடு மட்டுமல்லாமல் ஸ்ரீவைகுண்டத்து வைபவங்களோடும் கிருஷ்ணாவதார வைபவங்களோடும் கூடி

வந்து புகுந்தான்'' என்று மேலும் கூறுகிறார் ''தெய்வமெல்லாந் தொழ வைகுந்தங் கோயில் கொண்ட'' என்றதும், ''குடக் கூத்தவம்மான்'' என்றதும் திருவவதாரத் திருவிளையாடல்களைக் குறிக்கும் என்பதை உட்கருத்தாகச் சுவாமி வருணிப்பர்.[19]

### 3-1-4-6. இறைவனின் செல்வங்கள்

''திருமாலிருஞ்சோலை மலையே'' என்ற பாசுரத்தில் ''என் ஊழிமுதல்வன் ஒருவனே'' என்பதற்கு இறைவனுக்குட்பட்ட அறிவுள் பொருள் [சித்து], அறிவில் பொருள் [அசித்து] ஆகியன தனக்குட்பட்டன என்பதைக் காட்டும் வகையில் கருத்துரைப்பர். இதனால் விண்ணாடும் மண்ணாடும் அவனுக்குட்பட்டது என்பது அறியலாம்.[20]

### 3-1-5- குறிப்புரை சுட்டல்

சுவாமி தீபிகை உரையில் ஆழ்வார் வழங்கிய சொல்லைக் குறிப்பாக எடுத்துக்காட்டுவர்.

''இங்கே திரிந்தேற்கு'' என்னும் பாடலில் ''புலன்கொள் வடிவென் மனத்ததாய்'' என்பதிலே இறைவனுடைய வடிவுக்குப் 'புலன்கொள்' என்ற அடைமொழி கொடுத்ததைக் குறிப்பர். இதன்பொருள் யாதெனில், இறைவனுடைய வடிவானது எப்படிப் பட்ட திடமனத்தவாது[ அத்யவஸாயமுடையவர் களினுடையவும் ] இந்திரியங்களை [புலன்களை ]யும் கொள்வதாக அமைந்துள்ளது என்பது என்று காட்டுவர் இவ்வாறான குறிப்புரைகள் தீபிகை உரையில் பல இடங்களில் காணக்கிடக்கின்றன.[21]

### 3-1-6 தமிழ் வடமொழி இலக்கணக் குறிப்புக்காட்டல்

சுவாமியின் நன்னிகரில்லாத் தமிழ்மொழியிலுள்ள ஆழ்ந்த இலக்கண அனுபவங்களும் வடமொழியிலுள்ள யாப்பறி புலமை யும் தீபிகை உரையுள் பலபல வகைகளில் பரந்து வந்துள்ளன. இஃது ஐந்தாவது இயலில் எண்ணப் பெறுகிறது.[22]

சான்றுகள்

நெருப்பாக உம்மை நோக்கியிருத்தல்
தேசம்—தேஜஸ் என்ற வடசொல் திரிபு[23]

### 3-1-7 தத்துவ நோக்கில் பொருள்கூறல்

இந்திய சமயங்களில் பொதுவாகத் தத்துவம், சமயம் ஆகிய இரண்டும் இணைந்தே காணப்பெறுகின்றன. வைணவ சமயத்தில்

இருபத்தாறு தத்துவங்கள் உள்ளன. இருபத்தாறு தத்துவங்களையும் வைணவ அதிகாரிகள் அறிவுள் பொருள், அறிவில் பொருள் இறைவன் (ஈச்வரன்) என மூன்றாகப் பிரிப்பர்[24] இம்முப்பொருள்களுள் அறிவுள் பொருளான இறைவனை உள்ளபடி அறிந்து அவனையே நெறியாகப்பற்றி அவனுகப்புக்கே ஆட்பட்டு அடிமை செய்யவேண்டும் இதனை விவரிப்பது ஐம்பொருள்களான அர்த்த பஞ்சகமாகும் அதாவது இறைநிலை, உயிர்நிலை, தக்கநெறி, தடை, பேறு என்பன இதனை நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழி உணர்த்துவதாகக் கூறுவர்[25] அத்தகைய தத்துவங்களையெல்லாம் ஆங்காங்குத் தீபிகை உரையில் பரக்க உரைத்துள்ளார் சுவாமி.

**சான்றுகள்**

இறைவனுக்கும் ஆன்மாக்களுக்குமுள்ள ஒன்பது வகை உறவுகளை "பிதா ச ரக்ஷக: சேஷி" என்ற சுலோகம் உணர்த்துகிறது. அந்த உறவுகளுக்குள் கணவன் மனைவி என்றசுலோகம் உணர்த்துகிறது. அந்த உறவுகளுக்குள் கணவன் என்ற உறவின் கீழ் இறைவன் கணவனாகவும் ஆழ்வார் மனைவியாகவும் பரிமாறுகிறவகை இயல்புக்குத் தக்கதாகும் "மின்னிடை மடவார்கள்" என்ற உடல் பதிகத்தில் அமைந்துள்ளதைக் காட்டுகிறார் சுவாமி இதனால் திபாந்திரத்தில் சொல்லப்பட்ட நாராயண பதத்திலுள்ள பொருளைச் சுவாமி எடுத்துக்காட்டியுள்ளது இங்குக் காணத்தக்கதாகும்[26]

பெரிய திருமந்திரம் எனப்படும் 'ஓம் நமோ நாராயணாய'' என்ற தொடரில் பிரணவத்தில் அடங்கிய உகாரத்தின்பொருளாக அநந்யார்ஹத்துவம் [பிறர்க்கு உரியவனாயிரா திருத்தல்] சொல்லப்படுகிறது இந்தத் தத்துவப் பொருளைச் சுவாமி "கருமாணிக்க மலை" என்ற பதிகத்தில் ஆழ்வாருடைய பிறர்க்காளாகாத் தன்மையை எடுத்துரைக்கையில் கூறுகின்றார்[27]

## 3-1-8 இறைவனின் திருநாமங்களைச் சொல்லல்

'அஞ்சிறைய மடநாராய்'' என்னும் பதிகத்தில் ஆழ்வார் தம்மைப் பிரிந்து சென்ற இறைவனுக்குத் தூதுவிடும் தலைவி நிலையில் பாடுகிறார்.

இறைவன் தனது இயற்கைக் குணத்தால் தம்மோடுகலந்தபின் தம்முடைய குறைகளை [தோஷங்களை]க் கண்டு பிரிந்ததாகவும் ஆழ்வார் கூறுகிறார். மேலும் தம்மிடத்தில் முழுதும் குறைகளே

இருப்பினும் அவனிடம் பொறுமைக்குணம் நிரம்பியுள்ளதால் அக்குறைகளைக் கணிசிக்கத் தேவையில்லை என்பர். ஆனால் தம்முடைய குறைகள் அந்தப் பொறுமைக் குணத்தை மறந்துவிடச் செய்ததோ என ஆழ்வாராகிய பராங்குசநாயகி வருந்தித் தூது விடுகிறாள். இவ்விடத்தில் நம்பிள்ளை நயமாக இறைவனை 'அருளாத நீர்' என்ற திருநாமத்தையிட்டு ஆழ்வார் தூது விடுவதாக எடுத்தியம்புவதைச் சுவாமியும் ஏற்று அதற்கு மேலும் விளக்கம் தந்து சுவைபட இறைவனின் திருநாமங்களைச் சொல்லி யனுபவிக்கும் பாங்குத் தீபிகையுரையில் இடம் பெற எழுதுகிறார்.[28] ''அருளாத நீரருளி'' என்னும் பாசுரம் இப்பதிகத்திற்கு உயிர்ப்பாசுரமாக அமைந்ததையும் சுவாமி சுட்டுகிறார் [29]

இவ்வாறு இறைவனுக்கு 'என்னுள் கலந்தவன்'',[30] தெய்வ வாரி''[31] முதலான திருநாமங்களைச் சாத்தி ஆழ்வாரழைக்கும் அழகு காணப்பெறுகிறது

## 3-1-9 ஒவ்வொரு திருவாய்மொழியின் திரண்ட கருத்தைக் கூறல்

ஒவ்வொரு பத்திலும் ஒவ்வொரு பதிகத்திற்கு அவதாரிகையாக அப்பதிகத்தின் பத்துப் பாசுரங்களின் திரட்சியான கருத்துக்களை எடுத்துக்காட்டுவர் சுவாமி. இதனால் இறைவனின் குணங்களையும் சிறப்புப்பெற்று விளங்கும் பாடல்களையும் அறியமுடிகிறது. எடுத்துக்காட்டாக ''ஏழையராய்ச் செய்யரோடு சோத்ததும்'' என்னும் பாடலின் முடிந்த கருத்தான இறைவனுடைய பற்பல விளையாடல்களை வாயாரச் சொல்லி நன்றாக அனுபவித்து, அதனால் ஆழ்வார் உண்டான பெருமிதத்தைப் பெருமிடறு செய்து வெளியிடுவதாகக் கூறுவர் [32] இங்ஙனம் ஒவ்வொரு பதிகத்தில் உறைந்த திரட்சியான கருத்தை எடுத்துக்காட்டுவர் சுவாமி.

''ஆராவமுதே'' என்ற பதிகத்தில் இறைவன் ஆழ்வார்க்கு முகம் கொடுக்காமையாலே வருந்தி அவனைக் கூவுவதாக அமைந்த பாடல்களின் திரண்ட கருத்தை அவதாரிகையில் காட்டுவது இங்குச் சான்றாக அறியற்பாலதாகும் [33]

## 3-2- முன்னோர் உரைகளின் சொல் பொருளாட்சிகளைப் பயன் படுத்தல்

''முன்னோர் மொழிபொருளே யன்றியவர் மொழியும்
பொன்னேபோல் போற்றுவம்''[34]

என்பதற்கிணங்கப் பிள்ளான் முதலான ஆசிரியர்கள் ஐவரின் உரைச் சொல்லாட்சிகளையும் பொருளாட்சிகளையும் உரிய

இடங்களிலே சுவாமி எடுத்துக் காட்டியுள்ளார். இவற்றில் பெரும்பாலும் நம்பிள்ளை உரையும் பிள்ளான் உரையும் பேரிடம் பெற்றுள்ளன. பெரியவாச்சான் பிள்ளை உரையும் நஞ்சீயர் உரையும் வாதி கேசரி ஜீயர் உரையும் சிறுபான்மையளவில் இடம் பெற்றுள்ளன. எனவே நம்பிள்ளை அருளிய உரை தீபிகையில் இடம்பெறுதலை ஆராயும்போது கீழ்க்கண்ட இருபது பாகுபாடுகளில் சுவாமி ஈட்டின் தொடர்களைக் காட்டி ஆராய்ந்துள்ளமை தெரியவருகிறது.

1. ஈட்டின் தொடர்களை விளக்குதல்
2. இறைவனின் சிறப்பைச் சொல்லல்
3. ஆழ்வாரின் தன்மையை அனுபவித்தல்
4. சொல்லாட்சியின் கருத்தை விளக்குதல்
5. உபதேசம் செய்தல்
6. பாடலின் இனிமையைக் காட்டல்
7. காரணம் காட்டல்
8. ஆழ்வார் சொல்லை விளக்குதல்
9. சொற்சேர்த்தியின் அழகைக் காட்டல்
10. நயம் பாராட்டல்
11. உட்பொதிந்த கருத்தைக் காட்டல்
12. ஐதிகத்தைக் காட்டல்
13. ஆதாரம் காட்டல்
14. பொருளாட்சிகளை [நிர்வாகம்] காட்டி உரைத்தல்
15. வேறுங்கள வரலாறு காட்டல்
16. உடன்பட்ட கருத்தை நிலைநாட்டல்
17. இலக்கணம் மிக்க அருமை காட்டல்
18. அச்சுப்பிழையைத் திருத்திக்காட்டல்
19. பாடபேதம் காட்டல்
20. முன்னோர்கள் இலக்கண வல்லுநர் என நிறுவுதல்

### 3-2-1 ஈட்டின் தொடர்களை விளக்குதல்

ஆழ்வார் பாடல்களின் பின்னணியிலிருக்கும் கருத்தை நம்பிள்ளை. அக்கருத்தின்கண் மறைந்த உட்பொருளை எளிமையாக இன்று நாம் அறியும்படித் தக்க உதாரணங்களைக் காட்டி விளக்குவர் சுவாமி.

நம்மாழ்வார் நெஞ்சென்னும் உட்கண்ணால் இறைவனைக் கண்டது மட்டுமின்றிப் புறக்கண்களாலும் அனுபவிக்கப் பாரிக்கிறார். அது கிடையாமையாலே நாயகி நிலைமையை அடைந்து பேச்சின்றி மயங்கிக் கிடக்கிறார். அதுகண்ட அவளது திருத்

தாயார் இந்நிலையை அறியும் பொருட்டுக் கட்டுவிச்சியைக்குறி கேட்க அவன் 'கொள்ளுந் தரம் சரியல்ல என்று கூறத் தோழி நாயகியின் நோயறிந்து பரிகாரம் சொல்லுகிறார்கள் 'தீர்ப்பாரையாமினி'' என்னும் பதிகத்தில், இப்பதிகத்தில் கீழ்மையினால்' என்றபாடலில்'ஏழ்மைப்பிறப்புக்கும் சேமம[35]என்பதற்கு ஈட்டிலே 'செம்பருத்தார் கைக்குப் போகவேணுமோ' என்ற பொருள் வழங்குகிறார் நம்பிள்ளை இத் தொடரை எடுத்துக் காட்டிச் சுவாமி விளக்கம் தருவது பொருட்சுவை மிகுந்தது. அதாவது நெல் முதலானவற்றை அறுத்தால் அதை ஒரு கட்டாக கட்டுவதற்குக் கயிறுதேடவேண்டும். செய்யை அறுத்தால் அதைக் கொண்டே கட்ட முடியும். வேறு கயிறு தேடுவதில்லை. அவ்வாறே பராங்குச நாயகியின் நோய்க்குக் கண்ணன் கழல்களை வாழ்த்துவது தவிர வேறு எத்தத் தெய்வத்தின சம்பந்தத்தின வாசனையையும் பொறுக்க மாட்டாத ஆழ்வாரின் பிறிதொன்றுக்கில்லாச் சிறப்பையும் எடுத்துக்காட்டுவது அறிய முடிகிறது[36] இங்ஙனம் பல இடங்களில ஈட்டின் தொடர்களைச் சுவையாக விளக்கிக் காட்டுவர் சுவாமி.

### 3-2-2 இறைவனின் சிறப்பைச் சொல்லல்

தீபிகை யுரையில் பதவுரையாகவும் கருத்துரையாகவும் தெளிவுரையாகவும் காட்டவல்ல சுவாமி சிற்சில இடங்களில இறைவன் மீது அளவு கடந்த அவாவுந்தத் தாம் சொல்லமாட்டாமல் அப்படியே நம்பிள்ளையின் தொடரைக் காட்டுவர்.

''உடையார்ந்த ஆடையன்'' என்ற பாடலில் 'உடையார்ந்தவாடையன் 'கண்டிகையன்', 'உடை நாணினன்', புடையார் பொன்னூலினன்' என்று எம்பெருமானுடைய ஆபரண அழகை நம்பிள்ளை உரைத் தொடர்களைக் கொண்டே சுவாமி பரம போக்யர் என்று அனுபவிப்பர்

### 3-2-3. ஆழ்வாரின் தன்மையை அனுபவித்தல்

ஆழ்வார் தன்மையை அனுபவிக்கும் இடந்தோறும் நம்பிள்ளை உரையைக் காட்டி இன்சுவைய வடிவெடுத்ததாகப் பெருமிதங் கொள்வர் சுவாமி.

'திரிவிக்கிரமன்' என்ற பாடலில் 'ஆழ்வாருடைய பழைய நெஞ்சைத் திருத்தினது மட்டுமன்றியே கருவுகலத்திலே ஒரு நெஞ்சைக் கொடுத்துதாககூறுவர்[38] கருவுலகம் என்பது கோவில்களில் சிறந்த ஆபரணங்கள் வைக்குமிடமாகும் அதிலிருந்து ஒரு மனத்தை எடுத்து நன்கொடையாக ஆழ்வாருக்குக் கொடுத்தானாம் இப்படிக்கொடுத்தமையால் 'மருவித்தொழும் மனமே தந்தாய்' என்று கொண்டாடுகிறார் ஆழ்வார். இவ்வாறு ஆழ்வார் தன்மையை எடுத்துக் காட்டுவர் சுவாமி.

### 3-2-4. சொல்லாட்சியின் கருத்தை விளக்குதல்

ஆழ்வார் பாடலிலமைந்த சொல்லின் கருத்தைவிளக்குவதற்கு நம்பிள்ளை அச்சொல்லுக்குரிய பொருளை ஆழ்வார் உள்ளக் கிடக்கைக் கேற்ப உரைப்பர். அச்சொல்லாட்சியை விளக்கமாகத் தீட்டிகை உரையில் எடுத்துக் கூறுவர்.

'நொந்தாராக் காதல்' என்ற பாடலில் ஆழ்வாராகிய பராங்குச நாயகி தன் விளக்கைக் கண்டு அதன் வெப்பத்தைப் பார்த்துத் தன்னைப்போல் எம்பெருமானது பிரிவால் அதுவும் வெதும்புவதாகக் கூறுவர். இப்பாடலில் நந்தா விளக்கமே' என்ற சொற்றொடருக்கு 'ஜ்வாலாபேத அநுமானமிருந்து பார்க்கிறாளன்றோ' என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்துவார்.[39]

இவ்வாறு நம்பிள்ளையின் சொல்லாட்சியைக் காட்டி அதற்குத் தக்க கருத்தைப் பல பாசுரங்களில் எடுத்துரைப்பர்.

### 3 2-5. உபதேசம் செய்யும்போது ஈட்டுத் தொடர்களைக் காட்டல்

'கருமமும் கரும பலனுமாகிய' என்ற பாடலில் இறைவனின் குணங்களைக் கேட்டால் விகாரப் படாமலிருப்பதாகிய அல்லது வேறுபடாமலிருப்பதாகிய பகுத்தறிவு இல்லாமை (அவிவேகம்) தவிர்த்து அவனது திருக்குணங்களை நினைத்து வாய்வந்தபடிச் சொல்லுங்கோள் என்று உபதேசிக்கிறார் ஆழ்வார். இப்பாடலில் 'ஒருமை மனத்தினுள் வைத்து' என்ற தொடருக்கு ஈட்டுத்தொடரைக் காட்டுகிறார் சுவாமி. அதாவது 'ஒரு பயனைப் பெறுவதற்காக அன்றியே நெஞ்சிலே இருக்கையே பயனாகக் கொண்டு நெஞ்சிலே வைத்து அவன் குணங்களைப் பற்றி வாய்வந்தபடி சொல்லுங்கோள்' என்பதை விளக்குகிறார்.[40]

இவ்வாறு ஆழ்வார் உபதேச பரமாக வருமிடந்தோறும் ஆழ்வார் சொல்லுக்கேற்ப அமைந்த ஈட்டில் தொடர்களை எடுத்துக்காட்டுவர் சுவாமி.

### 3, 2, 6, பாடலின் இனிமையைக் காட்டல்

ஆழ்வார் சொற்களின் இனிமையறிந்து நம்பிள்ளை பொருள் வழங்குவர். ஆழ்வார் சொற்கள் ஒவ்வொன்றும் இன்சுவையாயிருப்பினும் அச்சொற்களின் நயத்தை நோக்கி நம்பிள்ளை பொருளிடுவர். இவற்றை அனுபவித்த சுவாமி பற்பல இடங்களில் பாடலின் பல சொற்களுக்குப் பொருள் வழங்கியிருப்பினும் சொல்நயத்தை நோக்கி நம்பிள்ளை அருளிச் செய்ததை எடுத்துக்காட்டுவர்

'திருவாறன்விளை' என்கிற திவ்விய தேசத்து இறைவனைக் காண வேண்டுமென்று ஆசைப்படுகிறார் ஆழ்வார். இறைவன் ஆழ்வாரைக் காணவேண்டுமென்று முயன்று வெற்றியையுடைய கருடன் மேலே ஏறி வருவானாம். அப்படிப்பட்டவரை நடு வழியிலே கண்டு பெருமிதம் அடைகிறார் ஆழ்வார். இக்கருத்தை 'ஆடும் பறவை மிசைக்கண்டு' என்ற இடத்தில் சொல்நயத்தை நோக்கி நம்பிள்ளை உரைத்ததை அப்படியே சுவாமி எடுத்துக் காட்டுவர்.[41]

### 3 2. 7. காரணங் காட்டல்

'வேதம் வல்லார்களைக் கொண்டு' என்ற பாடலில் வைணவர்களைப் புருஷகாரமாகக் [சிபாரிசு]கொண்டு இறைவன் திருவடிகளைப் பணியுமாறு ஆழ்வார் பணிக்கிறார். கீழ்ப் பாட்டில் 'வணங்கீர்கள் மாயப்பிரான் தமர்வேதம் வல்லாரையே' என்று வைணவர்களையே முக்கியமாகக் கொள்ளும்படி சொல்லு கிறது.[42] ஆனால் இப்பாசுரத்தில் முரணாக உள்ளது பற்றி நம்பிள்ளை அருளியதற்குக் காரணம் காட்டுகிறார் சுவாமி. அதாவது, வைணவர்கள் அடையத்தக்கவர்கள்; ஆனாலும் தம்மோடு ஒன்றானவர்களிடம் அன்பு, நம்பிக்கையுண்டாவது அரிதாகையாலே அவர்களை உயர்ந்த தலைவர்களாகக் கொள்ள இசைவு உண்டாகாது. ஆயினும் அவர்களைப் புருஷகார மாகவாவது கொள்ளப் பாருங்கோள் என்கிறார்.[43]

இவ்வாறு ஈட்டின் தொடர்களில் புரியாத நிலை தவிர முன் பின் பாடல்களில் நம்பிள்ளையின் கருத்தைக் கூறிச் சமாதானம் செய்வர் சுவாமி.

### 3-2-8 ஈட்டுத் தொடரைக் காட்டி ஆழ்வார் சொல்லை விளக்குதல்

சுவாமி ஆழ்வார் சிறத்து ஆழ்ந்த அனுபவத்தினைக் கொண்டவரானதாலும் அவர் வழியாக இறைவனை அனுபவிப்ப வரானதாலும் ஆழ்வார் சொற்களை விளக்கும்போது நம்பிள்ளை உரைத்தொடரைக் காட்டி அனுபவிப்பர்.

'அஞ்சிறைய மடநாராய்'[44] என்னும் பதிகத்திலே முதல் பத்துப்பாட்டுக்களில் ஆழ்வார் தானான தன்மையை இழந்து கதறினார். கதறின அளவிலே இறைவன் ஆழ்வாரை இந்நில வுலகத்தவர் இழக்ககூடாதென எண்ணிப் பதறி வந்து சேவை சாதித்தான். இப்படி முகங்காட்டினபடியைக் கண்டு 'அளவியன்ற ஏழுலகத்தவர் பெருமான கண்ணனை' என்கிறார் ஆழ்வார்.

இவ்விடத்தில் 'கண்ணனை' என்பது இறைவன் வந்து முகங் காட்டிற்றிலன் என்கிற குற்றந் தீரவந்து முகங்காட்டுகை யினாலே அடியார்க்கு எளியனானான். இப்படி அடியார்க்கு எளியனானவன் கண்ணன் ஆனபடியாலே இங்குக் 'கண்ணனை' என்று மேலும் சொல்லுகிறார ஆழ்வார். இவ்வாறு ஆழ்வார் சொல்நயத்தை விளக்க ஈட்டின் தொடர்களைக் காட்டுவர் சுவாமி [45]

## 7-2-9 ஆழ்வார் பாடலிலுள்ள சொற்சேர்த்தியின் அழகை காட்டல்

ஆழ்வாருடைய நிலைமைகளைச் சொல்லும் நோக்காகக் கொண்ட நம்பிள்ளை உரையில் இறைவனைப் பற்றி ஆழ்வார் சொல்லும் சொற்சேர்க்கியினால் கிடைக்கும் இனிமைப் பொருளை நம்பிள்ளை அனுபவித்து உரைப்பர். இவ்வனுபவங் கள் உள்ளடங்காத் தன்மையன. இவை சுவாமி அனுபவித்து எடுத்துக் காட்டினாலன்றி விளங்காப் பொருண்மை படைத்தன.

'தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை' என்ற இடத்திலே தாமரைக் கண்ணனான இறைவனை 'விண்ணோர்களான நித்ய சூரிகள் முறைகெடத் தோத்திரம் செய்கிறார்கள் இவ்விடத்திலே நம்பிள்ளையின் அனுபவம் தனிப் பட்டதாகும். அதாவது இறைவனுடைய திருக்கண்களிலே தோற்று நித்யசூரிகள் சன்னிபாதத்தால் ஆடுபவர்களைப் போல் முறைகெடத் தோத்திரம் செய்கிறார்கள் என்று சொல்கிறார். இதனைச் சுவாமி, இறைவன் கண்ணழகைக் காட்டி அவர்களை வாய்வெருவச் செய்தது போல ஆழ்வார் திறத்தும் செய்தருளினன் என்று குறிப்பிடுவர். [46]

## 7-2-10. ஈட்டின் நயம் பாராட்டல்

சாத்திரங்களின் பொருள்களை அற்புதமாக அருளிச் செய்வ தோடல்லாமல் உலகவிஷயங்களிலும் பரந்த அறிவு படைத்தவர் நம்பிள்ளை ஆவர். அவர் தம் இவ்விரு திறன்களும் புலப்படுமாறு உரைநயம் காட்டி உணர்த்துவர் சுவாமி 'சக்கிரமென்று தம்மைத் தாமே' என்ற பாடலில் 'வைகி மற்றொன்று கூறுவர்' என்ற இடத்தில் வெறும் சாத்திரப் பொருள்களாகவே இருந்தால் நற் போது போக்குபவர்கள் தூங்கிவிழுவார்கள் என்று நம்பிள்ளை நடுவே உலக விஷயமான இனிய சொற்களைக் கூட்டி உரைப்பர் என்று சுவாமி எடுத்துரைப்பர் [47]

இவ்வாறு பல இடங்களில் நம்பிள்ளை நயம்படவுரைப்பது சுவாமி வாயிலாகக் காணமுடிகிறது.

## 7-2.11 உட்பொதிந்த கருத்தைக் காட்டல்

நம்பிள்ளை உரைகளை எடுத்துக்காட்டுவது போலவே தீபிகையிலே முன்னோர்களின் பொருளாட்சிகளில் பொதிந்துள்ள கருத்துக்களை எழுதிக்காட்டுவர் சுவாமி

'ஒன்றிய திங்கள்' என்ற பாடலில் 'நின்ற குன்றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும்' என்னும் தொடருக்குப் பிள்ளானுடையவும், நஞ்சீயருடையவும் ஈட்டில் அமைந்துள்ள பொருளாட்சிகளை எடுத்துக்காட்டுகிறார். இதன் உட்கருத்தைச் சுவாமி காட்டும்போது நின்றகுன்றத்தினை நோக்கி' என்பதற்கு மேலுள்ள பதமான நெடுமால் என்பதிலுள்ள 'மால்' என்பதற்குப் பெருமைப் பொருள்களிலே பெரிய வடிவு உடையவன் திரிவிக்கிரமன் என்று பிள்ளான் எடுத்துக்காட்டிய பொருளாட்சியின் உட்கருத்தைக் காட்டுவர். ஆனால் நஞ்சியர் 'மால்' என்பதற்கு 'மையல்' என்ற பொருளைக் கொண்டு, நின்ற ஒரு மலையைப் பார்த்து உலகையும் அளப்பதற்கு வளர்ந்தருளி இறைவனின் மையலை அறியாமோ என்பதான உட்கருத்தைச் சுவாமி எடுத்துக்காட்டுவர்.[48]

## 3-2-12. ஈட்டில் காட்டிய ஐதிகத்தைக் காட்டல்

'ஐதிகம்' என்பது பரம்பரையான கதைகளைச் சொல்லுதலாகும். புராணம் சொல்பவர்கள், தாங்கள் சொல்லும் கருத்துக்களுக்கு மேற்கொள்ளும் பிரமாணங்களில் (அளவைகளில்) ஒன்றாக இதனைக் கொண்டுள்ளனர். அதாவது ப்ரத்யக்ஷம் அனுமானம் முதலியவற்றைப் போல ஐதிகமும் ஓர் அளவை என்றபடி[49] தமிழிலக்கிய உரையாசிரியர்களும் சங்க இலக்கியங்களின் வாயிலாகஐதிகங்களைக்காட்டியுள்ளனர்.மணிமேகலையில் ஐதிக அளவை ஏழாம் அளவையாகக் கொள்ளப்பட்டுள்ளது.[50] ஆனால் வைணவ உரை ஆசிரியர்கள் ஆழ்வார் ஆசாரியர்களின் வாழ்க்கைச் செய்திகளையும், அரசியல் நிகழ்ச்சிகளையும் உள்ளடக்கிய உரைவிளக்கங்களையே ஐதிகம் என்பர்[51] சுவாமிகளும் கதையோடு கூடிய அர்த்த விசேஷங்களை ஐதிகம் என்று வழங்குவதாகக் கூறுவர்.[52] இவ்வகையான ஐதிகங்கள் பல இடங்களில் திருவாய்மொழிக்கமைந்த தீபிகையுரையில் காணப்பெறுகின்றன, இவை பெரும்பாலும் ஆசாரியர்களின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளை ஆழ்வார் பாடிய பாடலோடு ஒப்பிட்டு அதனால் ஏற்பட்ட அனுபவத்தைச் சொல்லுவதாக இருக்கின்றன.

பிள்ளான் என்னும் ஆசாரியர் தமது இறுதிக்காலத்தில் 'கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ' என்கிறபடியே தம்மை

அழைத்துக்கொள்ளும் காலம் இன்னம் கிட்டியிருக்க இறைவனைப் பலகாலும் வருந்திச் சொல்லத் தம் சீடரான நஞ்சீயர் அழுவதைப் பார்த்து அங்குப் (பரமபதம்) போய்ப் பெறப் போகும் பேறு இதைக் (பூலோகம்) குறைந்ததன்று என்பதை நஞ்சீயருக்குத் தெரிவிப்பர் பிள்ளான்

இவ்விடத்தில் ஆழ்வார் பாடலை நோக்கும்போது, அவரை அழைத்துக்கொள்ளும் விஷயத்தில் இறைவன் நினைவில் வேறுபாடு ஏதும் இல்லை. ஏதோ ஒரு நாளில் தம்மை அழைத்துக் கொள்ள அவன் எண்ணியுள்ளமை உண்மையே. ஆனாலும் அந்த நாள் இன்று நாளையாம்படி சிக்கியிருக்கக் கூடாதோ என்பதே 'கூவிக்கொள்ளுங்காலம் இன்னங் குறுகாதோ' என்ற தொடரால் வெளிப்படுகிறது. இங்கு நம்பிள்ளை தம் முன்னோரான பிள்ளானுடைய இறுதிக் காலத்தில் நடந்த நிகழ்ச்சியைத் தம் ஆசாரியரான நஞ்சீயரின் வாயிலாகக் கேட்டுத் தம்முடைய உரையில் ஒப்பிட்டு உரைப்பர்.[53]

முன்னோர் 'மரபு வழிவந்த சுவாமிகளும் இந்த மணியான ஐதிகத்தை அனுபவித்துத் தம்முடைய தீபிகை உரையில் காட்டி முன்னோர்களின் பெருமையைப் புலப்படுத்தியுள்ளார்.[54]

இறைவனுடைய சம்பந்தம் பெற்ற பொருள்களையும், இறைவனுக்கும் போலியான பொருள்களையும் கண்டு களிப்பர் தலைவியான ஆழ்வார். அவ்வகையில் 'திருவுடை மன்னரைக் காணில்' என்ற பாடலில் முழுமையான செல்வத்தைக் கண்டால் திருமகள் கொழுநனான இறைவனைக் கண்டதாகக் கூறுவர். இவ்விடத்தில் ஓர் ஐதிகத்தைக் காட்டி விளக்குவர் நம்பிள்ளை. அரசன் ஒருவன் யானையின் கழுத்தில் ஏறும்போது அவன் ஏறும் விதத்தை நாதமுனிகள் என்னும் ஆசாரியர் கண்டார். அதாவது அரசன் தன் சிற்றரசனுடைய தலையில் அடியிட்டு யானையின் கழுத்தில் ஏறினான். இறைவன் பிரமன் முதலானோர் தலையில் அடியிட்டுப் பெரிய திருவடியான கருடன் மீது ஏறும் விதம் இவ்வாறாகத்தான் இருக்கும் என்று சொல்லி மயங்கினார். இது போல் ஆசாரியர்கள் இறைவனுடைய போலி கண்டு மயங்கியதைக் காட்டுவர். சுவாமிகளும் இதனைப் பின்பற்றித் தம் உரையில் காட்டியுள்ளார். இதனால் நாதமுனிகளின் உண்மையான இறையன்பு புலனாகின்றது.[55]

### 3-2-13. இதிகாசம் காட்டல்

வழிவழியாக வருகிற வரலாற்றுச் செய்திகளைக் காட்டுவதே இதிகாசம் எனப்படும். உரையாசிரியர்கள் எழுப்பும் உரைகள்

முழுமையான இதிகாசங்களைப் பிரித்துச் சொல்லாது கருவை மட்டும் விளக்குமாறு அமையப்பெறும். இதனால் நூலின் கருத்தும் உரையினால் ஐயமின்றி விளங்கும். இதனையும் புராணம் சொல்பவர்கள் தாங்கள் சொல்லும் கருத்துக்களுக்கு ஆதாரமான அளவைகளில் ஒன்றாகக் கொள்வர்.[56] இவ்வகை வரலாற்றுச் செய்திகள் திவ்வியப் பிரபந்த உரைகளில் வைணவ உரையாசிரியர்கள் கையாண்டுள்ளனர் அதனைப் பின்பற்றி சுவாமி பல இதிகாசங்களைக் காட்டியுள்ளார்.

'நெடுமாற் கடிமை' என்கிற பதிகத்தின் பயனுரைக்கும் திருநாமப்பாட்டான 'நல்ல கோட்பாடு' என்ற பாடலில் 'நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே' என்ற தொடரால் குடும்பத்தோடு அடியார்களுக்கு அடிமைசெய்யும் சிறப்புடனே மனைவாழப் பெறுவர் என்னும் பொருள்பட உரைப்பவர் ஆழ்வார். ஆழ்வாருடைய பாடலில்ஆழங்காற்பட்ட திருக்கோட்டியூரில் வாழ்ந்த செல்வநம்பி என்பவரின் வாழ்வில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் காட்டுவர் நம்பிள்ளை சில ஸ்ரீவைஷ்ண வர்கள் ஒரு சமயம் திருவனந்தபுரத்துக்கு யாத்திரையாகப் பெரும் திரளோடு செல்லும் போது திருக்கோட்டியூர் செல்வநம்பி வீட் டிற்கும் சென்றனர். அப்போது செல்வநம்பி ஊரிலிலலை.வீட்டில் நூறு வித்துக்கோட்டைநெல் (ஒருகோட்டை என்பது 21 மரக் கால் அளவு) இருந்தது, அவருடைய நங்கையார், வருந்தி அழைப் பினும் வரமாட்டாத பெரியோர்கள் தாமாகத் தங்கள் வீட்டிற்கு வந்தது பற்றி மகிழ்ச்சியுற்று அவர்களுக்கு உணவளித்தார். மறு நாள் செல்வ நம்பி வந்து தானியம் ஒன்றுமில்லாமையைக் கண்டு கேட்க, 'பரமபதத்தில் விளைவதாக வித்திட்டேன்' என்று கூறி னார். இதனால் அப்பெண்மணிக்கு அடியார் திறத்துள்ள அடிமை திறம் அறிய முடிகிறது இப்படிப்பட்ட குடும்ப வாழ்க்கை ஆழ் வாருடைய திருநாமப் பாட்டின் பயனால் அமைந்தது என்றும் அறிய முடிகிறது.

'நீர்மையில்' என்ற பாடலில் அடியவர்களான பாண்டவர் களின் விரோதிகளைப் போக்கின இறைவனுடைய திருக்குணங் களை நினைத்து ஈடுபடாதவர்கள் 'பெற்றதாய் வயிற்றினைப் பெருநோய் செய்யவே பிறந்தவர்கள்' என்கிறார். இப்பாடலில் 'ஊன்மல்கி மோடு பருப்பார் உத்தமர்கட்கென் செய்வார்' என்பதற்கு உத்தமர்களுக்கு இறைவனே தாமும் தன் செல்வங் களையும் கொண்டு உதவி செய்யாநிற்க, சில 'பாவிகள் பாகவதர் களுக்குத் தொண்டு செய்யும் அந்தப் பாக்கியத்தை இழந்தவர்களா

கிறார்கள் என்ற பொருள்பட உரைப்பர். இதற்குத் தக்கபடி கூரத்தாழ்வானுக்கும் பெரிய நம்பிக்கும் சோழராஜ சபையில் நடந்த நிகழ்ச்சிகளை எடுத்துரைப்பர்.[57] இதனால் இறைவன் தன்னையும் தன் செல்வத்தையும் அடியார்களுக்கு உதவி செய்வான் என்பது புலனாகிறது.

### 3-2-14. முன்னோர் பொருளாட்சிகளைக் காட்டி (நிர்வாகம்) செய்தல்

இலக்கண உரையாசிரியர்கள் தம் உரையேயன்றித் தமக்கு முன்பிருந்த உரையாசிரியர்களின் பொருளாட்சிகளையும் பயன் படுத்தி வந்தனர். இவ்வகை நெறியைப் பின்பற்றி இளம்பூரணர் தாம் உரைத்த தொல்காப்பிய உரையில் களவியல் உரைக் கருத்தினையும் பின்பற்றி உரை அமைத்தது காணமுடிகிறது.[58]

இவ்வாறே வைணவ உரையாசிரியர்களில் நாதமுனிகள் தொடக்கமாக வாய்வழியாக வழங்கிவந்த பொருளாட்சிகள் ஏட்டில் ஏடுபடுத்தாமலிருந்தன நம்பிள்ளை காலத்தில்தான் அவர்தம் உரையில் தமக்கு முன்பிருந்த ஆசாரியர் பொருளாட்சிகள் இடம்பெற்றன. இவ்வகை நோக்கில் தீபிகை உரையைக் காணும் போது, ஈட்டில் மிகுதியாக வந்துள்ள ஆளவந்தார், திருமலையாண்டான், எம்பெருமானார், பிள்ளான், கூரத்தாழ்வான், பட்டர், எம்பார், நஞ்சீயர், பிள்ளைத் திருநறையூர் அரையர் முதலானோர்களின் பொருளாட்சிகளும் ஈட்டில் சிறுபான்மையளவிலமைந்த திருமலைநம்பி, ஆண்டான் [முதலியாண்டான்], அனந்தாழ்வான அம்மங்கி அம்மாள், சிற்றாட் கொண்டான், கொட்டை நம்பி முதலானோர்களின் பொருளாட்சிகளும் சுவாமி தம் தீபிகை உரையில் கையாண்டுள்ளது அறியமுடிகிறது. இவை

1 பெயர் சுட்டாமல் பொருளாட்சிகளைச் சுட்டல்;

2 பொருளாட்சிகளைக் காட்டி அதில் சிறந்ததாக அமைந்துள்ளதைக் காட்டல்;

3 பொருள் விளங்காப் பொருளாட்சிகளைப் பிரித்துக் கூறல்

என்ற மூன்று வகைகளில் ஆராயப்பட வேண்டியுள்ளன.

#### 3 2-14-1-பெயர் சுட்டாமல் பொருளாட்சிகளைக் காட்டல்

'பொலிக பொலிக பொலிக' என்ற பதிகம் இந்த விபூதியிலுண்டான வைணவக் கட்டத்திற்கு மங்களாசாஸனம்[வாழ்த்து]

பண்ணுவதாக அமைவதாகும். இதில் ஆழ்வாருடைய வைணவ ஸ்ரீ [திரு] யைக் காண்பதற்காக நித்ய சூரிகள் விண்ணுலகில் நின்றும இவ்வுலகில் எழுந்தருள, அவர்களுக்கு மங்களாசாஸனம் வழங்குவதாகச்சில ஆசாரியர்கள் பொருள் கூறுவர். இவ்விடத்திலே ஈட்டில நம்பிள்ளை இரண்டு ஆசாரியர்களின் பொருளாட்சிகளைக் காட்டிச் சமாதானம் செய்வர். இவற்றைப் பின்பற்றிய சுவாமி ஆசாரியரின் பெயர் காட்டாமல் அவர்கள் அனுபவத்தில் மூழ்கிப் பொருள் உரைப்பர். அவற்றை ஈட்டோடு ஒப்பிட்டுக் காணும் போது, 'இந்த நிலத்திலே உள்ள வைணவர்களுக்கு நேராக இப் பதிகத்தால் வாழ்த்து தெரிவிப்பதாக' எம்பெருமானார் பொரு ளாட்சியையும், இந்த நிலத்திலுள்ள வைணவர்களைக் காண்ப தற்காக வேறு உலகில் நின்றும் வந்தவர்களுக்கு வாழ்த்து தெரி விப்பதாக' ஆளவந்தான் பொருளாட்சியையும் தழுவியது உணர முடிகிறது. இதனை அரண்செய்யும் வகையில் ஆசாரிய இருதய நூற்பாவையும் எடுத்துக் காட்டுவர் சுவாமி [59]

### 3-2-14-2. பொருளாட்சிகளைக் காட்டிச் சிறந்ததை எடுத்துக் கூறல்

'அருள்தானினியா னறியேன்' என்ற பாடலில் 'இதுவல்லால் பொருள் தானெனில் மூவுலகும் பொருளல்ல' என்ற தொடருக்குத் திருமலையாண்டான், எம்பெருமானார் பொருளாட்சிகள ஈட்டில் அமைந்துள்ளன. ஆழ்வார் இறைவனது உள்ளப்பாங்கை எடுத்துக் காட்டும் ஆசாரியர்களின் பொருளாட்சிகளுக்கு இடத் திற்கேற்ப ஆசாரியர்களின் திருவுள்ளத்தில் ஓடிய பொருளாட்சி இறைவனுடைய எண்ணமாகச் சொல்லும் நிலைமைக்கேற்ப அமைந்ததே சிறந்தது என எடுத்துக்காட்டுகிறார். [60]

### 3-2-14-3 பொருள்விளங்காப் பொருளாட்சிகளை விரித்துக்கூறல்

'நமக்குப் பூவின்மிசை' என்ற பாடலில் 'சொல்மாலைகள் சொல்லுமாறு அமைக்க வல்லேற்கு' என்ற தொடருக்குப் பட்டருடைய பொருளாட்சியும், அவருக்கு முன்னுள்ள ஆசாரியர் களின் பொருளாட்சிகளையும் எடுத்துக் காட்டுவர். இவ்விடத்தில் முன்புள்ள ஆசாரியர்கள் இறைவன் பரமாகப் பொருளாட்சி அமைந்ததையும் பட்டருடைய பொருளாட்சியிலே இறைவனது கண்ணழகிலே ஈடுபட்டுக் குரவ தழுந்திருந்த நிலைமையால் வந்த ஆழ்வாரின் தன்மையில் நோக்கு என்று எடுத்துக் காட்டுவர் சுவாமி மேலும் அத்தொடரிலுள்ள 'அமைக்க' என்ற சொல்லின் சுவைக்கு மிகவும் பொருந்திப் பட்டருடைய பொருளாட்சி அமைந்ததை எடுத்துக்காட்டுவர். [61]

இவ்வாறே 'அவன் கையதே யெனதாருயிர்' என்ற பாடலில் 'தவம் செய்தில்லா விளையாட்டியேனுயிர் இங்குண்டோ' என்பதற்கு இருவகைப் பொருட்சிகளைக் காட்டுவர் நம்பிள்ளை. இவற்றில் பிள்ளான் பொருளாட்சியின் உறைப்பைத் தெளிவாக எடுத்துரைப்பர் சுவாமி.[62] இப்பதிகம் தூது விடும் பதிகமாகையாலே ஆழ்வாராகிய பராங்குச நாயகிக்கு ஏற்பட்ட துன்பத்தை எடுத்துக்காட்டுவது குறிப்பிடத்தக்கது.

### 3-2-15 ஈட்டில் காட்டிய மேற்கோள் வரலாறு காட்டல்

நம்பிள்ளை தமது உரையில் ஆழ்வாருடைய சொற்களுக்குப் பொருள்விளக்கம் தரும்போது அவற்றிற்கு ஒப்பான ஒரு நிகழ்ச்சியை வேத, இதிகாச, பாகவத, புராண, கீதை ஆகியவற்றிலிருந்து எடுத்துக் காட்டுவர். அதனைப் பின்பற்றியே ஈட்டில் காட்டிய மேற்கோள்களைக் காட்டி அவ்விடத்திற்கேற்ப நிகழ்ந்த வரலாற்றை விரிவாக எடுத்துக்காட்டுவர். இவ்வாறு பல இடங்களில் இராமாயண, பாரத, பாகவத, கீதை ஆகியவற்றின் சுலோக இடங்கள்தோறும் அத்தொடருக்குப் பின்னணியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைத் தீபிகை உரையில் காட்டுவர்.

'எங்கானல் அகங்கழிவாய்' என்ற பதிகத்தில் பராங்குச நாயகியான ஆழ்வார் இறைவனைப் பிரிந்ததனாலுண்டான துன்பத்தைப் போக்கச் சில பறவைகள், மேகங்கள் ஆகியவற்றைக் குறித்துத் தூது விடுகிறார்.

இப்பதிகத்தில் 'திருமேனி அடிகளுக்கு' என்ற பாடலிலே 'திருமேனி அடிகளுக்குத் தீவினையேன் விடுதூதாய்' என்கிற தொடருக்கு, 'அலசா:ப்ரதிம்பதிரே' என்கிற பாகவத மேற்கோள் காட்டி நம்பிள்ளை உரைக்கிறார். சுவாமிகளும் இத்தொடரைக் காட்டியதோடல்லாமல் அதன் வரலாற்றையும் காட்டி உரைப்பர்' அதாவது பாண்டவ தூதனாய்க் கண்ணன் துரியோதனனிடம் வரும்போது கண்ணனுடைய அழகுகண்டு அவன் (இருக்குமிடத்தில் இருக்கமாட்டாமல் மரியாதை செய்யும்வகையிலே எழுந்தான். இத்தகு மேற்கோள் வரலாற்றை வடிவழகாலே தோற்பித்து அடிமை கொள்வதன் நோக்கை எடுத்துக்காட்டும் வகையில் இந்த மேற்கோள் பயன்பட்டதெனத் தோன்றுகிறது.[63]

இவ்வகை இராமாயண, பாரத, கீதை முதலியவற்றிலிருந்து உருக்கமான மேற்கோள், வரலாறு ஆகியவற்றைச் சுவாமி எடுத்துக் காட்டுவதிலிருந்து அளவிடற்கரிய அவர்தம் அனுபவமும்

அதனை உலகோர்க்கு உரித்தாக்கும் அவர்தம் ஆர்வமும் புலனா கிறது, மேலும் நம்பிள்ளை காட்டிய மேற்கோற்களைத் தழுவிய தோடல்லாமல் நம்பிள்ளை காலத்திற்கு பின்புவந்த ஆசாரியர்தம் நூல்களின் மேற்கோள்களுக்கும் ஒப்புமையாகஎழுத்தாளப்பெற்று விளக்கம் பெறுவது தீபிகைகளின் சிறப்புகளுள் ஒன்று.

### 3-2-16 உபநிடதக் கருத்தை நிலைநாட்டல்

மாமுனிகள் உபதேச ரத்தின மாலையில் வேதத்திற்கு ஒப்பானது பற்றிக் காட்டியதற்கேற்பத் திருவாய்மொழியில் உபநிடதத் தொடர்களுக்கு ஒப்பாக ஆழ்வார் சொற்களும் அமைந்ததை எடுத்துக் காட்டுவர் நம்பிள்ளை. இதனைப் பின்பற்றியே சுவாமிகளும் உபநிடதத் தொடர்களை நிலைநாட்ட அதனை விளக்கமாக ஆழ்வார் பாசுரத்தோடு ஒப்பிட்டுக் காட்டுவர்.

'தானோருருவே தனிவித்தாய்' என்ற பாடலில் 'தான்' என்பதற்கு இறைவனே முதற்காரணமாகவும், 'ஓர்' என்பதற்கு இறைவனே துணைக்காரணமாவும், 'தனி' என்பதற்கு இறைவனே நிமித்த காரணமாகவும் ஆகிய மூன்றும் தானேயாகி இருத்தலைச் சாந்தோக்ய உபநிடதத் தொடர்மூலம் நிலைநாட்டுவது அறியற்பாலதாகும்.[64]

### 3-2-17. இன்சுவைமிக்க பொருள் காட்டல்

'ஏழைபேதை' என்ற பாடலில் ஆழ்வாராகிய பராங்குச நாயகி திறத்துப் பெரும்பாலும் எல்லாம் ஒடுங்கிவிட்டதாம். அவளுடைய இளநோக்காவது குலையாதபடி இருக்கவேண்டு கிறாள் திருத்தாயார், இவ்விடத்தில் நம்பிள்ளை சுவைமிக்க பொருளைக் காட்டுகிறார். அதாவது ஆழ்வாராகிய நாயகி முடிந்து போகிறாள், தாயானவள் பெண்ணை இழந்தாலும் இறைவன் வேண்டுமென்றால் அவனுக்கு உயிரான ஆழ்வாரைக் காத்தருளும்படி வேண்டுவதாகக் கூறுவர். இவ்விடத்தில் ஆழ்வாரின் ஆற்றாமையை எடுத்துரைக்கும் இனிமையும் மேலும் இறைவனுக்குப் பிராட்டியின் நோக்கே உணவாகச் சொல்லப்பட்டதால் அவனுடைய உயிரை அவனே நோக்க வேண்டும் என்று சுவை பெற உரைப்பதையும் சுவாமி எடுத்துக்காட்டுவர்.[65] இவ்வாறு இன்சுவைமிக்க பொருள்கள் இடத்திற்கேற்பத் தீபிகை உரையில் எடுத்துக்காட்டுவது சுவாமியின் இயல்பாகும்.

### 3-2-18. ஈட்டிலுள்ள அச்சுப்பிழையைத் திருத்திக்காட்டல்

வைணவக் களஞ்சியமாகத் திகழ்ந்த சுவாமி, உரையிலுள்ள அச்சுப்பிழையை உணரமுடியாதவர்கள் அறியும் வகையில் அதனை எடுத்துக்காட்டித் திருத்தி விளக்குவர்,

'நண்ணாவசுரர்' என்ற பாடலில் 'இன்பம் தலைச்சிறப்ப' என்ற இடத்தில் ஈட்டின் தொடர்களை அச்சிட்டவர்கள் பிரிக்க வேண்டிய இடத்தில் பிரிக்காமல் ஒன்றுசேர்த்து அச்சிட்டதை எடுத்துக்காட்டி அதனைப் பயிலவேண்டிய முறையையும்எடுத்துக் காட்டுவர்:[66]

இங்ஙனம் சுவாமிகளுக்கு நம்பிள்ளையின் பால் அளவிடற் கரிய அன்பின் மிகுதியாலே அவர்தம் உரைத்தொடர்களைச் சுவாமி எவ்வெவ்வாறு பயன்படுத்தினார் என்பது ஆராயப் பட்டது.

இவ்வாறே பெரியவாச்சான் பிள்ளை உரையும், பிள்ளானு டைய உரையும் ஆங்காங்கு எடுத்துக் காட்டும் போக்கில் பற்பல இடங்களில் கையாளப் பெற்றுள. சுவாமி உகந்த இடங்கள் அவை என்ற வகையில் ஆராயப்படுகின்றன.

### 3-2-19 பாடபேதம் காட்டல்

முன்னோர்களின் உரைகளில் பாடங்களையும் அவர்கள் காட்டும் பாடபேதங்களையும் சுவாமி தம் தி[illegible] உரையில் பல இடங்களில் காட்டியுள்ளார். இவற்றில் சுவாமி தழுவிய பாடத்தின் குறிப்புப் பொருளை உரைப்போக்கில் அமைந்த நயங் கொண்டும் இலக்கண வகையிலமைந்த பேதம் கொண்டும் உணர்த்துவது குறிப்பிடத்தக்கது.

'கனையிருளே' என்ற மூலபாடத்தைப் பின்பற்றி முன்னோர் கள் உரை அமைந்திருப்பதையே சுவாமி பின்பற்றியிருப்பினும் 'கனவிருளே' என்ற பாடத்தையும் காட்டுவர். 'கன' என்பது வட சொல் விகாரம் என்றும், 'கனையிருளே' என்று பாடபேதம் என்றும், 'கனை' என்பது வினைப்பகுதியாகும் என்றும் விளக்கிக் காட்டுவர்.

### 3-2-20 முன்னோர்கள் இலக்கண வல்லுநர் என நிறுவுதல்

முன்னோர்களின் உரைகளில் இடம்பெற்ற இலக்கணச் சிறப்புகளை எடுத்துக்காட்டி அவர்களின் இலக்கண வன்மையைச்

சுவாமி நிறுவுவர். அதுமட்டுமன்றி இலக்கண முறைமையை மீறி உரை வழங்கியுள்ள அவர்கள் திறத்தையும் அவர் காட்டியுள்ளார். இவை ஐந்தாம் இயலில் ஆராயப்படும்.

## 3-3 ஆறாயிரப்படியைத் தழுவிய தீபிகை உரை

'எனதாவியுள் கலந்த' என்ற பாடலில் உலகில் ஒருவர் உதவி செய்தால் உதவி பெற்றவர் கைம்மாறு செய்வது என்று ஒருமுறை உண்டாதலால் ஆழ்வாரும் இறைவனுடைய சரக்காகவே இருக்கும் போது தாம் கொடுத்ததாகக் கூறுவது தவறு என்று எடுத்துக் காட்டுவர். இப் பாட்டின் பொருளைப் பிள்ளான் எடுத்துரைப்பது பரமபோக்யம் எனக்காட்டியுரைப்பர். ஆழ்வாருடைய ஓர் இயற்கையான இயல்பை ஆறாயிரப்படி வாயிலாக இங்கு உணர்த்துகிறார்.[68]

## 3-3-1 இருபத்துநாலாயிரப்படியைத் தழுவிய தீபிகை உரை

'உயிர்களெல்லா வுலகமுமுடையவனை' என்ற பாடலில் இத்திருவாய் மொழியைக் கற்பார் ஆழ்வாரைப் போலே நோவுபடாதே பிறவித்துயரினின்று விடுபவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். மேற்கூறிய தொடரில் இறைவனுக்கு இயல்பாகவே உடைமையாகக்கொண்ட உயிர்களையும் உலகங்களையும் சொன்னபடியன்று. இவ்விடத்தில் ஆழ்வாரைத் தரிக்கச் செய்தனாலுண்டான இறைவனுக்கு ஏற்பட்ட ஒருபுகாரைச் சொன்னடியால் இப்போதுதான் எல்லாவுலகையும் உயிரையும் பெற்றது போல் விளக்கமுற்றதைப் பெரியவாச்சான் பிள்ளை உரையின் மூலம் எடுத்துக் காட்டுவர்[69]

## முடிபுகள்

1. சுவாமியின் திருவாய்மொழித் தீபிகை உரை பாடல் காட்டல், பதவுரை வழங்கல் முதலிய பொதுக்கூறுகளோடு அமைந்துள்ளது.

2. சிறப்பாகத் திருவாய்மொழி உரையாசிரியர் தொடர்கள், பொருளாட்சிகள், ஆழ்வார் பாசுர அடிகள், தொடர்கள் ஆகியன தக்கவாறு தக்க இடத்தில் எடுத்து இடையிடையே பெய்யப் பெற்றுள்ளன.

3. அவ்வாறு பெய்யும்போது ஈட்டுரையின்பால் இவர்கிருந்த பேரீடுபாடும் முன்னோர் உரைகள்பால் இவர்க்கிருந்த பக்திப் பெருக்கும் புலப்படுகின்றன.

# இயல்-3

## அடிக்குறிப்புகள்

1. 1. 10. 36 படி.
2. 1. 10 தீபிகை
3. 5-2- 36 படி
4. 5-2-தீபிகை
5. திரு. 5-2-7
6 5-2-7, சே-கி:பதிப்பு, 1926, ப-61
7. 5-2-7 தீபிகை
8. மேலது, தி. அ. கிருஷ்ணமாசாரிய சுவாமி குறிப்பு
9. முதலாயிரம், தீபிகை, முகவுரை, ஸௌம்ய ஆண்டு,1928
10. இடம் தெரியவில்லை
11. திரு 3 7-2
12 3-4-2 தீபிகை
13. நன்னூல், சொல்-பெயரியல்-11
14. 10-2-7 தீபிகை
15. 4-4-1 தீபிகை
16. மேலது 9-7-7
17. மேலது 8-2-9
18. மேலது 10-2-6
19. மேலது 8-6-5
20. மேலது 10-7-8
21. 8-10-4 தீபிகை
22. இயல் 5
23. (1) 4-9-4 தீபிகை

    (2) 4-10-4 தீபிகை
24. ஸ்தோத்ர ரத்ன வ்யாக்யானம், எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (பதி), 1976, ப-17
25. மிக்கவிறைநிலையும் மெய்யா முயிர்நிலையும்
    தக்கநெறியுந் தடையாகித்—தொக்கியலும்
    ஊழ்வினையும் வாழ்வினையும்ஓதுங் குருங்கையர்கோன்
    யாழினிசை வேதத் தியல்.
26. 6-2 தீபிகை
27. மேலது 8-9
28 1-4-0. 36, தீபிகை
29. 1-4-6 தீபிகை
30.
31. திரு 9-6-9
32. 6-4-0. தீபிகை
33 5-8-தீபிகை
34. நன்னூல், பொதுப்பாயிரம், கழகம், சென்னை, நூ-7

35. 4-6-9
36. 4-6-36, தீபிகை
37. 3-7-4 36, தீபிகை
38. 2-7-7 36, தீபிகை
39. 2-1-9 36 தீபிகை
40. 3-5-10 36, தீபிகை
41. 7-10-3 36, தீபிகை
42. 4-6-7 36, தீபிகை
43. 5-6-8 36, தீபிகை
44. 1-4-0
45. 1-4-11 36, தீபிகை
46. 2-6-3 36, தீபிகை
47. 9-1-5 36, தீபிகை
48. 4-4-4 36, தீபிகை
49.
50. மணிமேகலை 27/49-50

"ஐதிகம் என்பது உலகுரை இம்மரத்து
எய்திய தோர்வேய் உண்டெனத் தெளிதல்"

51. இரா. அரங்கராஜன், **நம்பிள்ளை உரைத்திறன்,** 1986 ப. 26
52. சுவாமி, **ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலா,** முன்னுரை 1953, ப.1.
53. 6-9-9 36
54. 6 9-9 தீபிகை
55. 4-4-8 36 தீபிகை
56.
57. 3-5-7 36, தீபிகை
58. மு.வை. அரவிந்தன், **உரையாசிரியர்கள்,** பக். 156-157
59. 5-2-0 36, தீபிகை, ஆசாரிய இருதயம் 223
60. 8-7-3 36 தீபிகை
61. 4-5-8 36, தீபிகை
62. 9-5-3 36, தீபிகை
63. 9-7-4 36, தீபிகை
64. 1-5-4 36, தீபிகை
65. 2-4-10 36, தீபிகை
66. 10-7-5 36, தீபிகை
67. 2-1-7 தீபிகை
68. 2-3-4 6, தீபிகை
69. 3-2-11 24, தீபிகை

இயல்—4

# திருவாய்மொழி தீபிகையின் சிறப்பு

## 4-0

மூன்றாவது இயலில் திருவாய் மொழித் தீபிகையுரையும் முன்னோர் உரைகளும் எவ்வெவ்வாறு அமைந்துள்ளன என ஒப்பிட்டு ஆயப்பெற்றன. இந்த இயலில் 'திருவாய்மொழித் தீபிகையின் சிறப்பு' என்ற தலைப்பில் தீபிகையின் தனிச்சிறப்புக் கள் ஆயப்பெறுகின்றன. திவ்வியார்த்த தீபிகையின் சிறப்பு, திருவாய்மொழியின் சிறப்புக் கூறல், பதிகத்தின் சிறப்புக்கூறல், பதிகத்தின் திரண்ட கருத்துக் காட்டல், பாசுரச் சிறப்புக் கூறல், ஆழ்வார் திருவுள்ளக்கிடக்கையும் தீபிகையும், தீபிகையின் தனித் தன்மை எனும் ஏழு பொருள்களைத் தெளிவு செய்வதாக இவ்வியல் அமைகிறது. இந்த ஏழும் தீபிகை உரையெழுதிய சுவாமியின் திருவுள்ளம், அந்தத் திருவுள்ளத்திலுறைந்த முன்னோர்களான ஆசாரியர்களின் திருவுள்ளம், அவர்களறிந்த ஆழ்வார் திருவுள்ளம், அந்த ஆழ்வார் இறைவனின் எல்லாமாம் தன்மையை உணர்ந்தமை எனும் நான்கு நோக்குகளில் ஆயப் பெறுகின்றன. இந்த நான்கு நோக்குகளும் இருபது வகைப்பாடு களுள் விளக்கம் பெறுகின்றன.

## 4·1 திவ்வியார்த்த தீபிகையின் சிறப்பு

'திவ்வியார்த்த தீபிகை' என்ற தொடர் தெய்வத்தன்மை வாய்ந்த இறைவனைப் பற்றிக் கூறுவது ஆகும் [1]

## 4-2. திருவாய்மொழிச் சிறப்பு

நம்மாழ்வார் அருளிய நான்கு திவ்வியப் பிரபந்தங்களான திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி ஆகியவற்றில் திருவாய்மொழி சாமவேத சாரமாகும்.[2] மேன்மையுடைய வாயினால் சொல்லும் சொற்களினாலேயே ஆகிய நூல் திருவாய்மொழி எனப்பட்டது. 'திரு' என்ற அடை மொழி கொடுக்கும்படியாக ஆழ்வாரது வாக்குக்குள்ள சிறப்பு அவரது 'திருநாவீறுடைய பிரான்' என்னும் பெயரால் விளங்கும்.[3]

திருவாய்மொழி பண்டைத் தமிழிலக்கண நூற்கொள்கையின் வழிநின்று துலங்குவதைக் காட்டுகிறார் சுவாமி. ஒன்றையொன்று தொடர்ந்து நிற்பது தோன்ற உரை அருளியதால் தண்டியலங்கார நூற்பாவிற்கேற்பப் பொருள் தொடர்நிலை அந்தாதியென்றும்,

நீண்ட ஒரு கதையாகக் கூறுதல்லாமல் தோத்திரமாக அருளிச் செய்யப்பட்டதால் சொல் தொடை அந்தாதியாகவும் அமைந்ததைச் சுவாமியே குறிப்பிடுவர்.[4]

திருவாய்மொழிச் சிறப்பினைக் கூறும்போது, இது தொல் காப்பியச் செய்யுளியலில் கூறப்பட்ட எண்வகை வனப்பினுள் 'விருந்து' என்னும் வனப்பில் அமைந்ததாகக் கூறுவர்.[5] 'திருவாய் மொழி' என்னும் சொல்லுக்கு இவ்வாறு பொருள் கூறும் பாங்கு முன்னோர்கள் கூறியதாகக் காணக் கிடைக்கவில்லை

திருவாய்மொழிக்கமைந்த தனியன்களில் முதலாவதான 'பக்தாம்ருதம் என்று நாதமுனிகள் அருளிச்செய்த தனியன் திரு வாய்மொழியின் சிறப்பைக் கூறும். திருவாய்மொழியானது கார், கடல், வேதம், வேதகீதன் உள்ளளவும் வைணவர்களுக்கு அமுத மாகத் திகழ்வதை ஆழ்வார் கண்டறிந்து அருளிச் செய்வதாகக் கூறுவர். மேலும் 'தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன். என்ற பாடலைப் பின்பற்றி நாதமுனிகள் அருளிய தனியன் அமைந்ததாகக் கூறுவர்.[6]

ஆழ்வார்களுள் நம்மாழ்வார் 'அங்கி'[7] யாகவிளங்கிச் சிறப் பெய்தினாற்போல் அவர் அருளிய திருவாய் மொழியும் ஏனைய திவ்வியப் பிரபந்தங்களைக் காட்டிலும் சிறப்பிடம் பெற்றுள்ளது. அதாவது மற்றைய திவ்வியப் பிரபந்தங்கள் இறைவன் வீதி உலா வரும்போதும் ஓதுவது உண்டு. திருவாய்மொழி திருவீதிகளில் ஓதப் படாமல் இறைவனின் திருவோலக்கத்திலேயே ஓதப்பட்டு வருகிற மரபும் இத்திருவாய்மொழிக்கே பற்பல உரைகள் எழுந் திருக்கின்றமையும் இதன் ஏற்றத்தை வற்புறுத்தும்.[8]

இத்தகைய பெற்றிமையுடைய திருவாய்மொழியிலுள்ள பதிகம் பாசுரம் ஆகியவற்றின் தன்னிகரில்லாச் சிறப்பைக் காட்டி உரைப் பர் சுவாமி.

### 4-3. பதிகத்தின் சிறப்பைக் கூறல்

பதிகம் என்ற சொல் திவ்வியப்பிரபந்த உரைகளில் எங்கும் கையாளப் படவில்லை ஆயினும் திருவாய்மொழிப் பெருமை கூறும் சடகோபரந்தாதியில் 'செஞ்சொற் பதிக நூற்றில்'[9] என்ற தொடர் கொண்டும், 'பதிகம்' பதிகமாக விசைத்தனனே'[10] என்ற தொடர்கொண்டும் 'பதிகம்' என்ற சொல்லாட்சி பயன்பட்டதை

அறியலாம். சிவாமியின் உரையில்தான் 'பதிகம்' என்ற சொல் லாட்சி அடுத்தபடியாக வைணவ உரைகளில் காணலாம். 1102 பாடல்கள் அடங்கிய நூறு பதிகங்கள் ஒவ்வொன்றும் சிறப் பாக அமையப் பெற்றிருப்பினும் சுவாமி ஏழு பதிகங்களின் சிறப் பைக் கூறும் பாங்கினைக் காணமுடிகிறது. இவை ஆழ்வாரின் வைணவ ஊற்றப் புலப்பாடு, நெறிவிளக்கம், விருப்பக்காட்சி, ஆழ்வார் பேறு பெற்றுக் களிக்கும் சிறப்பு, கல்நெஞ்சும் கரையும் படிச் சொற்கள் அமைந்த ஆழ்வாரின் பாரிப்பு நிலை ஆகியன பெற்று விளங்குகின்றன.

## 4-3-1. ஆழ்வாரின் வைணவ ஊற்றப் புலப்பாடு

திருமாலை முழுமுதற் கடவுளாகப் பற்றிய வைணவர்கள் அறியவேண்டிய பொருள்கள் மூன்று.

1. மற்றவர்களுக்கு ஆட்படாது இறைவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருக்கும் தன்மை (அநந்யார்ஹ சேஷத்வம்)

2 மற்றவரைத் தஞ்சமாகக் கொள்ளாது இறைவன் ஒருவனையே தஞ்சமாகக் கொள்ளும் தன்மை (அநந்ய சரணத்வம்

3. மற்றவர்களின் உகப்புக்கிலக்காகாது இறைவன் ஒருவனுக்கே உகப்பாயிருக்கும் தன்மை (அநந்ய போக்யத்வம்)

இந்த மூன்றனையும் பின்பற்றுவதே உணர்ந்த வைணவத் தன்மையாகும்.

"உயர்வற வுயர் நல முடையன் யவனவன்

... — — —

துயரறு சுடரடி தொழுதெழென் மனனே"[11]

என்று தாம் அருளியபடியே இறைவன் ஒருவனுக்கே தாம் அடிமைப்பட்டும், அவனையே தஞ்சமாகப் பற்றியும், அப் பிரானுக்கே போக்கியமாகவும் இருந்தவர் ஆழ்வார். இப்படிப் பட்ட தன்மையுடைய ஆழ்வார் 'மண்ணை இருந்து துழாவி' என்ற பதிகத்தில் இறைவனுடைய சம்பந்தம் பெற்ற பொருள் களும் இறைவனுக்குப் போலியான பொருள்களும் கண்முன் பட்ட போது அவற்றை இறைவனாகவே கண்டுகளிப் பெய்துகிறார். இஃது ஆழ்வாரின் வைணவ ஊற்றமாகும் என்பர் சுவாமி.[12]

'தீர்ப்பாரையாமினி' என்ற பதிகத்தில் ஆழ்வார் தாமான தன்மையை இழந்து ஒரு தலைமகளான நிலையெய்தி அவளைக் [illegible] இறைவன் ஒருவனையே வாய் வெருவி வருந்தி [illegible] தோழியின் பேச்சாகக் காட்டுகிறார். வைணவர்களுக்குத் திருமாலல்லாது வேறொருவருடைய சம்பந்தம் பொறுக்க மாட்டாது [illegible] இக்கருத்தை வலியுறுத்துவதே இப்பதிகமாகும் இது பற்றியே இப்பதிகத்தில் ஆழ்வாருடைய வைணவ ஊற்றம் புலப்படுவதாகக் குறிப்பிடுவர் சுவாமி.[13]

### 4-3-2. நெறிவிளக்கம்

இறைவனுக்கே உரியனான ஆன்மா தனக்கு உரியனின்றிக்கே ஒழிந்து எல்லார்க்கும் தலைவனான நாராயணனுக்கே ஆட்பட்டு அடிமை செய்யப் பெறுவேனாக வேண்டும் என்ற கருத்தே வைணவ நெறியாகும்.[14]

வைணவ சமயத்தில் தருமத்தை அனுட்டிப்பதற்குக் கருவியான உடல், அதனைத் தாங்குமதான உயிர் (பிராணன்), உயிர்க்கெல்லாம் விரும்பும் இன்பம், இவையெல்லாவற்றிக்கு மிருப்பிடமான ஆன்மா, மற்றும் மனைவி, மக்கள், நண்பன் முதலானவர்களெல்லாம் இறைவனுக்கு அடிமை செய்வதில் நோக்காயிருக்க வேண்டும். அதற்கு உறுப்பல்லாதவை தள்ளப்பட வேண்டுமென்று கூறுவர் பெரியோர்.[15]

இக்கருத்தையே ஆழ்வார் 'ஏறாளுமிறையோனும்' என்ற பதிகத்தில் இறைவனுக்கு உறுப்பில்லாத ஆன்மா, ஆன்மாவோடு கூடிய உடைமைகள் என்ற இவை வேண்டாமை பற்றிவலியுறுத்து கிறார். அதாவது 'மணிமாமை', 'மடநெஞ்சால்', 'நிறைவினால்', 'தளிர் நிறத்தால்', 'அறிவினால்', 'கிளரொளியால்', 'வரிவளை யால்', 'மேகலையால்', 'உடம்பினால்', 'உயிரினால்' என்று ஆன்மாவையும் மக்கள் நண்பன் முதலானவர்களையும் இறை வனுக்கு அடிமை செய்ய உறுப்பல்லாதபோது தவிர்க்க வேண்டும் என்பதைக் காட்டுவர் சுவாமி.[16] ஆகவே இறைவனுக்கே ஆட் பட்டு அவனுக்கே அடிமை செய்வதும்புலனாகிறது.

### 4-3-3. [illegible]

[illegible] செவியையும் கண்ணையும் மிக நுட்ப [illegible] அவ்விரண்டினுள் கட்புலனையே [illegible] கூறுவர்.[17] காட்சியின்பம்

என்னுள் வைத்தான்'. என்று பலவாறாக இப்பதிகத்தில் ஆழ்வார் சொல்வதைக் காட்டுவர் சுவாமி[26]. இதனால் ஆழ்வார் பேறு பெற்றுக் களிக்கும் சிறப்பு மிக உயர்ந்ததாக உள்ளது.

### 4-3-4. பாரிப்பு நிலை

ஆழ்வார் இறைவனைக் காணாமையாலே பெரிய ஆற்றாமை யோடே பலவாறாகப் பாரிக்க முற்படுகிறார். அதாவது பிராட்டி யும் தானும் எழுந்தருளியிருக்கும் இருப்பு தன்னைக் கண்ட காட்சி யிலே விகாரமடைந்து தன் முன்னே நாலடி உலாவி வருதல், புன் முறுவல் செய்தல், நல்வார்த்தை அருளுதல் என்று இங்ஙனே தானும் இறைவனுமாகத் திருவாசலை மூடிக் கொண்டு தனிமை யிலே தன்னுடைய பாரிப்புகளையெல்லாம் சொல்லுகிறார். இதி லுள்ள சொற்சுவையும் பொருட்சுவையும் கல்நெஞ்சையும் கரையப் பண்ணுவதாகவும், வாயினால் வெருவினால் நெஞ்சு குளிரும்படியாக இருப்பதாகவும் அனுபவித்துக் கூறுவர் சுவாமி.[27]

### 4-4 பதிகத்தின் திரண்ட கருத்துக் காட்டல்

சுவாமி ஒவ்வொரு பதிகத்தின் முக்கியமான கருத்தை அந்தந்தப் பதிகத்தின் முன்னுரையில் தவறாமல் காட்டிச்செல்வர். நம்பிள்ளை உரைக்கருத்தைப் பின்பற்றியிருப்பினும், இக்காலத்திற் கேற்பப் புரிந்து கொள்ளும் பாங்கில் பதிகத்தின் திரண்ட கருத்தைக் காட்டியுள்ளார்.

ஆழ்வார் பேச்சுக்கு நிலமல்லாத ஆற்றாமை கரைபுரண்ட காலத்தில் இறைவன் வந்து முகங்காட்ட உள்ளம் தேறியிருப்பர் அவ்வமயம் ஆழ்வார் இறைவனுடைய மேன்மை (பரத்வம்), எளிவரும் தன்மை (ஸௌலப்யம்) ஆகிய குணங்களில் எளிவரும் தன்மையானது பேசப் பேச நெஞ்சை உருகப் பண்ணுமாதலால் மேன்மைத்தன்மையைத் 'திண்ணன் வீடு' என்னும் பதிகத்தில் பரக் கப்பேசுகிறார்.[28] இப்பதிகம் திரிவிக்கிரமன், கண்ணன் போன்ற அவதாரங்களில் மிளிரும். மேன்மைத் தன்மையைப் புலப்படுத்தும். 'உயர்வற வுயர்நல முடையவன்' என்னும் முதற்பதிகத்தில்[29] இறைவனுக்கேயுள்ள மேன்மைத் தன்மை தமது அனுபவமாகப் பேசப்பட்டது. 'திண்ணன் வீடு' பதிகத்தில் உபதேச பரமாகச் சொல்லப்பட்டது. இதனை 'ஏத்த வேழுலகுங் கொண்ட' என்னும் பாசுரத்தால் உறுதி செய்வர்[30] அதாவது இறைவனுடைய பரத்துவத்தை நிரூபிக்க இப்பதிகத்தின் பாசுரந்தோறும் கூறப்

பட்ட கருத்துக்களுள் 'உலகளந்த சரிதை யொன்றே போதும்' என்ற கருத்து தோன்ற இறுதியில் இதனை எடுத்துக்காட்டித் தலைக்கட்டுவர் ஆழ்வார் என்பதைச் சுவாமி சுட்டுவர்.

இவ்வாறு ஒவ்வொரு பதிகத்தின் திரண்ட கருத்துக்களைப் பற்றிப் பின்னிணைப்பில் காணலாம் (பின்னிணைப்பு எண். . : )

## 4-5 பாசுரத்தின் சிறப்புக் கூறல்

திருவாய்மொழிக்கு அமைந்த உரையான ஈட்டின் நம்பிள்ளை ஆழ்வாருடைய அநுபவத்தையோ, இறைவனுடைய நிலைமையையோ காட்டுவதற்குச் சிற்சில பதிகத்திலும் சில பாடல்களைத் தேர்ந்தெடுப்பர். அவற்றையே உயிர்ப்பாசுரங்களாகக் கருதுவர். அந்தப் பதிகத்தின் திரட்சியான கருத்தை அந்தப் பாடலில் பொதிய வைத்து உரைப்பர்.[31] அந்த வகையில் இந்த நூற்றாண்டில் உரை அமைத்த சுவாமி முன்னோர் மொழிந்தனவற்றைப்பின்பற்றியும் மேலும் ஆழ்வார் அநுபவத்தில் தோய்ந்து சில பாடல்களில் உள்ள சொற்களையும் சில பதிகங்களிலுள்ள பாடல்களையும் உயிர்ச்சொல்லாகவோ, உயிர்ப்பாசுரமாகவோ, உயிர்த்தொடராகவோ காட்டியும் உரைப்பர் உயிர்ச்சொல்லாகக் காட்டிய இடங்களில் யாவும் எம்பெருமானைப் பற்றிய குணம், வடிவு, அழகு பற்றியனவாகும். உயிர்த்தொடராக நோக்கும்போது அவை ஆழ்வார் மனநிலைக்கு ஏற்ப அமைந்ததைக் காணமுடிகிறது. சுவாமி இவ்வாறு காட்டுவதால் அந்தப் பதிகங்களின் பெருமையையும், ஆழ்வாருடைய மனப் போக்கையும் அறிய உதவுகிறது இங்ஙனம் உயிர்ச்சொல், உயிர்த்தொடர், உயிர்ப்பாசுரம், உயிர்ப்பதிகம் என்று முப்பத்தோர் இடங்கள் கணக்கிடப்பட்டுள்ளன.[32]

### 4-5 1 உயிர்ச்சொல்

'மற்றொன்றில்லை' என்ற பாடலில் எம்பெருமானை அடைதலின் எளிமையையும் இனிமையையும் அருளிச் செய்கிறார். இப்பாடலில் 'சிற்றவேண்டா' என்ற சொல்லுக்கு, 'ஆயாசிக்க வேண்டா' (முயல வேண்டா) என்று நம்பிள்ளை முதலானோர் கூறுவர்.[33] இவ்விடத்தில் சுவாமியினுடைய உரையை நோக்கும் போது இச்சொல்லை அவர் உயிரான சொல்லாகக் கருதுவது புலப்படும். எவ்வாறெனில் தமது முயற்சியினால் உண்டாக்கப் படாமல் சித்தனான எப்பொழுதுமுள்ள இறைவனை உபாய

மாகவுரிப்பதில் நோக்காக இப்பாட்டு அமைந்ததைக் காட்டுவர். அதாவது 'சிற்ற வேண்டா' என்பதற்குச் 'சிற்றுதல் — சிறுதலாய் பரக்க ஒரு வியாபாரம் செய்ய வேண்டா' என்கிறார். இறைவனை உபாயமாகப் பற்றுபவனுக்கு ஒரு முயற்சியும் தேவையில்லை. இதைச் சரமச்லோகத்திலும் காணலாம்.[84] ஆகையால் 'சிற்ற வேண்டா' என்பது உயிர்ச்சொல்லாக இப்பாட்டில் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

'அமரர்க்கரியானை' என்ற பாடலால் அடியவர்க்கெளியனான இறைவனை வேறு பயனொன்றும் கருதாது தொழுபவர்களுக்கு விரோதிகள் கிட்டாது என்று உபதேசிக்கிறார்.[85] இப்பாட்டில் 'அமரத் தொழுவார்கட்கு' என்பதை உயிரான சொல்லாகக் கருதுவர். அமரத் தொழுகையாவது வேறு பயனொன்றை கணிசியாமல் தொழுவதாகும். இவ்வுயிர்ச்சொல்லைக் காணும்போது வேறு பயனொன்றும் கருதாது இறைவனைத் தொழுகையே பயனாகக்கொள்வது புலனாகிறது. இதனைப் பெரிய திருவந்தாதிப் பாடல் கொண்டும் பெரிய திருமொழிப் பாடல் கொண்டும் அறியமுடிகிறது.[86]

### 4-5-2. உயிர்த்தொடர்

'மனப்பரிப்போடு அழுக்கு' என்ற பாடலில் 'தான் தன் சிற்றத்தினை முடிக்கும்' என்றதனை உயிர்த்தொடராகக் கருதுவர்.[87] அசுரர் போல்வரான விரோதிகள் அடியார் கூட்டங்களை நலிவது பொறுக்க மாட்டாமே மானிட சாதியில் வந்து பிறந்தான் கண்ணன். பல திருவிளையாடல்களைச் செய்தான். இதை நினைக்கும் ஆழ்வார் தமக்கு ஒப்பாவார் யாருமில்லை என இப்பாடல் மூலம் அறிவிக்கிறார். 'தான் தன் சிற்றத்தினை முடிக்கும்' என்ற தொடரை நோக்கும்போது தன்னை [illegible] இறைவனுக்கும் சீற்றமுண்டோ என ஐயமுறத் தோன்றும். [illegible] சீற்ற [illegible] இல்லை. [illegible]

முக்கியமாக அடியார்களின் விரோதிகளைத் தன் கையாலேயே முடித்துத் தன்னுடைய சிற்றத்தினை ஒருவாறு ஆற்றிக் கொள்ளவில்லை என்பதைத் 'தான் தன் சீற்றத்தினை முடிக்கும்' என்ற தொடர் மூலமாகச் சுவாமி தெளிவாக்குவது காண முடிகிறது.

'எடுத்த பேராளன்' என்ற பாடலில் ஆழ்வார் தம்முடைய நிலைமைக்குத் தக்கவாறு, இறைவன் வாராத அளவிலே இறைவனைப் பற்றினவர்கள் அவனை எங்ஙனே நம்புவர் என்று வருந்திக் கூறுகிறார்.[39] இப்பாடலில் ''அடுத்த தோருரு 'வாயின்று நீ வாராய் எங்ஙனத் தேறுவருமரே'' என்ற ஈற்றடியை உயிர்த் தொடராகக் கருதுவர் சுவாமி. அதாவது ''அடியார் திறத்துத் தாயன்பு காட்டிக் கண்ணனாய் அன்று வந்தது போல இன்றும் தக்கதோர் வடிவைக் கொண்டு வரவேணும்'' என்கிறார். ''இப்படி ஒரு விஷயத்தில் உதவாது இருந்தால் உன்னைத் தஞ்சமென்றிருப்பார் எங்ஙனே உன்னை நம்புவர்'' என்று கூறுகிறார். இவ்வாறு ஆழ்வாருடைய உள்ளக்கிடக்கையைக்காட்டும் வகையில் இரண்டு விதமான பொருள்களைச் சுவாமிவிளக்குவது அறிதற்பாலதாகும். இத்தகைய உயிர்த்தொடர்களால் இறைவனுடைய குணப் பெருமையை அறியமுடிகிறது.

#### 4-5-3 உயிர்ப்பாசுரம்

பாடல்களில் உயிர்ச்சொல்லையும் உயிர்த்தொடரையும் காட்டியதோடல்லாமல் இப்பதிகத்தில் உயிர்ப்பாசுரத்தையும் காட்டுவர் சுவாமி.

'திருமாலிருஞ்சோலை' என்னும் பதிகம் இறைவனுடைய சீலகுணத்தைக் குறிப்பதாக முன்னோர் உரைகள் கூறும்.[40] அதாவது ஆழ்வார் உடலின்மீது இறைவனுக்கு அளவுகடந்த ஆசை இந்த உடலோடு பரமபதத்திற்கு அவரை அழைத்துச் செல்ல நினைத்தான். ஆழ்வார் தம்முடிவின் தன்மையைக் கூறி இறைவனின் விருப்பத்தைத் தடுத்தார். இறைவனின் விரைவும் சிறிது தடைபட்டது. ஆழ்வார் இறைவனை நோக்கித் தன்னை அழைத்துச் செல்லத் துடிக்கும் இறைவன் இவ்வளவு நாட்களாகத் தன்னை இவ்வுலகில் தள்ளிவிட்டு இருந்ததற்கும் இப்போது தன்னை விரும்புவதற்கும் காரணம் கேட்கிறார். தன்னுடைய சுதந்திரத்தன்மையே காரணம் என்பதை ஆழ்வார் தாமே அறிந்து கொள்ளட்டும் என்று பதில் சொல்லாது இருக்கிறான்.

இத்தகைய திரட்சியான இப்பதிகத்தின் கருத்தை உயிர்ப் பாசுரமாக 'இன்றென்னைப் பொருளாக்கி' என்ற பாடலைக் காட்டுவர் சுவாமி. முன்னோர்கள் சொல்லாது விட்டதைச் சுவாமி காட்டி உரைப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## 4 6 ஆழ்வார் திருவுள்ளக் கிடக்கையும் தீபிகையும்

ஆழ்வார் திருவுள்ளம் ஒருகால் பக்தியிலே ஆழ்ந்து கிடக்கும்; இன்னொருகால் சரணாகதியிலே ஈடுபட்டிருக்கும்; பிறிதொருகால் திருமாலுடைய பேரழகில் தோற்றுக் கிடக்கும்; மற்றொருகால் அவனுடைய பேராற்றலை வியந்து நிற்கும். இப்படித் திருமாலது திவ்விய குணங்களிலும் வைணவத் தத்துவங்களிலும ஆழங்காற் பட்டிருக்கும். ஆழ்வாரது உள்ளக்கிடக்கை அவர்தம் பதிகங்களில் அவ்வப்போது குமிழிட்டுக்கொண்டு சுழன்றிருக்கும்.

இவற்றையெல்லாம் நம்பிள்ளை முதலான உரையாசிரியர்கள் ஆங்காங்கே எடுத்துரைத்துள்ளனர். அவர்கள் உரைகளில் ஈடுபட்டு உள்ளுணர்ந்த உணர்ச்சியினை வெளிக்காட்டும் வகையில் அவர் தம் அனுபவங்களைத் தீபிகையில் சுவாமி ஆங்காங்கே எடுத் துரைப்பர்.

இவற்றையெல்லாம் நம்பிள்ளை முதலான உரையாசிரியர்கள் ஆங்காங்கே எடுத்துரைத்துள்ளனர். அவர்கள் உரைகளில ஈடு பட்டு உள்ளுணர்ந்த உணர்ச்சியினை வெளிக்காட்டும் வகையில் அவர்தம் அனுபவங்களைத் தீபிகையில் சுவாமி ஆங்காங்கே எடுத் துரைப்பர். இதனால் முன்னோர்கள் உணர்ந்த அனுபவங்கள் யாவும் சுவாமியினுடைய அகக்கண் துணைக் கொண்டு தீபிகை ஒளியில் நாமும் காண்டல் கூடும் என்று சொன்னால் அது மிகை யாகாது. ஆசாரியர்கள் மண்டிக் கிடந்த ஆழ்வாருடைய அருளிச் செயல்களிலே தாமும் மண்டிக் கண்கள் நீர்மல்கிச் சுவாமி எழுது யுள்ளமையால் ஆழ்வார் அனுபவங்களைக் கற்கும் நாமும உணர முடிகிறது

மேலும் தீபிகை உரையை ஆராயும்போது ஆழ்வாரின் திரு வுள்ளக்கிடக்கை கீழ்க்கண்ட தலைப்புகளிலும் விளக்கம் பெறும்.

1. ஆழ்வாரின் சிறப்புப் பெயர்க்காரணம் காட்டல்
2. ஆழ்வார் ஆற்றாமைக்குக் காரணம் காட்டல்
3. ஆழ்வாரின் அழுகையைக் காட்டல்

4 ஆழ்வாரின் நினைவைத் தெரிவித்தல்
5. ஆழ்வாரின் துடிப்புக் காட்டல்
6. ஆழ்வாரின் தொடர்ச்சியான இறையுணர்வைக் காட்டல்
7. ஆழ்வார் சொற்களுக்கு அனுபவித்துப் பொருள்கூறல்
8. ஆழ்வார் இறைவன் உரையாடல்களைக் காட்டல்
10. ஆழ்வார் மனங்கண்டு, பாசுரச் சொற்போக்கில் மேலும் சொல் அமைந்ததைக் காட்டல்
11. அகப்பொருள் பாடல்களில் ஆழ்வார் நிலைமைகளை எடுத்துரைத்தல்
12. அகப்பொருள் பாடல்களில் பறவைகளின் நினைவைக் காட்டல்
13. ஆழ்வாரின் அர்ச்சானுபவத்தைக் காட்டல்

**4-6-1. ஆழ்வார் சிறப்புப் பெயர்க் காரணம் காட்டல்**

நம்மாழ்வாருக்குப் பராங்குசன் என்ற பெயருண்டு. பர (பிற) சமயத்தவர்களாகிய மதயானைகளுக்கு அங்குசம் (ஈட்டி) போன்றிருந்தது பற்றிப் பராங்குசன் என்ற திருநாமம் சொல்லிய போதிலும், பரனான இறைவனுக்கே அங்குசமாயிருந்தவன் என்கிற பொருளைக் 'கலக்கவேழ்' என்ற பாடலின் பின் இரண்டு அடிகளான ''வலக்கை யாழி யிடக்கைச் சங்கம் இவையுடை மால்வண்ணனை மலக்கு நாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின் மிசையே'' என்ற அடிகள் உணர்த்துவதாகக் கூறுவர் சுவாமி.[41] அதாவது ஆழ்வார் செருக்குத் தோற்றக் கூறியதை எடுத்துக் காட்டுவர். இது பராங்குச நாமத்தை விவரித்தபடியாகும்.

**4-6-2. ஆழ்வாரின் ஆற்றாமைக்குக் காரணம் காட்டல்**

'நண்ணாதார் முறுவலிப்ப' என்ற பதிகத்தில் ஆழ்வாருடைய ஆற்றாமை பேச்சுக்கு நிலமில்லாதபடிப் பெருகினதாகக்கூறுவர்.[42] இவ்விடத்தில் சுவாமி ஆழ்வாரின் ஆற்றாமைக்கு மூன்று காரணங்களைக் காட்டுவர். அதாவது இறைவனோடு கலவிபெறாமல் பிரிந்துபடும் ஆற்றாமை, சம்சாரிகளோடு இருப்பு பொறுக்க ஒண்ணாததாய் அத்தால் வரும் ஆற்றாமை, புலன்கள் (சப்தாதி விஷயங்கள்) திறத்துக் கொண்டு மூட்டித் துன்பங்களை விளைக்கையாலே வரும் ஆற்றாமை எனபனவாகும். இப்பதிகத்தில் ஈட்டில் காட்டியபடி எம்பார், கூரத்தாழ்வான் பொருளாட்சிகளைக் காட்டி உரைப்பது குறிப்பிடத் தக்கது இவ்வாறு இரண்டு இடங்களில் காணக்கிடைக்கின்றன [43]

### 4-6-3. ஆழ்வார் அழுகையைக் காட்டல்

சுவாமி தீபிகையின் தனித்தன்மையிலே முன்னோர்கள் அநுபவித்த ஆழ்வார் அனுபவத்தில் தாம் முற்றூட்டாக அனுபவித்து அதனால் ஏற்பட்ட உணர்வுகளை வெளிக்காட்டுவர். அவ்வகையில் ஆழ்வார் இறைவனைக் காணாது அழுத இரண்டு இடங்களைச் சுவாமி காட்டுவர் [44]

''அப்பனே அடலாழியானே' என்ற பாடலில் பிரமன் முதலானோர் காணவியலாத இறைவனை ஆசைப்பட்டது ஆழ்வாருடைய நப்பாசை என்கிறார். இப்பாட்டில் ''எப்பொழுதும் கண்ண நீர் கொண்டு ஆவி துவர்ந்து துவர்ந்து'' என்ற இடத்திலே கண்ணீர் இருவகை என்றும், அவற்றுள் ஒன்று ஆனந்தக் கண்ணீர் என்றும், மற்றொன்று துக்கக் கண்ணீர் என்றும் கூறுவர். அந்த இறைவனுடைய திருவுருவை நினைத்த அளவிலே பேரின்பம் பெருகிச் செல்கை யாலே ஆனந்தக் கண்ணீரும், ஆழ்வார் பாரிக்கிறபடி இறைவன் ஆழ்வார் கண்ணுக்குப் புலப்படாத வருத்தத்தால் சோகக் கண்ணீரும் வரும். இப்படி ஆழ்வார் நிலைமையில் ஆழங்காற் பட்டு அவர் அழுகையை எடுத்துக் காட்டுவர் சுவாமி

### 4 6-4 ஆழ்வார் நினைவைத் தெரிவித்தல்

'சீலமில்லாச் சிறியன்' என்ற பாடலில் 'செய்வினையோ' என்பதற்கு அழகாகப் பொருள் கூறுவர் சுவாமி. அதாவது, நல்ல காரியங்களைச் செய்யாமல் போனாலும் செய்யவேண்டுமென்று நினைத்தாலே பயனுண்டு.ஆனால் தீயசெயல்கள் திறத்தில்அவ்வா றல்ல. தீயன செய்ய வேண்டுமென்று நெஞ்சினால் நினைத்திருந்து அப்படியே செய்யாதொழிந்தால் குற்றமிலலை. ஆனால் ஆழ்வார் அப்படியில்லாமல் 'தீயன செய்து தலைக்கட்டினேன்' என்பதற் கேற்பச் 'செய்வினையோ' என்ற சொல்லைப் பெயர்த்தாகச் சுவாமி கூறுவர்.[45] இப்படி ஆழ்வாருடைய நினைவை முன்னோர் கள் விட்டுவிட்ட இடத்தையும் எடுத்துக்காட்டுவர். இவ்வாறு ஒன்பது இடங்கள் உள.[46]

### 4-6-5 ஆழ்வாரின் துடிப்புக் காட்டல்.

'அணியாராழியும் சங்கமும்' என்ற பாடலில் எல்லா ஆபரணங்களும் தானேயாகப் போரும்படியான திவ்விய ஆயுதங் களைத் தரித்து நித்ய சூரிகளுக்குக் காட்சி கொடுத்தான். அதனால்

அவர்களும் பயப்படுதற்கு இடமின்றிக்கே யிருக்கவும் வாழ்த்தும் தாகக் கூறுவர் நம்பிள்ளை. ஆழ்வார் இங்குத் துடிக்கும் துடிப்பு பரமபதத்திலிருக்கும் நித்ய சூரிகளுக்கும் உண்டாயிருக்கும் என்று நம்பிள்ளை கூறுவதாகச் சுவாமி எடுத்துக்காட்டுகிறார்.[47]

**4-6-6 ஆழ்வாரின் தொடர்ச்சியான இறையுணர்வைக் காட்டல்**

பாசுரப் போக்கிலே ஆழ்வார் உணர்ந்த தொடர்ச்சியான இறையுணர்வுகள் சிற்சில பாடல்களில் அமைந்துள. இதனால் இறைவனுடைய முழுமையான திருமேனி அழகு (லாவண்யம் அல்லது சமுதாயச் சோபை), அவயவ அழகு (ஸௌந்தர்யம்) ஆகியவை அனுபவிக்கப் பெறும்.

> **''வங்கயக் கண்ண னென்கோ பவளச் செவ்வாய னென்கோ**
> **அங்கதி ரடிய னென்கோ அஞ்சன வண்ண னென்கோ**
> **செங்கதிர் முடிய னென்கோ திருமறு மார்வ னென்கோ**
> **சங்குசக் கரத்த னென்கோ சாதிமா ணிக்கத் தையே''**

என்ற பாடலில் ஆழ்வார் தம்மை நோக்கித் தம்மோடு முதலுறவு பண்ணின இறைவனது திருக்கண்களில் ஈடுபட்டுப் 'பங்கயக் கண்ணன்' என அழைக்கிறார். அந்தக் கண்ணுக்குத் தப்பினாலும் தப்ப முடியாத புன்முறுவலையுடைய வாயைக் காட்டினான். உடனே 'பவளச் செவ்வாயன்' என அழைக்கிறார். இத்தக் கண், வாய், அழகுகளுக்கு ஈடுபட்டு நிலத்தில் விழுந்ததால் திருவடிகள் தென்பட்டன. இதுபற்றி 'அங்கதிரடியன்' என்கிறார். அத்திரு வடியிலே விழுந்தவர் அனுபவிக்கிற வடிவழகில் ஈடுபட்டு' அஞ்சன வண்ணன்' என்கிறார். அவ்வாறு வடிவழகுடையவன் எல்லார்க்கும் தலைவன் என்பதைக் காட்டத் திருமுடியுடன் விளங்கிய அழகைக் கண்டு 'செங்கதிர் முடியன்' என்கிறார். இப்பெரியோனை எவ்வாறு அணுகுவது என்று எண்ணிப் பின்வாங்காமல் எப்போதும் இறைவனது திருமார்பிலிருந்து புருஷகாரம் செய்யும் பிராட்டியின் சமபந்தம் கொண்டு 'திருமறு மார்பன்' என்கிறார். இப்படி இறைவன்-இறைவி சேர்த்தியைக் கண்டு அஞ்ச வேண்டாதபடி சங்கு சக்கரத்தோடு இருக்குமிருப்பைக் காட்டினான். அவ்வாறு காட்டவே 'சங்கு சக்கரத்தன்' என்று சொல்கிறார்.[48]

**4-6-7. ஆழ்வார் சொற்களுக்கு அனுபவித்துப் பொருள் கூறல்**

'தோவ வாய்ச்சி உரலோடார்க்க' என்ற பாடலில் கண்ணனை உரலோடு ஆய்ச்சி கட்டியது ஆழ்வாருடைய திரு

மேனியில் உறுத்தியதாக அனுபவிப்பர் நஞ்சீயர் ஆனால் யசோதைப் பிராட்டியானவள் கண்ணன் எது செய்தாலும் 'அஞ்சவுரப்பாள கோதை ஆணாட விட்டிட்டிருக்கும்' என்பதற்கிணங்க அவனுடைய திருமேனியில் ஒரு நோவும் ஏற்படுவதற்கு இடமில்லையாதலால் இச்செயலை நினைப்பவர்களின் உள்ளம் நோவுப்படியாகச் சுவாமி சுவையாக எடுத்துக்கூறுவர்.[49]

### 4 6-8. ஆழ்வார் கண்ட காட்சியை ஐயந்திரிபறச் சொல்லல்

'அறிந்தறிந்து தேறித்தேறி' என்னும் பாடலில் 'நறுந்துழாயின் கண்ணியம்மா நானுன்னைக் கண்டு கொண்டே' என்ற தொடரைப்பார்க்கும்போது ஆழ்வார் விரும்பியபடியே இறைவன் காட்சி தந்ததாகத் தோன்றும். ஆனால் அடுத்த பாட்டைத் தொடங்கும் போது 'கண்டுகொண்டு' என்று வருவதால் இப்பாட்டில் 'நான்னுன்னைக் கண்டுகொண்டு' என்பதற்கு "நெஞ்சென்னும் உட்கண்ணுக்கே தந்த காட்சியே ஆகும்" என்றுரைப்பர் சுவாமி.[50] மேலும் அடுத்த பாட்டில் 'கண்டு கொண்டு' என்று சொன்னது "வெளியிலே காண விரும்புவது" என்பதை ஆசாரிய இருதய நூற்பா வாயிலாக எடுத்துக்காட்டுவர் சுவாமி.

இவ்வாறே 'சொல்ல மாட்டேனடியேன்' என்னும் பாடலுக்கும் சுவாமி உரை அமைந்துள்ளது [51]

### 9-6-4. ஆழ்வார்-இறைவன் உரையாடல்களைக் காட்டல்

இரு பாடல்களை இணைக்கச் சில நிகழ்ச்சிகளைப் பின்புலமாக அமைத்துக் கொள்வர் ஆழ்வார். 'இன்றென்னைப் பொருளாக்கி' என்ற பாடலில் ஆழ்வார், இறைவன் தம்மைத் திருநாட்டிலே கொண்டு போவதாக விரைகிறபடியைக் கண்டு "இன்று என்னை வல்லாதபடி த்வரிக்கின்ற (விரைகின்ற) தேவரீர் இதற்குமுன்பு நெடுநாள்விட்டு ஆறியிருந்தபடி எங்ஙனே?" என்று இறைவனைக் கேட்கிறார் [52] அதற்குப் பதில் சொல்லமாட்டாது தலை கவிழ்ந்திட்டு, வாய் மூடியிருந்து"ஆழ்வாரே உமக்கு நான் செய்ய வேண்டுவது யாதென்ன" அதற்குப் பதிலாக "உற்றேன் உகந்து பணிசெய்து" என்கிறார் ஆழ்வார்.[53] இதில் முன்னடிகள் இறைவனைப் பார்த்துச் சொன்னதாய், முன்னிலையாய் 'எந்தாய்' என்று அமைந்ததைக் காணலாம். அதற்கு இறைவன் தலைதுலுக்கி உகப்புக் காட்டினானாம். அதை அனைவர்க்கும் எடுத்துச்சொல்கின்றன பின்னடிகள்.

### 4-6-10. ஆழ்வார் பாசுரச் சொற்போக்கில் மேலும் சொல் அமைந்ததைக் காட்டல்

மேற்கூறியபடி தொடர்ச்சியான இறையுணர்வில் ஆழ்வாருக்கு ஏற்பட்ட அனுபவமல்லாமல் இறைவனுக்கு ஏற்பட்ட நிலைமையையும் எடுத்துரைப்பர் சுவாமி. அதாவது ஆழ்வார் ஒரு சொல் சொல்ல அதனால் இறைவனது நிலைமை மாற அதுகண்டு மேலும் சொல் சொல்ல இவ்வாறு ஆழ்வார்-இறைவன் இருவர் தம் நிலைமைகளையும் எடுத்துக்காட்டுவதாகும்.

''தாள்களை எனக்கே தலைத்தலைச் சிறப்பு'' என்ற பாடலில் ''என்னுயிரை அறவிலை செய்தனன்'' என்பது ஆச்சரியமான தொடர் இறைவன் செய்த பேருதவிக்குக் கைம்மாறாகத் தம் ஆன்மாவை ஆழ்வார் கன்னிகாதானம் செய்தாராம். இதனைப் பார்த்த இறைவன் தமக்கு ஓர் அரிய பொருள் கிடைத்தது போலவே புகர் அடைந்தானாம். அதனைக் கீழ்க்கண்ணால் கண்ட ஆழ்வார் 'சோதீ' என்ற அடுத்த சொல்லால் நெஞ்சுகுளிர விளிக்கிறார். உடனே இறைவனது அவயவங்களும் பணைக்கத் தொடங்கியதாம். இதனைக் கண்ட ஆழ்வார் ''தோள்கள் ஆயிரத்தாய், முடிகளாயிரத்தாய்'' என்று பேசுகிறார்.[54] இவ்வாறு ஆழ்வாருடைய சொல்லென்ன, அந்த சொல்லின் இனிமையறிந்து இறைவனுக்கு ஏற்பட்ட புகரென்ன, அப்புகர் கண்டு பூரித்துச் சொன்ன சொல்லென்ன, இப்படியாக ஆழ்வார்-இறைவன் நிலைமைகள் ஒரு படிப்பட்டு அமைந்திருப்பதைச் சுவாமி காட்டும் உரைநலம் அறியதக்கதாகும்.

### 4-6-11. அகப்பொருள் பாடல்களில் ஆழ்வார் நிலைமைகளை எடுத்துரைத்தல்

திருவாய்மொழியில் இருபத்தேழு பதிகங்கள் ஆழ்வார் பெண்மையை ஏறிட்டுக்கொண்டு பாடியவையாகும் அவற்றில் தலைவியாகப் பதினேழு பதிகங்களும், தாயாக ஏழு பதிகங்களும், தோழியாக மூன்று பதிகங்களும் அமையப் பெற்றுள்ளன. இறைவனைக் காணாமையால் ஏறிட்டுக்கொண்ட இப்பெண்மைப் பாசுரங்களில் தன் வாயாலும் தாய் வாயிலாகவும் தோழி வாயிலாகவும் தம் ஆற்றாமைகளை எடுத்துரைப்பர் ஆழ்வார். இவற்றைச் சுவாமியும் இடத்திற்கேற்ப ஆழ்வாருடைய நிலைமைகளை எடுத்துக்காட்டுவர்.

'திருந்தும் நான்மறை வாணர்கள் வாழ்' என்ற பாசுரம் தோழி பாசுரமாகும். இப்பாசுரம் தோழிப் பேச்சாயினும் தலைவியான

பராங்குச நாயகியின் பேச்சோடே கூட்டி உரைப்பர் சுவாமி. இப்பாடலில் 'கற்கும் கல்வியெல்லாம்' என்பது தோழியின் பேச்சு அல்லது தலைவியின் பேச்சோடு கூட்டவும் தகும் என்பதை எடுத்துக் காட்டுவர் சுவாமி. தோழியின் பேச்சாகக் கொண்டால் இப்பராங்குசநாயகி பேசுகிற பேச்செல்லாம் இறைவனதுதிருநாமமேயாயிருக்கும் என்று பொருள் கொள்வதாகும். தலைவியின் பேச்சோடு கூட்டிச்சொல்லும்போது ''உலகில் யார் எந்தக் கல்வி கற்றாலும் அக்கல்வியயெல்லாம் இறைவன் பரமேயொழிய அவன் அளவிலே சென்று நில்லாத கல்வியொன்று மில்லை'' என்று தலைவி சொல்வதாக உரைப்பர் சுவாமி[55] இவ்வாறு அகப்பொருள் பாடல்களில் புகுந்து தலைவியின் நினைவை எடுத்துக் காட்டுவது குறிக்கொள்ளத் தக்கது.

இங்ஙனம் ஏழு இடங்களில் காணத்தகும்.[56]

4-6-12. அகப்பொருள் பாடலில் பறவைகளின் நிலைவைக் காட்டல்

பராங்குச நாயகி இறைவனைக் காணாது வருத்தமுற்றுச் சில பறவைகளைத் தூது விடுக்கிறாள். இவ்வாறு நான்கு பதிகங்கள் உள. அவற்றில் தாம் சொல்லவிருக்கும் தூதுமொழிகளைத் தூதுபோகும் பறவைகளுக்குச் சொல்வதற்கு முன்பாக அவை நினைப்பதையும் கூட்டி ஆழ்வார் பதிலுரைப்பதாகச் சுவாமி எடுத்துக் காட்டுவர்.

> **''நுங்கட்கு யானுரைக்கேன் வம்மின் யான்வளர்த்த கிளிகாள்**
> **வெங்கண் புள்ளூர்ந்து வந்து வினையேனை நெஞ்சம் கவர்ந்த**
> **செங்கண் கருமுகிலைச் செய்யவாய்ச் செழுங்கற் பகத்தை**
> **எங்குச் சென்றாகிலும் கண்டு இதுவோ தக்கவா றென்மினே''**

என்னும் பாடலில் கிளிகளைப் பார்த்துத் தலைவியான பராங்குச நாயகி சொல்கிறாள். தாம் சொல்லப்போகும் தூது மொழிகளுக்கு முன்பாகக் கிளிகள் கருதியதைக் காட்டுகிறாள்.[57] அதாவது ''நாங்கள் யாரிடம சொல்லவேணும்; எங்கே சொல்ல வேணும்; யாது சொல்ல வேணும்'' என்ற கேள்விகளுக்கு உரிய விடையைப் பாடலின் மற்ற மூன்றடிகள் உணர்த்துவதாகக் காட்டுவர் சுவாமி.

இங்ஙனே 'திறங்களாகி எங்கும்', 'இடரில் போகம்மூழ்கி', 'திருந்தக் கண்டு', 'இத்தனை வேண்டுவது' ஆகிய பாடல்களில் பறவைகளின் நினைவுகளைச் சுவாமி காட்டுவது குறிப்பிடத் தக்கது.[58]

### 4-6-13. ஆழ்வாரின் அர்ச்சானுபவம்

திருவாய்மொழியில் அர்ச்சாவதார அனுபவங்களைப் பதிகங்களாக உரைத்திருப்பினும் ஆழ்வாரின் குறிப்பான நோக்கை எடுத்துக்காட்ட வல்லவர் முன்னோர்கள். அவர்களைப் பின் பற்றியே சுவாமியும் ஆழ்வார் பரமாக நின்று அவர் தம் அர்ச்சானுபவங்களை மூன்று இடங்களில் எடுத்துக்காட்டுவர்.[59]

'கையுள் நன்முகம் வைக்கும்' என்ற பாடலில் அழகிய முகத்தைக் கையிலே யிட்டு வைத்து நைகின்றாளாம் பராங்குச நாயகி. எதற்கெனில் திருக்குறுங்குடி நம்பியின் செந்தாமரைக் கண்ணும், அல்குலும், இடையும் வடிவும், திருத்தோள்களும் ஆழ்வாரான பராங்குச நாயகிக்குத் தோன்றி நிற்க அவற்றை அணைக்கக் கை எட்டாமையாலே கையுள் முகம் வைத்து நைய வேண்டியதாயிற்று என்று தாய்க்கு நாயகி விடையிறுப்பதாக அமைந்ததைச் சுவாமி காட்டுகிறார்.[60]

### 4-7. தீபிகையின் தனித்தன்மை

ஆழ்வார் திருவுள்ளக்கிடக்கைப் பாங்கில் அமைந்த நுண் பொருள்களை இவ்வாறு அலகுஅலகாக தீபிகை உரை எடுத்துக் காட்டுகிறது. மேலும் அவர்தம் தீபிகை உரை அந்த உள்ளக் கிடக்கைகள் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தி நோக்கும் நினைவில் அமைந்துள. இவை ஒருவாறு சுவாமியினுடைய தீபிகை உரையின் தனித்தன்மையை எடுத்துக் காட்டுவனவாகும்.

1. ஆழ்வார் பாடலில் துதிநூல்/தொடர் அமைந்ததை எடுத்துக்காட்டல்
2. ஆழ்வார் பாடலில் ஆழ்பொருளைக் காட்டல்
3. ஆழ்வார் சொல்லாட்சியின் உறைப்பைக் காட்டல்
4. பாடலைப் படிக்கும்போதே பொருள் விளங்குமாறு உரைத்தல்
5. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டல்
6. பிரம்ம சூத்திரத்திற் கொப்பாகச் சொல்லல்
7. ஸ்ரீபாஷ்யப் பொருள்நோக்கில் உரையிடல்
8. தத்துவப் பொருளை விளக்கிக் கூறல்
9. இரகசிய நூல்களில் ஆழ்பொருளை எளிமையாக விளக்கிச் சொல்லல்
10. ஐயந்திரிபறச் சொல்லல்

11. உரைவேறுபாடுகளைக் காட்டல்
12. சொல் திறங்காட்டல்
13. வடமொழி நூல்கள் மேற்கோளாட்சி
14. தமிழ் நூல்களின் மேற்கோளாட்சி
15. அருளிச்செயல்களை மேற்கோளாக ஆளுதல்
16. அருஞ்சொல் விளக்கம் தருதல்
17. வைணவ நூல்களின் மேற்கோளாட்சி
18. பாடபேதம் காட்டல்
19. கொண்டுகூட்டுமுறை காட்டல்
20. 'ஆக' என்று தொடங்கி ஒருமித்த கருத்துக் கூறல்
21. உள்ளுறை (குறிப்புப்) பொருள் காட்டல்
22. உரையாடல் போக்கில் உரைநயம் காட்டல்

23. தம் பாட்டனாரான அழகிய மணவாளச் சீயர் தம் உரையைக் காட்டல்

24. புராண, இதிகாசக் கதைகளைக் கூறி விளக்குதல்

25. உரைக்கு உரைசெய்த உத்தம உரைகாரர்

4-7-1. ஆழ்வார் பாடலில் துதிநூல்/தொடர் அமைந்ததைக் காட்டல்

மேற்கோள் காட்டி விளக்குதல் என்னும் தலைப்பின்கீழ் வேதம், இதிகாசம், புராணம் மற்றும் வடமொழி, தமிழ்மொழி நூல்கள் முதலானவற்றின் தொடர்களை ஆங்காங்கே எடுத்துக் காட்டி விளக்கம் கூறியிருப்பினும் சுவாமி ஓர் அரிய ஆராய்ச்சி செய்து ஆழ்வார் பாடலைப் பின்பற்றி இன்ன இன்ன இடத்தில், இன்னஇன்ன நூலில், இன்ன இன்ன ஆசாரியர்கள் இவ்வில் வாறுஉரைத்துள்ளனர் எனச் சுவைதர எடுத்துக்காட்டுவர்.

ஆழ்வாருக்குத் தாம் இறைவனை ஆரக்கண்டு களித்தும் பண்டை வினைகளெல்லாம பற்றோடு அறுத்தும் ஒரு பெரிய பேரின்பத்தைவிளைவிக்கவில்லையாம். திருவாய்மொழிபாடியதன் வாயிலாக வைணவர்களுக்கெல்லாம் உதவப் பெற்றது ஒன்றே பிறரால் பெறமுடியாத பேரின்பமாக ஆழ்வார்க்கு இருந்ததாம். இதனைத் 'தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்' என்ற தொடர் உணர்த்துவதாகக் கூறுவர்.[61] இதனை உட்கொண்டே முதன் முதலாக நாதமுனிகள் திருவாய்மொழிக்குப் 'பத்தாம்ருதம்' என்ற தனியன் அமைந்ததாகக் கூறுவர் சுவாமி[62]. இவ்வாறே ஆளவந்தார், எம்பெருமானார் கூரத்தாழ்வான், பட்டர் முதலானோர் தோத்திர நூல் தொடர்கள் ஆழ்வார் பாடலை அடியொற்றி அமைந்த அழகைத் தீபிகையில் காண முடிகிறது.[63]

இவ்வாறு முன்னோர்கள் சொல்லாமல் தைச் சுவமி விட்ட தம் அனுபவத்தால் ஆசாரியர்கள் திருவுள்ளமறிந்து உரைப்பது காணலாம்

### 4-7-2. ஆழ்வார் பாடலில் ஆழ்பொருளைக் காட்டல்

'அமரர்க்கரியானை' என்ற பாடலில் அமரர்கள், தமர்கள் என்று வேறுபடுத்திக் காட்டியதன் ஆழ்பொருளை எடுத்துரைப்பர் சுவாமி[64] அதாவது அமரர்களான பிரம்மாதி தேவர்கள் ஒரு பயனைக் கருதி இறைவனைத் தொழுது பயனைப் பெற்றுப் பின்னர் எதிரம்பு கோப்பதுமாயிருப்பர். இறைவனுடைய வடிவழகிலும் ஈடுபட அறியார். ஆகவே அமரர்கள் தமர்களில் சேர்ந்தவர்களல்லர் அமரர்களும் தமர்களும் அடியவர்களே ஆயினும் சிலரே (சில விலக்ஷண வ்யக்திகளே) தமர்களாவர். அவர்களுக்கு இறைவன் எளியவன்; மற்றையோர்க்கு அரியன் என்பதைக் காட்டுகிறார் சுவாமி.

### 4-7-3. ஆழ்வார் சொல்லாட்சியின் உறைப்பைக் காட்டல்

ஆழ்வார் திருநகரியைச் சேர்ந்த ஒன்பது திவ்விய தேசங்களுள் பெருங்குளம் எனப்படும் திருக்குளந்தை இறைவன் பெயர் மாயக் கூத்தன் என்பதாகும். அப்பெருமானிடத்து ஆழ்வார்க்குள்ள ஈடுபாட்டைச் சொல்லும்போது, "மாடக்கொடி மதிள்தென் குளந்தை வண்குடபால் நின்ற மாயக்கூத்தன்" என்பர்,[65] இவ்விடத்தில் 'மாயக்கூத்தன்' என்ற சொல்லாட்சியில் பொதிந்த பொருளைச் சுவாமி மிகவும் விரிவாக எடுத்துரைப்பர். அதாவது 'மாயன்' என்ற சொல்லைக் கொண்டு எல்லாரையும் மயக்கி ஒரு கூத்துக் காண்பன் என்றும், மாயையினால் அவதாரங்களை செய்து அவற்றிலே குடக்கூத்து மரக்கால் கூத்து, குரவைக் கூத்து என்னும் படியான பலவகைக் கூத்துக்கள் செய்பவன் என்றும் சொல்லலாம். மேலும் நம்போலவார்க்கு நெஞ்சினாலும் நினைக்க முடியாதபடி ஒரு மாயக்கூத்தைச் செய்பவன என்றும் கூறலாம். அவன் கண்ணனாய் அவதரித்துச் செய்த பதினெட்டு வகையான கூத்துக்களை விளக்கமாக அற்புதமாக விளக்கிக் காட்டுவர் சுவாமி.

### 4-7-4 பாடலைப் படிக்கும்போதே பொருள் விளங்குமாறு உரைத்தல்

'வம்பவிழ் கோதை பொருட்டா' என்னும் பாடலில் நப்பின்னைப் பிராட்டியைத் திருமணம் செய்வதற்காக ஏழு

எருமையும் எவ்வித வருத்தமுமின்றிப் பொருத செயலானது பற்றித் 'தொல்புகழ்' என்று சொல் வந்ததாகப் படிப்போர் எண்ணுவர். இறைவனுடைய இயற்கை குணங்களான எளிவந்த தன்மை, புரையறக் கலக்கும் தன்மை ஆகியவற்றையே 'தொல் புகழ்' என்னும் சொல் உணர்த்துவதாகச் சுவாமி உரைப்பர்[66]

இவ்வாறே 'ஆதியம் சோதிவுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த' என்ற பாட்டில் சகுதாரணமாக இறைவன் தன்னுடைய திவ்வியமான சோதிவடிவைப் பரமபதத்திலே வைத்துவிட்டு இந் நிலத்திலுள்ள உருவத்தோடே இங்குவந்து பிறந்ததாகக் கூறுவர். இப்படிக் கூறுவதும் செவியில் ஏற்கத்தக்கது என்றும் 'அங்கு வைத்து'[67] என்பதனை ஒரு முழுச்சொல்லாகக் கொண்டு ''அங்குள்ள படியே கொண்டு'' என்ற பொருளைக் காட்டுவதாக உரைப்பர்.[68]

### 4-7-5. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டல்

திருவாய்மொழியில் முதல்பத்திய 'உடல்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' என்று இறைவன் எல்லாப் பொருள் களுக்கும் அந்தர்யாமியாதலால் எந்தப் பொருளைச் சொல்லுகிற சப்தமும் இறைவன் அளவு சென்று சொல்லுமென்று வேதாந்தம் நிலைநாட்டியுள்ளது என்று சொல்கிறார். அது தன்னையே 'புகழுநல் ஒருவன்' [69] என்ற பதிகத்தில் விரிவாகச் சொல்வதாகக் கூறுவர். அதாவது உலகில் காணப்படும் பொருள்கள் யாவும் மூன்றுவகைப்பட்ட அளவுகளையுடையது. ஒன்று, எந்தப் பொருளை எடுத்துக்கொண்டாலும் இது இன்ன இடத்திலுள்ளது மற்றோரிடத்திலில்லை என்றும், இரண்டு, இது இன்ன காலத்தி லுள்ளது மற்றொரு காலத்திலில்லை என்றும், மூன்று, இது இன்ன பொருளாகவுள்ளது மற்றொரு பொருளாக இல்லை என்றும் சொல்லக் கூடியதாகவே இருக்குமாதலால் இறைவன் தவிர எல்லாப் பொருள்களும் இவ்வித மூன்றுவித அளவுகளை உடைய தாகும் மூன்று அளவுகள் இல்லாதவன் எங்கும் உள்ளவனாய், எல்லாப் பொருள்களும் தானாகவுள்ளவனாய் இருக்கையாலே 'அனந்தன்' என்ற பெயர்பெற்றான் என்று விளக்கமாக விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலைநாட்டியதை எடுத்துக் கூறுவர் சுவாமி.

### 4-7-6 பிரம்மசூத்திரத்திற்கு ஒப்பாகச் சொல்லல்

ஆழ்வார் பாடலை அனுபவிக்கும் போதும் அவற்றின் உரை களை அனுபவிக்கும்போதும் மற்ற நூல் தொடர்களை ஒப்பாக

அனுபவிப்பது சுவாமிக்கு உண்டு. அவ்வகையில் பிரம்மசூத்திரப் பொருளுக்கு ஒப்பாக ஓர் இடத்தைக் காட்டுகிறார்.

'துன்பமு மின்பமு மாகிய' என்ற பாடலில் இன்புறுமிவ் விளையாட்டுடையான்' என்பதற்குச் சுவையை உண்டுபண்ணு வதற்கான திருவிளையாடல்களை யுடையவன் என்ற பொருள் கூறுவர்.[70] இவ்விடத்தில் சுவாமி பிற நூல்களின் ஆழ்ந்த அனுப வத்தால் 'லோகவத்து லீலா கைவல்யம்' என்று பிரம்ம சூத்திரத் தொடர்கொண்டு ஒப்புமை காட்டுவர்.

## 4-7-7. ஸ்ரீபாஷ்யப் பொருள் நோக்கில் உரையிடல்

சாத்திரங்களில் பாவங்களைப் பற்றி இருவகையாகச் சொல்லி யிருக்கிறது. பயனை அனுபவித்தே பாவங்களைத் தொலைக்க வேண்டுவது ஒரு வகை. பிரம்ம வித்துக்குப் பாவ சம்பந்தம் அறவே ஒழிந்துவிடும் என்பது மற்றொரு வகை இதனை ஸ்ரீபாஷ்யத்தில் இறைவனை அடிபணியாதவர்கள் முதல் வகை யினைச் சார்ந்தவர்களென்றும், இறைவனை அடிபணிந்து பாவத் தைப் போக்கிக் கொள்பவர்கள் இரண்டாவது வகையில் சார்ந்த வர்களென்றும் சுவாமி எடுத்துக் கூறுவர். இதன் உட்கருத்தை உட்கொண்டே 'சேர்ந்தாற் றீவினைக்கு' என்ற தொடர் அமைந்த தாகக் கூறுவர் சுவாமி.[71]

இவ்வாறு ஸ்ரீபாஷ்யப் பொருள் நோக்கில் 'உளனெனிலுளன்' 'உலகில் திரியும் கரும கதியாய்', 'வாழ்தல் கண்டோம்', 'வாரிக் கொண்டு', நாகத்தணையானை' ஆகிய பாடல்களிலும் சுவாமி உரையிட்டுள்ளதைக் காணமுடிகிறது.[72] இத்தகு நெறி மற்ற உரைகளில் இல்லை.

## 4-7-8. தத்துவப் பொருளை விளக்கிக் கூறல்

'உள்ளதும் இல்லதும்' என்ற பாடலில் உள்ளது என்றது அழியாத பொருள் என்றபடி. இல்லது என்றது அழியுந்தன்மை யுடையது என்றபடி ஸ்ரீவிஷ்ணுபுராணத்தின் இரண்டாம் அம்சத்தில் 'அஸ்தி' என்ற சப்தத்தாலே 'அறிவுள்' பொருளையும், 'நாஸ்தி' என்னும் சப்தத்தாலே 'அறிவில்' பொருளையும் சொல்லி யிருக்கையாலும், தைத்திரீய உபநிடதத்தில் 'சத்ய' சப்தத்தாலே 'அறிவுள்' பொருளையும், 'அந்ருத' சப்தத்தாலே 'அறிவில்' பொருளையும் சொல்லியிருக்கையாலே—இவற்றை அடியொற்றி ஆழ்வார் 'உள்ளது இல்லது' என்று குறிப்பிடுவதாக எடுத்துக்

காட்டி இதில் உறைந்துள்ள தத்துவப் பொருளையும் சுவாமி எடுத்துக் கூறுவர்.[73]

இவ்வாறே 'தன்னில் மூவர் முதலாய' என்ற பாடல் உரை அமைந்துள்ளதையும் காணலாம்.[74]

### 4-7-9. இரகசிய நூல்களின் ஆழ்பொருளை எளிமையாக விளக்கிச் சொல்லல்

'கருமாணிக்கமலை' என்னும் பதிகத்தில் பிறர்க்கு உரித்தாகாது 'இறைவனுக்கே அடிமைப்படும் தன்மையை (அநந்யார்ஹத்வம்) அறுதியிட்டார்.[75] அடுத்த பதிகமான 'நெடுமாற்கடிமை'யில் பாகவதர்கட்கு அடிமையாயிருக்கும் நிலைபற்றிச் சொல்கிறார்.[76] இவ்விடத்தில் சுவாமி திருமந்திரத்தில் 'நம:' பதத்தில் ஒரு பொருளான 'உற்றது முன்னடியார்க் கடிமை' என்கிறபடியே இதிலே (நம பதத்திலே) பாகவத சேஷத்வம் அநுஸந்தேயம் என்பதைத்தெரிவிக்கும் வகையிலே எடுத்துரைப்பர் சுவாமி.[77] அதாவது ஒரு பொருளிடம் அன்பு வைத்தால் அது அவ்வளவோடு நில்லாது அதனோடு சம்பந்த சம்பந்தம் பெற்ற பொருள்களிலும் பெருகிச் செல்லும் என்பதை அனைவரும் தாம் தாம் அனுபவத்தில் அறியலாம். அப்படியே பாகவதர்களிடம் பக்தி ஏற்படுவதாவது இறைவனிடத்து இருக்கும் பக்தியின் எல்லை நிலமாக உண்டாவது. எனவே, இறைவனிடத்துப் பக்தியின் உறைப்பையே பாகவதர்களிடம் உள்ள பக்தி வெளிப்படுத்தும் என்பர்.[78]

### 4-7-10. ஐயந்திரிபறச் சொல்லல்

நம்பிள்ளை முதலான ஆசாரியர்கள் எவ்வளவுதான் எளிமையாக உறைத்திருப்பினும் இக்காலத்து மக்களுக்கு அப்பொருள்கள் சிறிதும் விளங்கா; இது தன்னை விளக்கமாகப் பெறஆசாரியர்கள் பால் அடிபணிந்து காலக்ஷேப முறையில் அறிய வேண்டும், அதற்கு வாய்ப்பில்லாதர்க்கு உதவும் வகையில் சுவாமி தம் தீபிகை உரை மூலம் ஆழ்வார் சொற்களில் பொருள் கொள்வதில் வரும் மயக்கத்தையும் களைந்து விவரித்துரைப்பர்.

### 4-7-10-1 ஆழ்வார் சொற்களால் பொருள்கொள்வதில் மயக்கம்

'சரணமாகிய நான்மறை நூல்களும்' என்ற பாடலில், 'மரணந்தோற்றம் வான்பிணி மூப்பொன்றிவை மாய்த்தோம்

என்ற தொடரால் ஆழ்வார் தம்மைப் பற்றி ஏதோ சொல்லிக் கொண்டிருப்பதாகத் தோற்றும். மேலும் இவ்விடத்தில் 'மாய்த் தோம்' என்ற தன்மை வினைமுற்று காண்பதாலும், முன்னிலை வினைமுற்று காண்பதாலும், முன்னிலை வினைமுற்று இல்லாமை யாலும் ஐயமேற்படும். இதனைக் குறிப்பாக எடுத்துக்காட்டுவர் சுவாமி. 'முகுந்தமாலை' என்னும் நூலிலும் ஆத்மாவை நிந்திக் கும் போது பிறரை இகழ்ந்து கூறுவதிலே முழுநோக்காக வழங்கப் பட்டுள்ளதாம். உலக வழக்கிலும் நாம் பிறரை ஏசிச்சொல்ல வேண்டும்போது 'நாம் நன்றாக வாழ்ந்து விட்டோமே!' என்று தம்மையே ஏசிச் சொல்வது போல இங்கும் ஆழ்வார் 'மரணத் தோற்றம் . மாய்த்தோம்' என்று தன்மை வினைமுற்றாகப் பிறரைச் சொன்னபடியிலே அமைந்ததாக எடுத்துக்காட்டுவர் சுவாமி.[79]

'ஊழிதோறூழி' என்ற பாடலில் 'உலகுக்கு நீர் கொண்டு' என்ற தொடருக்கு உலகுக்கெல்லாம் உதவுவதற்காக 'நீரைக் கொண்டு' என்று பாடலைப் படிப்போர் பொதுவாகப் பொருள் கொள்வர் ஆனால் இந்த இடத்தில் "உலகமெல்லாம் வெள்ளமிட வேண்டும்படியான நீரைச் சொரிந்து (முகந்து)கொண்டு" என்றே பொருள் கொள்ள வேணுமாய்ப் பொருள் உரைப்பர் முன்னோர். அவர்கள் கூறியதையே சுவாமி இங்குக் காட்டியிருப்பினும் இதில் ஏற்பட்ட சந்தேகத்தைத் தீபிகை மூலம் தெளிவுபெற வேண்டி யுள்ளது. உலகுக்கு உதவுவதற்கு நீரை எடுத்துக் கொண்டு என்று சொன்னால் இது மேகத்தின் சாதாரண குணமாகும் ஆதலால் ஆழ்வார் அவ்வியற்கைத் தன்மை அறிந்தவராயினும் தான் இறைவனைப் பிரிந்து வருந்துவது போலே வானமும் வருந்து வதைக் காட்டும் வகையிலே 'மதுசூதல பாழிமையிற் பட்டு அவன் கண் பாசத்தால் நைவாயே என்ற ஈற்றடியில் சொன்ன வார்த்தை பயனற்றுப் போகாமைக்காக உலகமெல்லாம் நீரைச் சொரிந்து கொண்டு' என்று பொருள் கொள்ளவேணும் என்றும் அதுதான் சிறந்து விளங்குவது என்றும் கூறுவர்.[80] இவ்வாறு ஐயங் களையும் போக்கும் நெறி பத்து இடங்களில் காணப்படுகிறது [81]

## 4-7-11. உரைவேறுபாடுகளைக் காட்டல்

திருவாய்மொழிக்கமைந்த உரைகளில் வாதிகேசரி அழகிய மாணவாளச் சீயர் அருளிய பன்னீராயிரப்படி உரை காலத்தால் பிற்பட்டது. தாம் கேட்டபடியே காட்டுவதாக

உரை அவதாரிகையின் முதலிலே கூறியுள்ளதால் முன்னோர் கருத்துக்களைத் தன்னுள் கொண்டது என்பது தெளிவாகும்.[32]

தீபிகை உரை முன்னோர் உரைகளைத் தழுவி உரைக்கப் பெறினும் சிற்சில இடங்களில் வேறுபட்ட உரைகளைத் தீபிகை உரையில் ஆங்காங்காங்கே சுவாமி விளக்கிய திறம் இங்குக் குறிப் பிடத்தக்கது:

'குன்றமெடுத்த பிரான் அடியாரொடும் ஒன்றி நின்ற சட கோபன்' என்ற பாடலின் தொடருக்கு ஆறாயிரப்படி உரைகாரர் அச்சொல்லமைப்பை நோக்கி உரை வழங்கினார். அதாவது குன்ற மெடுத்த பிரானுடைய அடியார்கள் குன்றமெடுத்த காலத்திலும் பிற்காலத்திலும் உண்டு. குன்றமெடுத்த காலத்தில் அக்குன்றினடி யிலே ஒதுங்கி நின்றவர் அடியரானவர். அவர்களோடு ஒன்றி நின்ற சடகோபன்' எனப் பிள்ளான் உரை வழங்குகிறார். ஆனால் பெரியவாச்சான் பிள்ளை பிற்காலத்திலுள்ள அடியார்களைக் கொண்டு உரை வழங்குகிறார். நம்பிள்ளை ஈட்டுரை இரண்டுக்கும் பொதுவாக அமைந்துள்ளது. அதாவது ' கோவர்த் தன் நோத்தாரணம் பண்ணின நீர்மையிலும் அப்போதை அழகி லும் ஈடுபட்டிருக்குமவர்களோடே கூடிநின்று தாமும் ப்ரீதராய் ப்ரீதிக்குப் போக்குவீடாகச் சொன்ன பாசுரமாயிற்று'' என்பர்.

'அமரர் தொழப்படுவானை' என்ற பாடலில் 'அவன் தன் னொடொன்றாக, அமரத் துணியவல்லவர்கள் ஒழிய அல்லாதவ ரெல்லாம்' என்ற தொடருக்குப் பன்னீராயிரப்படி உரைகாரர் தவிர மற்ற உரைகாரர்கள் நால்வரும் ஒரே பொருளை உரைக்கின் றனர்.[33] அதாவது ஆன்மாவை அனுபவிப்பதாகிற கைவல்யமாகிற உறுதிப்பொருளிலே ஊன்றியிருப்பவர்கள் என்று 'அமரத்துணிய வல்லார்கள்' என்பதற்குப் பொருள் உரைக்கின்றனர். மேலும் 'அல்லாதவரெல்லாம்' என்பதற்குக் 'கைவல்யத்திலகப்படாதே இறைவனுடைய குணங்களுக்குத்தோற்றவர்கள் எல்லாரும்' என்று பொருள் கொண்டனர். ஆனால் பன்னீராயிரப்படி உரைகாரர் ''அமரத்துணிய வல்லவர்கள்—நிலைநின்ற பயிற்சியைப் பண்ண வல்ல பக்தியில் மூழ்கியவர்கள் (அத்யவஸாயம்)'' என்று சொல்லி, 'அல்லாதவரெல்லாம்' என்பதற்கு 'இந்த யோகத்தால் பக்தி கை வராதவரெல்லாரும்' என்று அருளியதைக் காட்டுவர் சுவாமி. இத்தகைய வேறுபாட்டின் பொருளைப் பெரியவாச்சான் பிள்ளை யும் நம்பிள்ளையும் இரண்டாவது பொருளாக எடுத்துக்காட்டி

யிருப்பினும் 'இந்தப் பிரகரணத்துக்குச் சேராது' என்பதை இப் பதிகத்தின் ஐந்தாம் பாடலைக் கொண்டு 'பொருந்தாது' என் பதை எடுத்துக் காட்டுவர் [84]

இவ்வாறு முன்னோர் உரைகளிலுள்ள வேறுபாட்டை எடுத் துக்காட்டி உரை வழங்கும் நெறி தீபிகை உரையில் ஐந்து இடங் களில் காணப்பெறுகிறது [85]

## 4-7-12. சொல்திறம் காட்டல்

ஒரு நூலுக்கு அழகு தருவதில் சொல்திறம் காட்டலும் ஒன் றாகும். இத்தகு நல்ல சொற்கள் ஆழ்வார் அருளிய திருவாய் மொழியில் இயல்பாக அமைந்துள்ளன. "என் நா முதல் வந்து புகுந்து நல்லின் கவி"[86] என்று ஆழ்வார் தாமே அருளியது குறிப் பிடத்தக்கது. இவ்வாறு இயல்பாகு அமைந்த சொல் திறங்கள் ஆழ்வார் அனுபவத்துக்கேற்ப அமைந்ததாகும். மேலும் ஆங் காங்கே அமைந்த சொற்களின் அழகையும் திருவாய் மொழிக் கமைந்த உரைகள் உணர்த்துகின்றன. குறிப்பாக, நம்பிள்ளை தாம் அருளிய ஈட்டில் பல இடங்களில் இத்தகைய சொற்களின் நலன்களை எடுத்துக் காட்டி உரைப்பர்.[87] அவ்வழித் தோன்றல் களின் வழிவந்த சுவாமிகளும் முப்பது இடங்களில் சொல்திறனைக் காட்டி உரைப்பர் [88] (பின்னிணைப்பு எண் ). இவை பெரும் பாலும் ஆழ்வார் திருவுள்ளத்திற்கு ஏற்ப அவர் தம் அனுபவத் தைக் காட்ட வல்லதாயிருக்கிறது.

"மறையாய நால்வேதத்துள்"[89] என்ற பாடலில் வேதத்தின் பெருமையைக் கூறுகிறார். வேதங்களுக்கு உள்நின்ற பொருளான இறைவனைச் சொலும்போது 'மறையினுள் நின்ற' என்றாவது 'நால்வேதத்தினுள் நின்ற' என்றாவது கூறியிருக்கலாம். அவ்வாறு இல்லாமல 'மறையாய நால் வேதத்துள்' என்று தொடர் அமைத்த தற்கு அமைதி காட்டுகிறார் சுவாமி. அதாவது, வேதம் என்றா லும மறை என்றாலும் பொருளாற்றலில் வேறுபாடு உண்டு. வேதம என்பதற்கு விளங்கக் காட்டுவது என்பது பொருள். மறை என்பது மறைத்துக் காட்டுவது என்பது பொருள் இறைவன் உண்டு எனபவர்க்குத் தன் பொருட்களை வெளிபயடுத்திக் காட்டுவதால் வேதம் என்றும், இறைவன் வல்லை என்பவரான நாத்திகர்க்கு மறைத்தலால் மறை என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே மறையாய நால்வேதம் என்று சொல்திறமையைக் காட்டி யுரைப்பர் [90]

'கேட்பார்கள் கேசவன்'[91] என்ற பாடலில் 'திருவடி தாட்பா லடைந்த தன்மை யறிவாரை யறிந்துமே' என்ற தொடர்க்குக் கண்ணனுடைய திருவடிகளிலே சாயுச்சியம் பெற்ற படியை அறிவாரை அறிந்தும் நல்லது கேட்கவேணும் என்றிருக்குமவர்கள் இறைவனுடைய கீர்த்திகளை ஒழிய வேறொன்று கேட்க மாட்டார்கள் என்று கூறுவர்.

இவ்விடத்தில் 'தாட்பா லடைந்த தன்மை' என்று சொன்னாலே போதுமாயிருக்க 'தன்மையறிவாரை அறிந்துமே' என்று மிகுதியாகச் சொற்களைப் பெய்து உரைத்ததற்குக் காரணம் காட்டுவார் சுவாமி. அதாவது, இப்பாடலின் முதலடியிலே கேட்பார்கள் மற்றும் கேட்பரோ என்று சொல்லியிருக்கையாலே கேட்குமவர்கள் குணமுடையவர்களிடத்திலன்றோ கேட்க வேணும் இப்படிப்பட்ட பெருங்குணமுடையவர்கள் இருக்கிறார்கள் என்பதை அறிந்தும் அவர்கள் பக்கலிலே சென்று இத்தகைய பெருங்குணங்களைக் கேளாமல் மற்றும் கேட்பரோ என்பதாகச் சொல்லின் திறத்தின் ஆற்றலை அறிவுறுத்துவர்.[92]

இதனால் திவ்விய தேசத்துப் பெருமையை எடுத்துக் காட்டும் இயல்பும் காணப்பெறுகிறது

## 4-7-13. வடமொழி நூல்களின் மேற்கோளாட்சி

சுவாமி வடமொழியிலுள்ள பலதுறை நூல்களை நன்கு கற்றவர் ஆதலால் பெரும்பாலான பாடல்களின் உரையிலே முன்னோர்கள் எடுத்தாளாத இடங்களில் அந்தந்த நூல தொடர்களைப் பயன்படுத்தித் தீபிகை உரையை மேலும் விளக்கமுறச் செய்துள்ளார். இவற்றைக் காணும்போது வேதம், உபநிடதம், மனுஸ்ம்ருதி, விஷ்ணுபுராணம். ஸ்ரீவிஷ்ணுதர்மம், ஸ்ரீராமாயணம், பாரதம், பகவத்கீதை, பாகவதம், முகுந்தமாலை, ஸ்தோத்ர ரத்நம, ஸ்ரீகுணரத்நகோசம் முதலான பதினெட்டு வடமொழி நூல்களிலிருநது பல இடங்கள் மேற்கோள்களாகக் கொண்டு வழங்கியுள்ளார். பெருமபாலான வடமொழி நூல் மேற்கோள்கள் ஆழ்வார் சொற்களுக்குச் சான்றுகளாக ஒப்புமை அமைந்துள்ளன எனலாம். (பின்னிணைப்பு எண் ).

## 4-7-13-1. வேதம்

'கருளப்புட்கொடி' என்ற பாடலில் 'கருட:' என்ற வடசொல் 'கருளன்' என்றாயிற்று. இவ்விடத்தில் நம்பிள்ளை 'ஈடே என்கிற

வித்தை ஈளே என்னுமாபோலே' என்று எடுத்துக் காட்டுவர் இதனை இரண்டு விதமாக வேதத்தில் ஓதப்பட்டு வருவதைச் சான்றாக எடுத்துக்காட்டுவார் சுவாமி.[93]

### 4-7-13-2. உபநிடதம்

தீபிகையுரையில் உபநிடதம என்ற பெயரில் சாந்தோக்கியம் சுபாலோபநிடதம், தைத்திரீயோபநிடதம், மற்றும் இன்ன உபநிடதம் என்று சொல்லாமலமைந்த இடங்களிலும் உபநிடத மேற்கோள்களைக் காட்டி உரைப்பர் சுவாமி.

'செய்கின்றது என் கண்ணுக்கு' என்ற பாடலில் 'மாயத்தினாலெங்கும் மன்னி' என்ற இடத்தில் வைகுந்த நாதனுடைய பக்தர்களான நித்யசூரிகளும் முத்தர்களும் ஆச்சரியமாக எங்கும் புகுந்திருப்பார்கள் என்று பொருளுரைப்பர்.[94] இவ்விடத்தில் 'மாயம்' என்ற சொல்லுக்கு 'ஆச்சரியம்' என்ற பொருளிருப்பினும் 'இச்சையிலே' என்று பொருளுரைப்பர். இந்த 'இச்சையாலே' என்ற பொருளுக்கேற்ப உபநிடதத் தொடரைக் காட்டி விளக்குவர்.[95]

### 4-7-13-3. இராமாயணம்

முன்னோர்கள் இராமாயணத்தையும் திருவாய்மொழியையும் இரு கண்களாக அமைத்துக்கொண்டது போலச் சுவாமியும் தீபிகை யுரைகளிலும பத்துப் பத்துக்களிலும் இராமாயணத்தின் ஏழுகாண்டச் சுலோகத் தொடர்களையும் மேற்கோளாகக் காட்டி விளக்குவது குறிப்பிடத்தக்கது.

'நின்றிடும் திசைக்கும்' என்ற பாடலில் 'திருக்குறுங்குடி நம்பியின் அழகை நினைத்துச் சற்றுப்போது நிலைத்து நிற்பது, பின்னே அறிவுகெட்டு அறிவற்ற பொருள்போலிருப்பது, இப்படியான ஆழ்வார் நிலைமைகளைத் தாய் பாசுரமாகக் கூறுகிறார். இவ்விடத்திலே மாரீசன் பயத்தாலே இராமனின் உருவத்தை ஒவ்வொரு மரத்திலும் கண்டதாக மாரீசனுடைய நிலைமையை ஆழ்வாரோடு ஒப்பிட்டுச் சொல்வர்.[96] இங்கு ஆழ்வார்-மாரீசன் நினைவில் உருவத்தைப் பற்றிய நோக்கே அமைந்தது என்பதை ஒப்புமையாகக் காட்டுவர் இவ்வாறு ஒப்புமைச் சான்றாகவும் சொல்பொருள் விளக்கங்களாகவும் இராமாயணச் சுலோகத் தொடர்கள் மேற்கோளாக இடம் பெற்றுள்ளன.

### 4-7.13-4. பகவத் கீதை

பகவத் கீதையின் மூன்று பகுதிகளையும் திருவாய்மொழித் தீபிகை உரையில் கையாண்டுள்ளது அறியமுடிகிறது.

'விரும்பிப் பகவரைக் காணில்' என்ற பாடலில் 'பகவர்' என்றது 'துறவி' என்பது. அதாவது 'ஞானம் அனுட்டானம் நிரம்பியவர்கள்' என்பதாகும்.[97] இறைவனைச் சொல்லுகிற சொல்லையிட்டுத் துறவிகளைக் கூறினது அவர்கள் இறைவ னின்றும் வேறுபடாதவர்கள் என்பதைக் காட்டுவதாகும். அப்படிப்பட்டவர்களைக் கண்டால் பராங்குச நாயகியானவள் 'வியலிட முண்டானே என்றும்' என்று நம்புவள். இவ்விடத்திலே பகவத் கீதையின் தொடரைக் காட்டி ''ஜ்ஞானீது ஆத்மைவ மேமதம்'' என்றதைச் சான்றாகக் காட்டுவர்

இவ்வாலே மற்ற வடமொழி நூல் தொடர்கள் பெரும் பான்மை யளவில் வந்து தீபிகையுரை சிறப்பாக அமையப் பெற்றதைக் காணலாம்.

### 4-7-14. தமிழ் நூல்களின் மேற்கோளாட்சி

ஆழ்வார் பாசுரங்களைத் தவிர, சங்க நூல்களான எட்டுத் தொகைபதினெண்கீழ்க்கணக்கு,மற்றும்தொல்காப்பியம்,நிகண்டு, திருக்குறள், கம்பராமாயணம், மற்றும் நம்பிள்ளை காலத்துக்குப் பின்வந்த நூல்களான ஆசாரிய இருதயம். ஸ்ரீவசந பூஷணம், முமுட்சுப்படி, தத்துவத்ரயம் முதலான நூல்களிலிருந்தும் பலபல சான்றுகளைக் காட்டியுள்ளார் சுவாமி. இதனால் திருவாய் மொழிப் பெருமையும், திருவாய்மொழிக்கமைந்த உரைகளின் பெருமையும், இவைற்றிற்கெல்லாம் உள்ளீடான ஆழ்வார் பெரு மையும், அவர் அனுபவித்த இறைவனின் பெருமையும் ஒருசேரத் துய்த்து உணரமுடிகிறது.

### 4-7-14-1. தொல்காப்பியம்

'ஒக்கலை வைத்து' என்னும் பாடலில் 'செக்கம்செக' என்ப தற்குப் பலபடியாகப் பொருள் கூறுவர்.[98] இவ்விடத்திலே ''கறுப் பும் சிவப்பும் வெகுளிப் பொருள'' என்ற தொல்காப்பியக் கொள் கைப்படி சீற்றத்தைச் சொல்லிற்றாய் 'மிகவும் கோபங் கொண்டு என்ற பொருளை வழங்குவர்[99] இதனால் கண்ணன் பூதனையை கொல்லும் போது இருந்த சீற்றத்தைக் காட்ட தொல்காப்பியப் பொருள்நோக்கில் சுவாமியின் கருத்து அமைந்துள்ளது

### 4-7-14-2. புறநானூறு

தொல்காப்பியக் கொள்கைக்கேற்ப மேற்கோளாட்சிகளைப் பயன்படுத்தியிருப்பினும் சங்க நூல்களில் முக்கியமாக ஆழ்வார் பாடலுக்கு ஒப்பாகப் புறநானூற்றுத் தொடரையும் சுவாமி எடுத்துக்காட்டுவர் இஃது ஓரிடத்திலேயே காணக் கிடைக்கிறது

'கோவை வாயாள்' என்ற பாடலில் 'பூவை வீயாம் மேனிக்கு என்பதற்குக் 'காயாம்பூப் போன்ற திருமேனிக்கு, என்ற பொருள் சொல்லப்படுகிறது.[100] இவ்விடத்தில் 'பூவை வீ' என்பதற்குப் 'பூவைப்பூ' என்றும் 'காயாம்பூ' என்றும் பொருள் வழங்குவர். இவ்விடத்தில் 'வீ' என்று பூவிற்கு பெயராக அமைந்ததை 'வீகமழ் நெடுஞ்சினை' என்ற புறநானூற்றுத் தொடரைக் காட்டி உரைப்பர் சுவாமி [101] எனவே, 'பூவை வீயாம்' என்பதற்கு பூவைப்பூப் போன்றதான' என்று பொருள்படும் என்பர் சுவாமி.

### 4-7-14-3 நிகண்டுகள்

'ஈடும் எடுப்பும்' என்ற பாடலில் 'ஈசன் மாடு விடாதென் மனனே' என்னும் தொடரில் 'மாடு' என்பதற்கு இடப்பொருள் கூறுவர்.[102] மாடு பொன், பக்கம், செல்வம், என்ற நிகண்டின்படி இப்பொருள் அமைந்ததை எடுத்துக்காட்டுவர் சுவாமி. இவ்வாறே 'அணங்கே'[103] என்றவிடத்திலும் 'செங்கண்மால்', 'தொடு வுண்ட[103] என்ற இடங்களிலும் நிகண்டுகளைக் காட்டிப் பொருள் வழங்கியது காணமுடிகிறது.

### 4-7-14-4. திருக்குறள்

'மாதவன் என்றதே கொண்டு' என்னும் பாடலில் இறைவனைப் பலவகைப் பாவங்களையும் போக்கி அருள்கின்ற பரம போக்கியன் என்பதைத் 'தீது அவம் கெடுக்கும் அமுதம்' என்ற சொல்லாற்றலால் உரைப்பர் சுவாமி [104]இவ்விடத்தில் 'தீது அவம்' என்பதற்குப் ''பிராயச்சித்தங்களாலே போக்கக்கூடிய பாவங்களையும் கெடுக்கும் இறைவன்'' என்பதை ''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்'' என்னும் குறள் வாயிலாக எடுத்துக்காட்டுவர் சுவாமி.[105]

இவ்வாறு எட்டு இடங்களில் திருக்குறளை மேற்கோள்காட்டி விளக்கியுள்ளார் சுவாமி.[106]

### 4-7-14-5. கம்பராமாயணம்

'கண்டவின்பம்' என்ற பாடலில் 'கண்டுகோடற்கரிய' என்பதற்கு 'ஒருவராலும் அளவிட்டு அறியமுடியாத அரிய பெருமான்' என்ற பொருளாம்.[107] இவ்விடத்தில் கம்பராமாயணத்திலுள்ள யுத்த காண்டக் காப்புச் செய்யுளைக் காட்டி, ''ஒருவகையாக நிச்சயித்து இறைவனை அறிய முடியாது' என்பதைச் சுவாமி எடுத்துக் காட்டுவர்.[107அ]

### 4-7-14-6. திருவரங்கக் கலம்பகம்

அடியார்க்கெளியன் என்று பெயர் பெற்றவனுடைய இரக்கம் பெறுகை அரிதான பின்பு தம் உயிரைக் காக்கும் விரகுண்டோ என்பதை 'யாமுடை நெஞ்சமும்' என்ற பாடலில் தலைவியான ஆழ்வார் இரங்குவதாகச் சுவாமி கூறுவர்.

''பசுக்கள் திரும்பி வரும் மாலைப்பொழுதும் வந்துவிட்டது. இம்மாலைப்பொழுது சிறிது தாமதித்து வரக்கூடாதோ; இப்பொழுதே அணித்தாயிற்றே; மாலைப் பொழுது வரின் கண்ணன் வருவானென்று ஆறியிருத்தலாகாதோ'' என்று நோவுபடும் தலைவி அவன் வாராமையினாலே ''யாமுடை ஆயன்தன் மனம் கல்லாலோ'' என்று வருந்துகிறாள்.[108] அதாவது கண்ணனுடைய மனமும் கல்லாயிற்றே; அவனோ வருவான் என்று தலைவி இரங்குகிறாள். இதனைப் பிள்ளைப் பெருமாளையங்காரின் திருவரங்கக் கலம்பகப் பாடலான,

> **''சேவிக்க வாழ்விக்கு மெங்கோ னரங்கன்**
> **திருக்கோயில் சூழ்,**
> **காவிற் கலந்தாசை தந்தேகினார் நெஞ்சு**
> **கல் நெஞ்சமோ?''**

என்பதை மேற்கோள் காட்டிச் சுவாமி விளக்குவர்.[109] அதாவது ''அவனுடைய (இறைவன்) நெஞ்சு கல்லானது என்று கைவாங்கலாமெனின் அவனது குழலோசை கைவாங்கவொட்டுகிறதில்லை'' என்பதாம்.

இவ்வாறு ஆழ்வாருடைய நிலைமைக்கொப்பாகவுள்ள திருவரங்கக் கலம்பகப் பாடலை எடுத்துக்காட்டுவர்.

இறைவனைப் பற்றிச் சொல்லும்போதுகூட, குறிப்பாகத் திருவேங்கடப் பதிகமாக 'உலகமுண்ட பெருவாயன்' என்ற

பதிகத்தில் இரண்டாவது பாடலில் 'தெய்வக் கோமானே' என்று விளிக்கிறார். இவ்விடத்தில் 'எல்லாத் தெய்வங்களுக்கும் மேற்பட்ட தெய்வம் தானே' என்பதைத் திருமலையில் விளங்கக் காட்டிக் கொண்டு நிற்பதைத் திருவரங்கக் கலம்பகப் பாடலின் வழி உணர்த்துவர்.[110]

இப்படித் தொல்காப்பியம் முதல் கலம்பகம் ஈறாக முற்பட்ட, பிற்பட்ட நூல் தொடர்களை ஆழ்வார் பாடல் தொடரோடு ஒப்பிட்டுச் சுவாமி காட்டுவர். இதனால் சுவாமியின் தமிழ்ப் புலமையும், அவர் திருவாய் மொழியைத் தமிழ்நூல் வரிசையில் உலகுக்குக் காட்டியதும் புலனாகின்றது. இதனால் மேலும் பழைய நூல்களின் சொல்லாட்சித் திறங்களும், அவற்றின் பொருள்களும் ஆங்காங்கே ஆழ்வார் பாடலில் அமைந்துள்ளமையும் புலப்படும்.

### 4-7-15. அருளிச் செயல்களை மேற்கோளாக ஆளுதல்

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகை அருளிய சுவாமி அவர்தம் இளமைக்கல்வியின் பயனாகப் பண்டை இலக்கிய இலக்கண நூல்களின் பயிற்சியினால் அதனைப் பயன்படுத்தித் தாம் எழுதப்புகும் தீபிகையின் உட்பொருளை விரிவாக எடுத்துரைப்பர். திருவாய் மொழிக்கு அமைந்த பரந்த தீபிகை உரையில் நம்மாழ்வாரின் பிரப்பந்தங்களையும் மற்றைய ஆழ்வார் பிரபந்தங்களையும் தாம் சொல்லப் போகும் பொருள் கோளுக்கு ஒப்புமை காட்டிச் செல்வர். நம்பிள்ளையைப் போன்று இவ்வகையான நெறியைப் பின்பற்றிய போதிலும் அவர் காட்டாத இடங்களிலே மற்றைய பிரபந்தங்களின் மேற்கோளாட்சி களைத் தம் இயல்புக்குத் தக்கவாறு அனுபவித்து உரைப்பர். இவ்வகையான நெறி பெரும்பாலும் ஆயிரமிடங்களில் திருவாய் மொழித் தீபிகை யுரையில் காணப்படுகிறது.

'தஞ்சமாகிய'[111] என்ற பாடலில் 'அவையல்லனாய்' என்பதற்குச் 'சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலான தாய்தந்தையும் அவரே யினியாவரே'[112] என்று நம்மாழ்வார் அருளிய தொடர்களையே எடுத்துக்காட்டி எல்லாவற்றாலும் உதவி செய்பவனும் எல்லாவிதத்திலும் உறவினனும், அவனே (இறைவன்) என்பதை எடுத்துக்காட்டுவது குறிப்பிடத் தக்கது. இதனால் இறைவனின் இயல்பான தன்மையை தின

நாட்டுவதற்கும் அவர் தம் பாசுரத்தையே காட்டி நிறுவுவது அறியத்தக்கது.

'ஆவி காப்பாரினியார்' என்ற பாடலில் இறைவன் வந்து முகங்காட்டாமையாலே தம் நெஞ்சைப் பார்த்துக் கதறுகிறாள் பராங்குச நாயகி [118] இவ்விடத்திலே 'ஆவி காப்பாரினியார்' என்பதற்கு ''இப்படி முகங்காட்டாமையாலும் தம்முடைய நெஞ்சும் அநுகூலமாயில்லாதபடியாலும் உயிரைக் காப்பவர்கள் யாருமில்லை'' என்பதற்கு ஒப்பாக ஆண்டாள் வேங்கடத்திறைவனிடம் உள்ள குணத்தை எண்ணித் தூதுவிடும் பதிகத்திலே ஆத்ம தாரணம் பண்ணினதைக் ''குளிரருவி வேங்கடத்து என் கோவிந்தன் குணம்பாடி அளியத்த மேகங்காள் ஆவி காத்திருப்பேனே'' என்னும் தொடரால் எடுத்துக் காட்டுவர். [114]

இவ்வாறே 'மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக்கென்று' [115] என்ற பாடலில் துவயப் பிரகரணத்திலுள்ள ஆழ்பொருளை எடுத்துக் காட்டுவது அறியற்பாலதாகும்.

### 4-7-16. வைணவ நூல்களின் மேற்கோளாட்சி

வைணவ நூல்களில் பெரும்பான்மையாகத் தீபிகையுரையில் கையாளப்பட்டுள்ளவை ஸ்ரீவசந பூஷணம், ஆசாரிய இருதயம் ஆகிய இரண்டுமாம். நம்பிள்ளை காலத்திற்குப் பிள்ளைலோகாசாரியர் அருளிய ஸ்ரீவசந பூஷணம் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அருளிய ஆசாரிய இருதயம் ஆகியவற்றைக் கொண்டு அந்தந்த ஆசாரியர்கள் திருவாய்மொழியை அனுபவித்த தன் ஏற்றத்தைக் காட்டும் வகையிலே தீபிகை உரையில் அந்த நூல் தொடர்களை உரிய நிலைமைக்கேற்பக் காட்டிச் சுவாமி விளங்கச் செய்வர்.

### 4-7-16-1. ஸ்ரீவசந பூஷணம்

சுவாமி கையாண்டு ஸ்ரீவசந பூஷண நூற்பாக்களைக் காணும்போது அவை வைணவ நெறிகளை எந்தெந்த முறையில் ஆழ்வார் எடுத்துக்காட்டுகிறார் என்பதை அறிய உதவி செய்கின்றன (பின்னிணைப்பு எண் ).

அகப்பொருள் பாடல்களிலும் ஸ்ரீவசந பூஷண நூற்பாக்களை ஒப்புமை காட்டி விளக்குவர் சுவாமி. அவை பெரும்பாலும்

பிராட்டியினுடைய குணப்பெருமையை எடுத்துச் சொல்லும் வகையில் அமைந்தனவாகும்.

'சாது சனத்தை நலியும்'[120] என்ற பாடலில் இறைவனின் அவதாரப் பயனைக் காட்டும் வகையிலே, ''ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமை''[121] என்ற நூற்பாவை எடுத்துக் காட்டுவர். அதாவது இறைவனடியார்களான சாதுசனங்களை நலியப் பண்ணும் கம்சனை முடிக்க இறைவன் கண்ணபிரானாக அவதரித்தான். இவ்வாறு அவதாரப் பயனை வெளிக்காட்டும் நோக்கிலே ஸ்ரீவசந பூஷண நூற்பாவை எடுத்துக்காட்டுவர்.

'பொன்னுலகாளீரோ' என்ற பாடலில் இறைவன் திறத்துப் பரிந்துரை செய்பவர்களுக்கு உபய விபூதியையும் பரிசாக அளித்தாலும் போதாது எனகிற சாத்திரப் பொருளை எடுத்துக் காட்டுவர்.[122] இவ்விடத்தில் உபய விபூதியையும் அந்த விபூதியையுடையவனான இறைவனையும் தானிட்ட வழக்காம படி பண்ணிக்கொடுத்த ஆசாரியன் செய்த உதவிக்கு ஒப்பான கைம்மாறு, இரண்டு விபூதியையும பரிசாக அளித்தாலும் போதாது என்பதை, ''ஆசார்யனுக்கு ஸத்ருச ப்ரத்யுபகாரம் பண்ணலாவது விபூதி சதுஷ்டயமும் ஈச்வர த்வயமும் உண்டாகில்'' என்னும ஸ்ரீவசந பூஷண நூற்பாவை[123] மேற்கோள் காட்டி உரைப்பர்.

'இவ்வாறே 'புவனி முழுதாளீரோ'[124] என்பதற்கு உபய விபூதியையும் தானிட்ட வழக்காம்படி பெற்றிருக்கிற ஆழ்வாருடைய பெருமைக்கு ஒரு குறையில்லை என்பதைப் புலப் படுத்த, "சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது" என்ற நூற் பாவை நினைவிற்கொள்ளத் தகும் என்பர் சுவாமி.[125] அதாவது பிராட்டியினுடைய அருளை வெளியிட்டபடி என்பர்.

இங்ஙனம் ஸ்ரீவசந பூஷண மேற்கோளாக இருபத்தைந்து இடங்களில் அமைந்துள்ளமை பின்னிணைப்பில் காட்டப்படு கிறது (பின்னிணைப்பு எண் ).

### 4-7-16-2 ஆசாரிய இருதயம்

இறைவனது இயல்பு, வடிவு, குணம், செல்வங்கள், திருவிளை யாடல்கள் ஆகியவற்றைத் திருவாய்மொழி வாயிலாக ஆழ்வார்

உணர்த்துவது ஒருவகை. அவ்வாழ்வார் பெற்ற பேற்றை முன்னோர் உரைகள் மூலம் காட்டுவது மற்றொரு வகை. இவை அல்லாது ஆழ்வார் திருவுள்ளத்தை உள்ளபடி அறிந்து துய்த்து உலகோர் உணருமாறு ஆசாரிய இருதயம் என்னும் நூல் வாயிலாக உணர்த்துவது இன்னொரு வகை. இந்நூலுக்கு ஆழ்வார் பாடல் பின்னணியில் அமைந்த கருத்தை அந்நூலாசிரியர் உணர்ந்தவாறு எடுத்துக்காட்டுவது அடுத்தவகை. இவ்வகைப் பாடுகளில் ஊறித் திளைத்து அனுபவித்துக் களித்துக் கட்டடங்கா மனப்பாங்கை எடுத்துக்காட்ட வேண்டும என்ற நோக்கிலே தம் தீபிகை உரையில், அழகிய மணவாளப் பெருமாள நாயனார் அருளிய ஆசாரிய இருதய நூற்பாக்களைக் கையாண்டுள்ளார் சுவாமி. இவை ஒப்புமை, சான்று, சொல் பொருள் விளக்கம ஆகிய நோக்கங்களில தீபிகையில் ஆளப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்

இவ்வாறு ஆசாரிய இருதய நூல் தொடர்களையும் அவற்றின் விரிவுரைகளையும் தீபிகையில் சுவாமி ஆண்டுள்ளார்; அதன் வாயிலாக ஆழ்வாருடைய பெருமையும, ஆழ்வாரருளிய திருவாய் மொழியின பெருமையும இவற்றை அனுபவித்த சுவாமியின் உயர்ந்த மனப் பாங்கும் காணமுடிகின்றன. ஆசாரிய இருதய நூலைத் தனியாகப் படித்துப் பயன பெறாததை, விளைவை எண்ணி அந்நூலின் உயர்வைத தீபிகை உரையில புகுத்திப் படிப்போர்க்குப் பயன்படுமாறு அமைத்துள்ளார் என்பதையும் அறியலாம். அதே சமயத்தில் ஆசாரிய இருதய நூல வாயிலாக ஆழ்வாரின் நிலைமையை நிறுவுவதும் காணப்பெறுகிறது. (பின்னிணைப்பு எண் )

**ஆழ்வார் நிலைமையை நிறுவுதல்**

வாயும் திரையுகளும்' என்ற பாடல் ஆழ்வார் பெண்மையை ஏறிட்டு இறைவனைப் பிரிந்து நாரையைப் பார்த்துக் கூறுவதாக அமைந்ததாகும்[126] இங்கு ஆழ்வாரின் காதல் ஒரு நூல் வரம்புக்கு அடங்காததை நிலைநாட்டும் வகையில் ஆசாரிய இருதய நூல் தொடரைக் காட்டி உரைப்பர் சுவாமி.

இவ்வாறே இறைவன் பரமாகவும் ஆசாரிய இருதய நூற்பாவை மேற்கோள் காட்டி உரைப்பர் சுவாமி. இங்ஙனம் எழுபது இடங்களில் தீபிகையுரையில் இந்நூல் மேற்கோள்கள் உள.

### 4-7-17. அருஞ்சொல் விளக்கம் தருதல்

ஆழ்வார் சொற்களுக்கு உரை வழங்கிய முன்னோர்கள் தம உரைகளில் அந்தக் காலத்திற்கேற்பவும் பொருள்நயம் அறியவும் சிறுபான்மையாக அரிய சொற்களுக்கு பெரும்பாலும் தாம் வழங்கிய அரிய சொற்களுக்கு பொருள் காட்டி வந்தனர். இவை யில்லாத மற்றை இடங்களில் பெரியோர்கள் வாயிலாகக் காலக்ஷேப முறையில் அறிந்து வந்தனர் இந்நெறி காலப்போக்கில் மறையவே இக்காலத்திற்கேற்ப எளிமையாக அறியும் வகையிலே முன்னோர் உரைகளை எளிமைப்படுத்தி வழங்கிய தீபிகையுரை யில் சுவாமி காட்டும் அரும்பத உரைகளையும் அவர் பயன் படுத்திய அரிய சொற்பொருள்களையும் தொகுத்துக் காணும் போது சுவாமி ஒரு கலைக்களஞ்சியமாக விளங்குவது அறியற் பாலதாகும் (பின்னிணைப்பு எண் ).

சான்றுகள் :

கண்ணாஞ் சுழலையிட்டு—கண்சுழன்று[1]
சிறுச்சேவகம்—இளம்பிராயத்திலே காட்டின விக்கிரமம்[1]
ஆன்கன்று—பசு ஈன்ற கன்று[1]
வீவுதல்—ஒழிதல்[1]

### 4-7-18 பாடபேதம் காட்டல்

வைணவ உரையாசிரியர்கள் அனைவருமே திவ்வியப் பிரபந்தங்களை ஓதுவதில் கைதேர்ந்தவர்களாகையாலே, ஆழ்வார் அருளிய பாடல்களில் பாட பேதங்களைப் பெருக விடாது பேணிக்காத்து வந்துள்ளனர். பேராசிரியர்களாக விளங்கிய ஆசாரியர்கள் என்று வழங்கப்படும் உரையாசிரியர்கள் பகவத் விஷயமாகிய ஆழ்வார் பாடல்களுக்கு உரைகள் வகுத்தனர் உரைகள் அக்காலத்தில் ஓராண் வழியாகவே வெளியுலகுக்குத் தெரிய வந்தன. ஆசாரியர்கள் அவரவர்கள் பேரறிவுக்குத் தக்கவாறு பாடல்களிலும் உரைகளிலும் பாடபேதம் கண்டனர். இருப்பினும் அந்தந்த இடத்திற்கேற்பப் பொருத்தமான பாடங் களைக் காட்டி உரை வழங்கியுள்ளனர். வைணவ உரையாசிரியர் கள் தாம் எழுதும் உரையேயன்றி முன்னோர்களின் உரைக் குறிப்பையும் பாட பேதங்களையும் எடுத்துக் காட்டுவர். திருவாய்—மொழிக்கு விளக்கமாக அமைந்த உரைகளான ஈட்டி லும், இருபத்து நாலாயிரப்படியிலும், மற்றும் வாதிகேசரியருளிய பொழிப்புரையாக அமைந்த பன்னீராயிரப்படியிலும், அவ்வவ்

வுரையாசிரியர்கள் பின்பற்றிய பாடல்களையும், அக்காலத்தில் நிலவி வந்த பாடபேதங்களையும் காணமுடிகிறது. குறிப்பாக, நம்பிள்ளை தம் உரையில் வேறு பாடத்தை எடுத்து மொழியாமல் கருத்துட்கொண்டு வேறுபொருளை வரைதல் இயல்பாகும்.[127]

சுவாமிகளும் நம்பிள்ளையைப் பின்பற்றியே தாம் தழுவிய பாடங்களையும், பாடபேதங்களையும் எடுத்துக்காட்டத் தவறுவதில்லை இவர் தம் உரையில் எண்பத்தாறு இடங்களுக்கு அறுபது இடங்களில் நம்பிள்ளையின் பாடங்களை ஏற்றுப் பொருள் வழங்கியுள்ளார். பெரியவாச்சான் பிள்ளை மற்றும் வாதிகேசரி ஜீயர் பாடங்களையும் ஆதரித்து உரைவழங்கிய இடங்கள் பதினெட்டாகக் காணக் கிடைக்கின்றன. நம்பிள்ளையைப் போன்று சுவாமிகளும் பொருந்தாத பாடங்களைத் தீபிகையுரையில் காட்டியுள்ளார் இவை இவர் தம் உறுதியான புலமையை உணர்த்துவனவாகும் (பின்னிணைப்பு எண். )

'சொல்வீர்' என்ற பாடலில் 'நல்ல அமுதம்'என்று பாடமாகக் கொண்டு ''நித்யமுமாய் போக்யமுமான அம்ருதம். ப்ராக்ருத போக்யங்களில் தலையான அமருதம்'' என்று பொருள் வழங்குவர்[128] ஆனால் ஜீயர் 'அமுதும்' என்று பாடமாகக் கொண்டு 'அமுதமுமாய்' என்றும், அந்த பாடலில் 'வீடுவாய்' என்பதற்கு 'வீடுமாய்' என்றும் உம்மை சேர்த்துப் பொருள் வழங்குவர்[129] ஆனால் சுவாமிகள் 'அமுதம்' என்றே பாடம் கொண்டு 'நல்ல அமுதமாய்' என்று சொல்லி, முடிவில் குறிப்பிடும் போது, ''நல்ல வமுதம்—பரமபோக்யன், சரீரத்தை மாத்திரம் நோக்குகின்ற அம்ருதம்.'' என்று விரித்துக் கூறுகிறார்.[130]

'பின்னின்ன காதல்' என்ற பாடலில் 'இந்நின்ற நீளாவி' என்ற பாடம் கொண்டு ''முடியவேண்டு மளவிலேயும் நூறே பிராயமாயிருக்கிற இவ்வுயிரை முடித்து ரக்ஷிப்பாரார்?'' என்று விளக்குகிறார்.[130அ]

பெரியவாச்சான் பிள்ளை உரையை ஆதரித்த இடம்:

'மதுவார் தண்ணந் துழாயான்' என்ற பாடலில் 'மதுவார்' என்பதற்கு 'தேன் ஒழுகுகின்ற' என்ற உரையைப் பின்பற்றி, ''தேன் வெள்ளமிடுகின்ற தண்ணந்துழாய் மாலை யணிந்தவன்'' என்ற பொருள்தரும் என்று விளக்குகிறார்.[131]

### 4-7-18-1. ஈட்டைப் பின்பற்றிய பாடபேதங்கள்

ஈட்டைத் தழுவிய 86 இடங்களில் சுவாமி உரையில் பாட பேதங்களைக் காணும் போது 22 இடங்களில் இறைவனைப் பற்றியனவாகவும், 9 இடங்களில் ஆழ்வார்பரமாகவும், 3 இடங்களில் உபதேச பரமாகவும், மற்றுமுள்ள இடங்கள் பொதுவாகவும் அமைந்துள்ளன

(அ) 'அண்ணல் மாயன்' என்கிற பாடலில் 'தெண்ணிறைச் சுனை நீர்த் திருவேங்கடத்து' என்ற நம்பிள்ளையின் பாடத்தையே பின்பற்றிச் சுவாமி பொருள் வழங்குவர்.[132] 'தெண்ணிறை சுனைநீர்' என்ற பாடத்தில் 'நிறைசுனை' என்று இயல்பாக அமைந்திருக்க 'நிறைச்சுனை' என்று சகரம் இரட்டித்து இருப்பதற்குக் காரணம் யாதெனில் 'நிறை' என்பதை வினைப்பகுதியாகக் கொள்ளாமல் முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு 'நிறைய சுனைகளையுடைய' என்று பொருள் கொள்ளுமளவிலே வல்லொற்று மிகுதல் பொருந்தும். இங்குத் 'தெண்ணிறைச் சுனைநீர்' என்ற அடைமொழி திருவேங்கடத்துக்காகி, அந்தத திருவேங்கடத்திறைவனை 'எண்ணில் தொல்புகழ் வானவரீசன்' என்று கொள்வதால் இப்பாடபேதம் இறைவனைப் பற்றியதாகக் கொள்ளப்பட்டது.

'வெள்ளைச் சுரிசங்கொடாழி யேந்தி' என்ற பாடலில் மூன்றாமடியில் 'வெள்ளச் சுகமவன்' என்றே நம்பிள்ளை பாடம் கொள்கிறார்.[133] அதாவது சுகவெள்ளத்தை உடையவன் என்றபடி இவ்வாறு இருபது இடங்கள் உள.

(ஆ) ஆழ்வார்பரமாகக் கொண்ட பாடபேதங்கள்: 'திருவுடை மன்னரைக் காணில்' என்ற பாடலில் இறைவனுடைய செல்வம், அழகு தன்னைப் பற்றினவரை ஆதரித்தல் ஆகியவற்றை நினைத்துப் போலியாகக் கண்டாலும் எல்லா நிலைமையிலும் இறைவனையே நாயகியான ஆழ்வார் விரும்புவதாகக் கூறுவர்.[134] இப்பாடலின் ஈற்றடியில் 'வெருவிலும் வீழ்விலும் ஓவா' என்ற நம்பிள்ளை பாடத்தை ஆதரித்து ''அஞ்சின போதும் துக்கத்தாலே மயங்கின போதும் ஒழியாதவளாயிருந்தாள்'' என்று பொருள் உரைப்பர் சுவாமி.

வெருவுதலாவது — அஞ்சுதல்
வீழ்தலாவது — மோகித்தல்

அதாவது தெளிவோடே கூடியிருந்து உறவினர்களைக் கண்டு அஞ்சி இருந்தபோதும் அறிவழிந்து மோகித்துக் கிடந்தபோதும் இடைவிடாது கண்ணன் கழல்களை விரும்புவதாக ஆழ்வார் நிலையைக் கூறுவர்.

### 4-7-18-2. ஈட்டில் காட்டிய இரண்டாவது பாடங்களைக் காட்டல்

தீபிகையுரையில் பாட பேதங்களைக் காட்டும் நெறியை நோக்கும்போது ஈட்டில் காட்டிய இரண்டாவது பாடங்களையும் சுவாமி அப்படியே காட்டிச் சொல்கிறார் என்பது புலனாகும்.

'அந்தாமத் தன்பு' என்ற பாடலில் 'வாழ்முடி' என்ற பாடமே நம்பிள்ளை காட்டியிருப்பினும் ஆளவந்தார் பொருளாட்சியைப் பின்பற்றி 'வாண்முடி' என்ற பாடபேதத்தையும் எடுத்துக் காட்டுவர் நம்பிள்ளை.[135] இதனைப் பின்பற்றியே சுவாமி உரை அமைந்தது காணலாம்.

### 4-7-18-3. 12/24படி பாடங்களைத் தழுவிய இடங்கள்

நம்பிள்ளை காட்டிய பாடங்களைத் தழுவியதோடல்லாமல் பெரியவாச்சான் பிள்ளை தமக்கேயுரிய பாடங்களைச் சுவாமி தழுவி 18 இடங்களில் காட்டுகிறார் [136]

'இளரொளி யிளமை' என்ற பாடலின் ஈற்றடியில் 'தளர்வில ராகில்' என்று நம்பிள்ளை பாடங் கொண்டிருக்கிறார். ஆனால் 24 படியிலும். 12 படியிலும், 'தளர்விலராகி' என்றே பாட மூள்ளது. அதைத் தழுவியே சுவாமி 'தளர்ச்சி இல்லாதவராகி என்று பொருள் கூறுகிறார் [137] அதாவது மேன்மேலும் கொழுந்து விட்டுக் கிளர்கின்ற ஞானவொளி இளமை அழிவதற்குள்ளே குன்றாத வொளியுடைய இறைவன் எழுந்தருளியிருக்கும் கோயி லான திருமாலிருஞ்சோலையைத் 'தளர்ச்சி இல்லாதவராகி' அடைவதுதான் சதிர் என்று கூறுவர்.

'சித்திரத் தேர்வலவா' என்ற பாடலின் ஈற்றடியில் 'வித்தகத் தாய்' என்று விளியாகக் கொண்டு நம்பிள்ளை பொருள் கூறுவர். பெரியவாச்சான் பிள்ளையும் பன்னீராயிரப்படி உரையாசிரியரும் 'வித்தகத்தால்' என்று பாடங்கொண்டு 'ஆச்சரியப்படத்தக்க தன்மையோடே' என்று பொருள் கூறுவர். இதைப் பின்பற்றியே சுவாமியும் பொருள் கூறியுள்ளார் [138]

4-7-18-4. பாடத்திருத்தம் காட்டல்

கால வேறுபாட்டாலும் அச்சுப்பிழையாலும் உண்டான பாடங்களைத் திருத்திச் சரியான பாடங்களைக் காட்டுவர் சுவாமி

'சோதியுமாய்' என்று எல்லாப் பதிப்புகளிலும் அச்சிடப் பெற்றிருந்தாலும், மேலும் ஓதி வந்தாலும் அது பிழை என்பதை எடுத்துக்காட்டிச் 'சோதியமாய்' என்று சொல்லவேணும் என்பர்[139] (சோதியம் - ஒளியுருவை உடையோமாய்).

'தழீஇக் கோளியார்' என்றது ஒரு முழுச்சொல். தழுவிக் கொண்டவர் என்று பொருள். இதனை இரண்டு சொல்லாக மயங்கி 'எருதேழ் தழீஇ' என்று நிறுத்திக் 'கோளியார்' 'கோவலனார்' என்ற பாடம் செய்து வருவர். இப்பாடம் பொருந்தாது என்பர் சுவாமி.[140]

மேலும் சொல்லுக்குரிய பொருளைக் காட்டி, அச்சுப் பிழையும் எடுத்துக்காட்டுவர் சுவாமி. 'பராய்' என்றது 'பராவி' என்றபடி. அதாவது பாரித்தல். இவ்விடத்தில் நான்கு உரைகளிலும் ஒரே விதமான அச்சுப்பிழை வந்துள்ளமை காட்டுவர் சுவாமி. அதாவது 'பராவி-பாரித்து' என்று இருக்க வேண்டுவது 'ப்ரார்த்தித்து' என்று விழுந்து விட்டதைக் காட்டுவர்.[141]

4-7-18-5: ஓதும் முறை நெறிகாட்டல்

சுவாமி சிறுவயதிலிருந்தே அருளிச் செயலை ஓதும் முறையில் கரைகண்டவராகையால் சேவிக்கும் முறை (ஓதும் முறை)யில் ஆழ்வார் பாடலின் பொருள்களுக்கேற்ப நிறுத்தும் முறையையும் எடுத்துக் காட்டுவர். அவர்தம் அருளிச்செயல் கோஷ்டியினர் சேவிக்கும் முறை கேட்பார்க்கு இனிமையாகவும், சொற்சுவையும் பொருட்சுவையும் விளங்கும்படியாகவும் இருக்குமென்பதை அவருக்குப் பின்புறம் நின்றுகொண்டு கவனித்துக் கேட்க வேண்டும் என்பர்.[142]

'அடியோங்கு நூற்றுவர் வீய' என்ற பாடலின் ஈற்றடியில் 'ஆரக் கற்கிற்கில் சன்மம் செய்யாமை முடியுமே' என்றுள்ளது இங்கு 'ஆர' என்பதற்கு 'நெஞ்சிலே படியும்படி' என்று பொருள் சொல்வதைக் காட்டிலும் 'ஒருபாட்டும் நழுவவிடாதே பூர்த்தி

யாக' என்று பொருள்கொள்வது சிறந்ததாகும் என்பர்.[143] சாதாரணமாக இந்தப் பதிகத்திலே (பயிலுஞ் சுடரொளி)[144] 'அடியார்தம் மடியார் எம்மடிகளே' என்ற ஒன்பதாவது பாடல் முடிந்தவுடனே சேவிக்கும் அத்யாபகர்கள், மறதியினால் அடுத்த பாசுரமான 'அடியார்ந்த வையமுண்டு' என்ற பாடலை விட்டு 'அடியோங்கு' என்ற அதற்கடுத்த பாடலைச் சொல்வார்களாம். இதனையறிந்தே அறிவிற்சிறந்த ஆழ்வார் 'ஆரக் கற்கிற்கில்' என்று கூறினார் போலும் என அழகாக எடுத்துரைப்பர் சுவாமி.

இவ்வாறே 'கார்வண்ணன் கண்ணபிரான்' என்ற பாடலில் 'ஆர்வண்ணத்தால் உரைப்பார் அடிக்கீழ் புகுவார் பொலிந்தே' என்ற தொடரிலுள்ள 'ஆர்வண்ணத்தால்' என்பதற்குச் சொற்களைச் சொல்லும்போது 'ஏனோதானோ' என்று சொல்லாமல் நெஞ்சு கனிந்து சொல்லவேண்டும் என்றும் அமுதபானம் செய்வதாக நினைக்கவேண்டும் என்றும் உரைப்பர்.[145]

### 4-7-19 கொண்டுகூட்டு முறை காட்டல்

இறைவனின் குணங்களை அநுபவித்தலால் ஆழ்வார்க்குண்டான அளவில்லாத பெருமகிழ்ச்சியானது வலியச் சொல்லுவிக்கப் பிறந்ததே திருவாய்மொழியாகும். இத்திருவாய் மொழிகளில் சொற்களெல்லாம் 'என்னைக் கொள், என்னைக்கொள்' என்று சொற்களாலே பணிசெய்யப்பட்டுப் பாக்களாக அமைந்தனவாகும். இவ்வாறு இறைவனுடைய திருவருள் அடியாகப் பிறந்த பிரபந்தமாகையாலே இவற்றில் கூடாத தொன்று இல்லை அதாவது எல்லா இக்கணங்களும் அமையப் பெற்றதாகும், எனவே ஆழ்வார் தம் அவாவினால் உந்தவுந்தப் பாடல்களில் அமைந்த சொற்களின் தொடர்ச்சியைக் காணக் கொண்டு கூட்டு முறை தேவைப்படுகிறது. இத்தகு நெறி வடமொழியில் சுலோகத்தின் பொருளை எளிமையாக அறிவதற்கு 'அந்வயித்தல்' என்று கொண்டுகூட்டு முறையைப் பண்டை உரையாசிரியர்கள் பயன்படுத்தினர். இவ்வகையிலே வைணவ உரையாசிரியர்கள், குறிப்பாக திருவாய்மொழிக்கமைந்த உரைகளின் அரும்பதவுரைகளில் முன்னோர்கள் அமைந்துள்ளமை காணப்படுகிறது. இவற்றையெல்லாம் உட்கொண்டே பாசுரத்தின் இடையிலுள்ள தொடர்களில் பொருளறிய வேண்டி முன்பின் சொற்களைக் கொண்டுகூட்டி உரை வழங்குவர்.

சான்றாக,

"அடங்கெழில் சம்பத்து
அடங்கக்கண்டு ஈசன்

அடங்கெழில் அஃதுஎன்று
அடங்குக உள்ளே''

என்னும் பாட்டில் உள்ள சொற்போக்கில் பொருள் காணலரிது. இவ்விடத்தில் 'ஈசன் அடங்கெழில் அஃது என்று' என்பதை 'அஃது அடங்க ஈசன் எழில்' எனக் கொண்டுகூட்டிப் பொருள் அறியவேண்டும்[146] அதாவது, அஃதெல்லாம் நமது இறைவனுடைய செல்வம் என்று நினைத்து என்றபடி.

'செய்ய தாமரைக் கண்ணனாய்' என்ற பாடலில் 'வெளிப்பட்டிவை படைத்தான்' என்ற இடத்தில் 'வெளிப்பட்டு' என்பதை இறைவனோடு கொள்வதுமுண்டு. 'இவை' என்பதனோடு கூட்டுவதுமுண்டு. இறைவனோடு கூட்டும்போது 'வெளிப்பட்டு' என்பதற்குப் 'படைப்பை உத்தேசித்துத் தோற்றி' என்றபடி 'இவை' என்பதனோடு கூட்டும்போது 'வெளிப்பட்டிவை' என்பதற்கு 'வெளிப்பட்ட இவற்றைப் படைத்தான்' என்பதாகிறது.[147]

இவ்வாறு கொண்டுகூட்டு முறையால் பல இடங்களில் எளிமையான பொருட்சுவையை அறியமுடிகிறது,

## 4-7-20. 'ஆக' என்று தொடங்கி ஒருமித்த கருத்துக்கூறல்

ஆழ்வார் இறைவனோடு ஒன்றிய நிலையில் தம் அனுபவங்களையெல்லாம் தொடர்ந்து நெய்யொழுக்குப் போலப் பாசுரங்களால் உரைத்துக் கொண்டே போவார். அத்தகு தொடர்ச் சிந்தனைகளையெல்லாம் உள்ளத்தே வாங்கி ஒரு சேரத் தொகுத்து முறையாக உரைத்தல் உரையாசிரியர் உத்திகளில் ஒன்று. இவை உரை நடையில் உருவாகும்போது இறுதியில் 'ஆகிய', 'ஆக' என்னும் தொகைச் சொல்லையிட்டு நிறைவு செய்தல் உரையாசிரியர் இயல்பு ஆகும். இத்தகு நெறியை வைணவ உரையாசிரியர்களில் முதன் முதலில் மணவாள மாமுனிகளே முழுமையான அளவில் பயன்படுத்தியுள்ளார். அவர் தம் உரைகளான முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசநபூஷணம், ஆசாரிய ஹிருதயம் ஆகிய வியாக்யானங்களில் இப்பாங்கைக் காணலாம்.[148] இந்த உத்தி சுவாமியின் உரையில் முறையாகவும் முழுமையாகவும் அமைந்திருக்கக் காணலாம்.

எடுத்துக் காட்டுக்கு இரண்டிடங்கள் இங்கு விளக்கப் பட்டுள்ளன.

ஆழ்வாரின் மனநிலையைச் சுவாமிகள் இப்பாசுரங்களில் புலப்படுத்துகிறார். அதாவது தம்முடைய நெஞ்சானது இறைவனைக் காண விழைகிறது. ஆனால் இறைவனோ தேவர்களுக்கும் முனிவர்களுக்குமே என்றும் காணுதற்கு அரியவன். அப்படிப்பட்டவனை மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்க்கு அடைவதே திடமான குறிக்கோள் என்று ஆழ்வார் குறிப்பிடுவதை சுவாமி எடுத்துக் காட்டுகிறார். இங்கு இறைவனைக் காணக் கண்ணும், அவனைப் பற்றிப் பிதற்ற வாயுமே முக்கியமாயினும் இவ்விரண்டின் வேலைகளையும் நெஞ்சு ஒன்றே செய்யவல்லது என்று தம்முடைய திடமான நம்பிக்கையை ஆழ்வார் காட்டுவதைச் சுவாமி விளக்கிக் கூறுகிறார்.

அடுத்து, 'மெய்ந்நின்று கமழ்' என்ற பாசுரத்தில் ஆழ்வாக் தாம் பெற்ற பேற்றினை ஆராய்ந்து இறைவனின் சில குணத்தைக் கண்டு நெஞ்சு குழைகிறார். அதன் காரணமாக இறைவனின் திருமேனி அழகை வருணித்து இப்படிப்பட்ட அழகைத் தமக்குக் காண்பித்த இறைவனுக்கு எவ்விதத்தில் தம்முடைய நன்றியைத் தெரிவிப்பது என்பதை 'எந்நன்றி செய்தேனோ(க) என் நெஞ்சில் திகழ்வதுவே' என்று சொல்லித் தடுமாறுகிறார்.[150]

இங்குச் சுவாமி மேற்சொன்ன பாசுரங்களில் ஒருமித்த கருத்தினை 'ஆக' என எடுத்துக்கூறி, ஆழ்வாரின் மனநிலையை உணர்த்துவர்.

மற்ற உரைகளில் இத்தகைய நெறியினை முழுமையாகக் கடைப்பிடிக்காமைக்கு அந்த வியாக்கியானங்கள் யாவும் இருபத்து நாலாயிரம், முப்பத்தாறாயிரம் என அளவுபட்டமை, மிகுந்த விரிந்த அளவில் அமைந்தமை ஆகியவை காரணங்களாக இருக்கக்கூடுமெனத் தோன்றுகிறது.[151]

இங்கு ஒருமித்த கருத்தை ஒன்பதினாயிரப்படி உரையால் கண்டுகொளவது எளிதன்று. இவ்வாறாக 74 இடங்களில் தீபிகை உரையில் காணப்பெறுகிறது.[152]

### 4-7-21. உள்ளுறை (குறிப்புப் பொருள்) காட்டல்

'மலரினும் மெல்லிது காமம்'[153] என்றார் திருவள்ளுவர் இக்காதல் உணர்வுகள் மிகமிக மென்மையானவை. தலைவன்பால் தலைவி கொள்ளும் காதலுணர்வுகள் அவள்பால் இயல்பாக

அமைந்துள்ள நாணத்தால் இன்னும் நுண்மையும் பொலிவும் பெறுகின்றன. தலைவியின் உணர்வுகளைத் தலைவனுக்கு உணர்த்த விரும்பும் தோழியும் தனக்கே இயல்பாகவுள்ள பெண்மை நலத்தால் வெளிப்படையாகக் கூறாமல் குறிப்பாக உணர்த்துவள். எனவே அகப்பொருள் இலக்கியத்தில் குறிப்புப் பொருள இயல்பானதாகவும் இன்றியமையாததாகவும் ஆகி விடுகின்றது

இத்தகு சங்க இலக்கிய அகத்திணைக் காதற் குறிப்புப் பொருள்கள காலப்போக்கில் பக்தி இலக்கியப் பாடல்களிலும் இடம்பெறலாயின. சங்க இலக்கிய உரையாசிரியர்கள் இந்த நுண்மையான குறிப்புப் பொருள்களை எடுத்து விளக்குதலை உரைநெறியாகக் கொண்டு போற்றினர். அவ்வாறே ஆழ்வார் அகப்பொருள் பாடல்களுக்கு உரைவகுத்த வியாக்கியான கர்த் தாக்களும் 'ஸ்வாபதேசம்' என்ற தலைப்பில் அப்பாடல்களில் பொதிந்து கிடக்கும் அகப்பொருள்களைஎடுத்து விளக்கலாயினர். இத்தகு குறிப்புப்பொருள்களை அகத்திணை இலக்கண நூலார் உள்ளுறை என்றும், இறைச்சி என்றும் குறிப்பர்.[153] ஆனால் திவ்வியப் பிரபந்த உரையாசிரியர்கள 'ஸ்வாபதேசம்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். இவர்கள் பயன்படுத்தியுள்ள இந்தச் சொல் உள்ளுறை, இறைச்சி இரண்டையும் உள்ளடக்கிய குறிப்புப் பொருளே எனக் கொள்ளல் வேண்டும.

தமிழ்மரபினைப் போற்றிக்கொண்டு ஆழ்வார் அகப்பாடல் களுக்கு உள்ளுறை குறித்தவர் நம்பிள்ளை என்னும் ஆசாரியர் என்பர் இரா. அரங்கராசன்.[154] இதனை அரண் செய்யும் வகை யில் திருக்கோவையாருக்குப் பேராசிரியர் உரை அமைந்ததைக் காணலாம்.[155]

இவ்வாறாக, உள்ளுறையின் தோற்றமும் வளர்ச்சியும் வைணவ உரைகளிலும் வந்ததைப் பின்பற்றியே சுவாமியும் உள்ளுறைக்கு இலக்கணம் கூறும்போது "சொற்போக்கில் மேலெழுந்தவாரியாக விளங்கும் பொருள் 'அந்யாபதேசம்' என்றும் உள்ளுற ஆழ்ந்து பார்க்குமளவில் கிடைக்கும் பொருள் 'ஸ்வாபதேசம' என்றும் வழங்கும்'' என்று சுவாமிகள் கூறுவர்[156] இவ்வுள்ளுறை தத்துவப் பொருளை உணர்த்தவும், ஆழ்வார் திருவுள்ளத்தை உணர்த்தவும் துணைசெய்ய வல்லது.

## 4-7-21-1. தத்துவப்பொருள்

'உண்ணுஞ் சோறு' என்ற பதிகத்தில் ஆழ்வார் தாமான தன்மையிழந்து பராங்குச நாயகியாகத் திருக்கோளூர் சென்று

அவ்விடத்து இறைவனோடே கலக்க ஆசைப்படுகிறாளாக இருக்கும் இருப்பைத் தாய்ப்பாசுரமாக உரைப்பர்.[157] இதில் உறைந்திருக்கும் உள்ளுறையைச் சுவாமி சுட்டுவது குறிப்பிடத் தக்கது. தக்கநெறியான இறைவனைப் பற்றினவர்கள் பேற்றைக் காலதாமதத்தில் பெறுவது காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணும் என்னும் காதல் கிளர்ந்து அதனால் படி கடந்து நடக்க வேண்டி வந்தது. இத்தன்மை இறைவனைப் பற்றியவர் (பிரபந்நர்) குடிக்கட்டுப்பாட்டுக்குச் சேராது என்று விலக்கி, இறைவன் தானே வந்து தன்னைச்செய்யக் (விஷயீகரிக்க) காண்டிருக்கவேணும் என்று சொல்லித் துடிப்பை அடக்கப் பார்க்கிற நம. என்ற பதத்தில் கூறப்பட்ட நெறியில் நம்பிக்கை யாகிற அறிவின் நிலையைத் தாய் என்றுரைப்பர். இதனைத் திரட்சியாகக் காட்டும்போது ஆழ்வார்க்குப் பேற்றில் விளைவு விளைந்தமை ஒரு பக்கலிலும் இறைவனுடைய பேற்றுக்குத் தாம் விரைவது கூடாது என்று ஆறி அடங்கி இருப்பதுதான் அடையத் தக்கது என்கிற உறுதியை மற்றொரு பக்கலிலும் கலந்திருப்பதாக இப்பதிகத்தில் காட்டுவது குறிப்பிடத்தக்கது. இங்குத் தத்துவ நோக்கில் திருமந்திரத்தில் காட்டிய நம: பதத்தின் பொருள் விளக்கம் சிறந்து விளங்குவது காணலாம்.

'என் மின்னு நூல் மார்வன்' என்ற பாடலில் சிறுபூவைகளைத் தூது விடுகிறாள்,[158] பராங்குச நாயகி. இறைவனிடம் தூது மொழிகளைச் சொல்லி வரும்படியும் கூறுகிறாள். அதாவது "யான் உம்மைக் கற்பியா வைத்த மாற்றஞ் சொல்லிச் சென்மின் கள்" என்பதாகும் இவ்விடத்தில் பூவைகளிடம் தாம் கற்பித்து வைத்த பாசுரங்களைச் சொல்லிக் கொண்டு அப்பெருமானிடம் செல்ல வேண்டுகிறாள். இதில் உறைந்துள்ள உள்ளுறையைச் சுவாமி ஆழ்வார் திருவுள்ளம் அறிந்து உரைப்பதைக் காணலாம். இங்கு உறைந்திருக்கும் தத்துவப் பொருளை நோக்கின் அஃது ஆழ்வாரின் நெறியைக் குறிப்பதாகும். ஆழ்வார் எப்போதும் பிராட்டியோடு கூடிய இறைவனைப் பற்ற வேண்டியிருக்கும் நிலையையுடையவராதலால் இப்பாடலில் தூது மொழியாகப் பூவைகளுக்குத் தாம் கற்பித்தது மும்மறைகளுள் துவயம் பற்றிய தாகும். இதனால் ஆழ்வாரின் நிலைத்த அனுட்டானத்தைத் தெரிவிப்பதும் உணரலாம் துவய மந்திரத்தினைச் சிறியார் பெரியார் என்ற வேறுபாடின்றிக் கற்பித்து வந்தது அக்காலத்தில் இருந்து வந்தது[159] ஆகவே பூவை காதுக்கும் ஆழ்வார் துவய மந்திரத்தைக் கற்பித்து வைத்ததாக உள்ளுறை காட்டுவது அழகு

**4-7-21-2. ஆழ்வார் திருவுள்ளத்தைக் காட்டும் உள்ளுறை**

'மாயோனிகளாய்' என்ற பாடலில் இறைவனின் புரையறக் கலக்கும் (சௌசீல்யம்) நீர்மையைக் காட்டும் வகையில், எல்லார் தலையிலும் திருவடிகளை வைத்த தன்மையை இறைவன் காட்டக் கண்டு வியப்படைகிறார் ஆழ்வார். இதில் 'திசைகளெல்லாம் திருவடியால் தாயோன்' என்பதற்கு எல்லா உலகங்களையும் திருவடியால் அளந்தவன்' என்று பொருளுரைப்பர். இத்தொடரில் ஆழ்வார் ஈடுபட்டுள்ளதை உள்ளுரையாக காட்டுவர் சுவாமி, அதாவது ''பூமிப் பரப்பை யடங்கலும் திருவடிகளாலே தாவி யளந்து கொண்டவன். பிராட்டிமார் தொடும்போதும் பூத் தொடுமா போலே கூசித்தொட வேண்டும்படியான மெல்லிய திருவடிகளைக் கொண்டு கல்லும் கரடுமான உலகங்களை யெல்லாந் தாவியளப்பதே!'' என்று ஈடுபடுவதாகும்[160]

**4-7-22 உரையாடல் போக்கில் உரையைக் காட்டல்**

ஆழ்வார் பாடலை அநுபவித்த சுவாமி அப்பாடலில் ஆழ்வார் காட்டும் வீரச் செயலுக்குத் தோற்று அந்தச் சரிதத்தைச் சுருக்கமாகச் சொல்லுவதும், அவற்றில் இரண்ட கருத்தை எடுத்துக் காட்டுவதும் அவர் உரையின் தனிச்சிறப்பாகும். அவ் வகையில் 'மாலுக்கு' என்ற பாடலில் 'வையமளந்த மணாளற்கு' என்ற தொடரில் உலகளந்த உத்தமன் மாவலியிடம் யாசித்து மூவுலகத்தையும் அளந்த வரலாற்றைக் காட்டுவர்.[161] இதனை ஸ்ரீபாகவத சுலோகம் காட்டி விளக்குகிறார் சுவாமி. அந்தச் சுலோகமானது மாவலிக்கும் வாமனனுக்கும் நடந்த உரையாடல் போக்கிலே அமைந்ததைக் காட்டி உள்ளுறை பொருளையும் உரைப்பர். இத்தகு நெறி மற்ற உரைகளில் காணப்பெறாதது. இவ்வாறு உலகளந்த உத்தமரின் வீரச் சரிதத்தில் ஆழங்காற்பட்டு ஆழ்வார் ஒரு தொடரில் இறைவன் விரோதியைப் போக்கும் தன்மையைச் சிறப்பாக உள்ளுறை பொருள்வழி எடுத்துக் காட்டி யுள்ளார்.

**4-7-23 பட்டர்கள் அழகிய மணவாளச் சீயர் தம் அனுபவங்களைக் காட்டல்**

வாழையடி வாழையாக வளர்ந்த வைணவ உரையிலே வழித் தோன்றல்களான ஆசாரியர்கள் ஒருவருக்கொருவர் அருளிச் செயலின் பொருள்களை அநுபவிக்கும்போது அவற்றின் கருத்துக் களைப் பொருளாட்சிகளாக (நிர்வாகங்களாக) முதன் முதலாக ஈட்டிலே அதிக அளவு அமையப் பெற்றதை அறியலாம். இத்தகைய நெறி நம்பிள்ளை காலத்துக்குப் பிறகுபல்பல வைணவ

நூல்கள், உரைகள் வெளிவந்த போதிலும் முன்னோர்கள் ஒருவருக்கொருவர் வாய்மொழியாக வகுத்த பொருள்களைக் காட்டிலர். ஆனால் இந்நூற்றாண்டிலே சுவாமியின் தாய்வழிப் பாட்டனாரான அழகிய மணவாளச் சீயர் இத்திருவாய்மொழிக்ளைத் தீபிகை உரையில் சுவாமி இடம்பெறவைத்தது குறிப்பிடத்தக்கது.

'கண்களால் காண'[162] என்ற பாடலில் கருடனுடைய சிறகின் ஒலியை நினைத்துப் பராங்குச நாயகி பரவசப்பட்டதாகக் கூறுவர். இவ்விடத்தில் சுவாமி விளக்கிக் கூறும்போது ஆழ்வாருக்கு இறைவன்மீதும் நினைவு இல்லை; அவனைத் தாங்கும் கருடனின்மீதும் நினைவு இல்லை. ஆனால் சிறகின் ஒலி ஒன்றிலேயே நினைவு இருந்ததை எடுத்துக்காட்டுவர். இவ்விடத்தில் தம்முடைய பாட்டனாரான அழகிய மணவாளச் சீயர் திறமையாகக் கூறியதை காட்டுவர் அதாவது ருக்மிணிப் பிராட்டிக்குச் சங்கின் ஒலியிலே நினைவு; சீதாப் பிராட்டிக்கு வில்லின் நாண் ஒலியிலே நினைவு; பராங்குச நாயகிக்குச் சிறகின் ஒலியிலே நினைவு என்று அழகாக எடுத்துக் காட்டுவர்.

இவ்வாறு ஐந்து இடங்கள் உள.[163] இப்படி 500 ஆண்டுகளுக்குப் பிறகு முன்னோர்கள் ஒருவருக்கொருவர் பரிமாறி வழங்கிய ஆழ்பொருள்களைப் புலப்படுத்தும் நெறியைப் பின்பற்றி சுவாமி இன்று தம்முடைய பாட்டனாரின் வாய்மொழியைக் காட்டி உரைப்பது உலகோர்க்கு உதவும் உரைச்சிறப்பு எனலாம்.

**4-7-24. புராண, இதிகாசக் கதைகளைக் கூறி விளக்குதல்**

நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியை வேதத்திற்குச் சமமாகக் கூறுவர் பெரியோர்.[164] இதனையே முதல் ஆசாரியரான நாத முனிகளும் திருவாய்மொழிக்கமைந்த முதல் தனியனில் 'திராவிட வேத சாகரம்' என்று குறிப்பிடுகிறார்.[165] இவ்வாறு வேதத்திற்கு ஒப்பாக அமைந்த திருவாய்மொழியில் ஸ்ரீபாஞ்சராத்ரம், புராணங்கள், இதிகாசங்கள் ஆகியவற்றில் சொல்லியுள்ள இறைவனுடைய இயல்பு, குணம், செல்வங்கள் திருவிளையாடல்கள் முதலியவற்றை ஆங்காங்கே ஆழ்வார்க் காட்டிச் செல்கிறார், ஆசாரிய இருதய நூலும் திருவாய்மொழியாகிய வேதமும் வேத உபப்ரம்மணம் என்பர்.[166] இவற்றை உட்கொண்டு ஆழ்வார் பாடலைக் காணும்போது அப்பாடல்களிலமைந்த புராண இதிகாச நிகழ்ச்சிகள் மற்றும் அர்ச்சாவதாரங்களில் நடத்திய நிகழ்ச்சிகள், கதைக்குறிப்புகள் யாவும் முன்னோர்கள் தாம் அருளிய உரைகளில் எடுத்துக்காட்டியுள்ளனர்.

இதனைத் தழுவியே சுவாமியும் இதிகாசங்கள் மூலமாகவும் இறைவனுடைய திருவிளையாடல்களையும் புராணங்கள் வாயிலாகப் பரந்த செல்வத்தின் தன்மையையும் ஆழ்வார் அருளிய தொடர்களுக்கேற்பக் காட்டிச் செல்வர். இவை பெரும் பாலும் முன்னோர் குறிப்பிடாத, சுவாமி மட்டுமே குறிப்பிடும், கதைகளாகவும், முன்னோர்கள் காட்டிய வரலாற்றை விளக்கு வனவாகவும் அமைந்துள்ளன.

## 4-7-24-1. முன்னோர்கள் குறிப்பிடாத சுவாமி மட்டுமே குறித்த கதைகள்

'வீடுமின் முற்றமும்' என்ற பதிகத்தில் இறைவனை அடைய உபதேசம் செய்கிறார் இதில் 'வீடுமின் முற்றமும் வீடு செய்து உம்முயிர் வீடுடையானிடை வீடு செய்ம்மினே' என்ற தொடரில் அமைந்த 'உடையான்' என்ற சொற்போக்கை விளக்க அற்புத மான கதை ஒன்றைச் சொல்கிறார் சுவாமி இது மற்ற உரை களில் காணக் கிடைப்பது அன்று.

வைசம்பாயனர் என்னும் முனிவர் ஜனமேஜயன் என்ற அரசரைப் பார்த்துப் பாரதக் கதையை முழுவதும் சொல்ல நினைத்தார். அதற்கிடம் கொடாத அவ்வரசன் ஒரு சுலோகத்தை மட்டும் கேட்டதன் வாயிலாக ஆசைபிறந்து பாரதக்கதை முழு வதையும் அம்முனிவர்வழி கேட்டான். அதுபோல் ஆழ்வாரும் பொதுவாக 'உடையான்' எவன் என்பதை இப்பதிகத்தின் இறுதியில் 'வண்புகழ் நாரணன்'[167] என்று ஆழ்வார் குறிப்பிடு வதை சுவாமிகள் காட்டுகிறார். இவ்வாறு பாரதக்கதையினால் இறைவனைப் பற்றிக் கூறுகிறார் சுவாமி [168]

'அரணமாவர் அற்ற காலைக்கு' என்ற பாடலில் இயற்கை யாக வந்து அவதரித்து ஆபத்திலே நண்பனாக அடையத்தக்கவன் என்பதை ஆழ்வார் காட்டுகிறார். இந்த 'அற்ற காலைக்கு அரணம் ஆவர்' என்ற தொடருக்குத் தேவர்களுக்கும் அசுரர் களுக்கும் போர் நடந்ததில் தேவர்கள் வெற்றி பெற்றதும மற்றொருகால் தோல்வி ஏற்பட்டால் அப்போது தாங்கள் பிழைக்க நினைத்துத் தங்களுடைய சிறந்த செல்வங்களை அக்கினித் தேவனிடம் கொடுத்து வைத்திருந்தனராம் இதனைத் தைத்திரீய ஸம்ஹிதையிலிருந்து எடுத்துக்காட்டி விளக்குவா சுவாமி.[169] இந்த அற்புதக்கதை முன்னோர்களின் உரைகளில் காணப்படவில்லை.

**முன்னோர்கள் குறித்த வரலாற்றை விவரித்துக் கூறல்**

'மானேய் நோக்கி மடவாளை' என்ற பாசுரத்தில் 'கூனே சிதைய உண்டை வில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா' என்ற தொடருக்கு இராமாவதார, கிருஷ்ணாவதார நிகழ்ச்சிகளை முன்னோர்கள் காட்டியுரைப்பர், இதனைப் பின்பற்றிச் சுவாமியும் கூனியின் கதையை இரு அவதாரங்களிலும் நடந்ததைத் விவரித்துக் காட்டுவர்.[170] சுவாமி கிருஷ்ணாவதாரத்தில் காட்டும் கூனியை மகளிரில் சிறந்த உருவினள் ஆக்கினான் என்பதைக் காட்டுகிறார். இராமாவதாரத்தில் கையில் வில் கொண்டு எய்த உண்டை கைகேயியின் வேலைக்காரி மந்தரை என்னும் கூனியின் முதுகில் தெறிக்கச் செய்து அந்தக் கூன் முன்னும் பின்னும் தள்ளுமாறு இருந்ததைக் காட்டுவர்'

'புணரா நின்ற மரமேழ்' என்ற பாடலில் இராமாவதாரத்தில் ஒன்றோடு ஒன்று பிணைந்திருந்த ஏழு சால மரங்களைத் துளை படுத்தின நிகழ்ச்சியைக் காட்டுகிறார் ஆழ்வார். சுக்கிரீவன் இராமனின் பேராற்றலில் நம்பிக்கை அறியும்பொருட்டு இவ் வரலாறு இப்பாட்டின் முதலடியில் அமைந்ததை விவரித்துக் காட்டுவர் சுவாமி. இவ்விடத்தில் ஆழ்வார் எடுத்துக்காட்டி நிகழ்ச்சியின் காரணத்தைக் காட்டும்போது குரங்கரசனான சுக்கிரீவனுக்குண்டான சந்தேகத்தைப் போக்குவதற்காகக் காரியம் செய்த இறைவனின் பக்கல் அவ்வாறு சந்தேகப்படாமல் இறைவனின் ஆற்றலை உள்ளபடி அறிந்த ஆழ்வார் திறத்துக் காரியம் செய்யாமையை நினைத்துக் கூறுவதாகச் சுவாமி காட்டுவர்[171]

'விண்ணுளார் பெருமாற் கடிமை செய்வார்' என்ற பாடலில் விண்ணுலகில் உள்ளவர்களைக் கொண்டு இறைவனுக்கு அடிமை செய்பவர்களான நித்ய சூரிகளையும் இந்நிலத்தில் ஐம்புலன்களின் தன்மையாலே இப்பிறவியின் தன்மைகளை அடையச் செய்யும் என்பதை ஆழ்வார் காட்டுவர்.[172] இதற்கு இரண்டு வரலாறுகளை முன்னோர்கள் காட்டி உரை வழங்கியுள்ளனர். இவற்றை விளக்கும் வகையில் அக்கதைகளைச் சுட்டிக் காட்டுகிறார். இங்குச் சுமுகன் என்ற பாம்புக்கும் கருடனுக்கும் நடைபெறும் உரையாடல்களைச் சுவாமி காட்டுவர்.

**4-7-25. உரைக்கு உரை செய்த உத்தம உரைகாரர்**

'உரைகொள் இன்மொழி'[173] என்று ஆழ்வாரே தாம் அருளிய பாசுரங்களே அரும்பொருளாகிய இறைவனை உணர்தலுக்குரிய வாயுரை என்று குறிப்பிடக் காணலாம்.

இங்கு 'உரை' என்ற சொல், சொல்லுதல், உண்மையை உணரச் சொல்லுதல் என்ற பொருளில் அமைந்திருத்தலையும் காணலாம். ஆழ்வார் காலத்தில் ஆழ்வார் பாடல்களே உண்மைப் பொருளை உணர்த்த வல்லனவாக இருந்திருத்தல் வேண்டும்.

பின்னர், ஆழ்வாரின் உள்ளக் கிடக்கைகளை ஆசாரியப் பெருமக்களே உணர வல்லவராயினர். அந்த உணர்ச்சியை அடியவர்களெல்லாம் பெறும் பொருட்டு அருள் உள்ளங்கொண்டு வியாக்கியானங்களாக விளக்க முற்பட்டார்கள். இந்த வியாக்கியானங்களாகிய உரைகள், உரைகளின் மொழிநடை, எடுத்துக் காட்டுக்கள், மேற்கோள்கள், ஐதிகங்கள் முதலியன பிற்பட்டுப் பிற்பட்டு வருகின்ற அடியார்களுக்கு அருமையாகத் தோன்றின. அதனால் அவ்வப்போது ஆசாரியர்கள் உரைக்கு உரை எழுதி அடியவர்களுக்கு உதவி வரலாயினர் அவ்வகையில் இறுதியாக நமக்கு வாய்த்த உரைகாரர் நப் சுவாமி ஆவர். முன்னோர் உரை இக்காலத் தமிழ்மக்களுக்கு எங்கெங்கு அருமையாகத் தோன்றுமோ அங்கங்கெல்லாம் அன்னார்க்கு எளிதாக ஆழ்வார் உள்ளக்கிடக்கை புலப்படுமாறு உரைக்கு உரை செய்துள்ளார்.

இவ்வாறு முன்னோர்களமைத்த வியாக்கியானங்களான 6, 9, 24, 36, 12 படி என்றிப்படி எத்துணை உரைகள் அவதரித்தாலும் இன்னமும் வியந்து உரையிட வேண்டிய பெருமை திருவாய் மொழிக்கு உள்ளதொன்றாகையாலே உரைக்கு உரை செய்த உத்தமராகச் சுவாமி தீபிகையுரையை வெளியிட்டது குறிப்பிடத் தக்கது.

'கிற்பன் கில்லேன்'[174] என்னும் பாசுரத்தின் வாயிலாகச் சாஸ்திர நெறியை விளக்கிக் காட்டுகிறார். இதனால் ஆழ்வார் இறைவனை எவ்வாறு கிட்டுவது என்பதை, அவர்தம் மனத்தே கிடக்கும் எண்ணத்தை, வெளிக்கொணர்ந்து விளக்குகிறார்கள் உரையாசிரியர்கள். அதாவது சாத்திர நெறிகளைப் பின்பற்று புலவர்கள் சாத்திரங்களில் செய்ய வேண்டுவனவற்றைச் செய்தலும் செய்ய வேண்டாதவற்றைச் செய்யாதிருத்தலும் உலகிற்கு எடுத்துக் கூறுகின்றனர். இவ்விரண்டு செய்கையினையும் தவிர்த்த தனால் இறைவனைக் கிட்டுவது எப்படி என ஆழ்வார் எண்ணு முடுவதைக் காணலாம். இதற்கு முன்னோர்கள் உரை செய்த புரங்கினை உணர வேண்டும்.

''கிற்பன்—'அல்பயத்னமாய் பஹுபலமான ஸுக்ருதத்தைச் செய்' என்றால் 'ஓம்' (அப்படியே) என்று இசைந்திலேன். மித்ர பாலத்தாலே அடிகராவ்ருத்தி லக்ஷணமான போகத்தைப் பெற லாம் என்றால் அத்தைச் செய்வேன் என்றிலன். கில்லேன் என்றிலன்—இப்போது அல்பமாய் மேலே பஹுவநர்த்தமா யிருக்கிற விஷய ப்ராவண்யத்தைத் தவிரும்'' என்றால் அத்தைத் தவிர்வேன் என்றிலன்.''[175]

'' (கிற்பன் கில்லேனென்றிலன்) 'ஆழ்வீர்' பகவத் விஷயத்தில் வந்தால் இச்சைக்கு மேற்பட ஓராயாஸமின்றிக்கே, பேற்றில் வந்தால் அடிநராவ்ருத்தி லக்ஷணமோக்ஷமாயிருக்கும்; அதுக்கு ஈடாக ஒன்றைச் செய்யவல்லீரென்றால் 'ஓம் அப்படிச் செய்கிறேன்' என்றிலன். 'இதர விஷய ப்ராவண்யமாகிறது ஆயாஸம், கனத்துப் பேற்றில் ஒன்றின்றிக்கே யிருப்பதொன்று; அத்தைத் தவிர வல்லீரோ?' என்றால் 'ஓம் தவிருகிறேன்' என்றிலன்''[176]

''சக்திமானான நீ கிட்டுவிக்கும்தொழிய, என்னைப் பார்த் தால் கிட்ட விரகில்லை என்று கருத்து.''[177]

இவை முன்னோர்களின் உரைகளாகும். சுவாமியின் தீபிகை உரை பின்வருமாறு சிறப்பாக அமைந்துள்ளது.

''கிற்பன்—செய்யகிற்பன்; கில்லேன்-செய்யகில்லேன்; ஸுக்ரு தத்தைச் செய்யகிற்பன். என்ன வேணும்; துஷ்க்ருதத்தைச் செய்ய கில்லேன் என்ன வேணும்; இரண்டுமில்லை'' என்றவிதனால் க்ருத்யாகாரணமும், அக்ருத்ய கரணமும் தம்மிடத்தில் பூர்த்தி யாக உண்டென்று காட்டி,[178] ஆசாரிய இருதயச் சூர்ணிகை யையும்[179] எடுத்துக்காட்டுடன் விளக்குகிறார் சுவாமி.

இப்பாசுரத்திற்கே உரைக்கு உரையாகச் சுவாமி மேலும் தம்முடைய உரையை அமைத்துள்ளார். ''அற்ப சாரங்களவை சுவைத்து அகன்றொழிந்தேன்'' என்ற தொடருக்கு முன்னோர் களின் வழிச்சென்று மேலும் விளக்குகிறார். 'சுவைத்து' என்ற சொல்லுக்குத் ''தன் நாவில் பசை கொடுத்து புஜிக்கவேண்டும்படி யிருக்கிற விஷயங்கள் தோறும் கால்தாழ்ந்து'' என்றே உள்ளது. ஆனால் சுவாமியின் தீபிகை உரையில் ஒரு நாய் பசையற்ற எலும்பை வெகுநேரம் கடித்து அதில் பசை ஏதுமில்லை என்பதை உணராது தன் பல்லிலிருந்தே பெருகும் இரத்தத்தைப் பருகி இன்புற்றதை எடுத்துக்காட்டாக விளக்குகிறார் சுவாமி.

ஆழ்வார் தம்மை நாயினும் கடையனாக எண்ணி இறைவனின் மேன்மையை உணர்ந்து அவனைக் கிட்டுவது எவ்வண்ணம் என்று எண்ணுவதை அவர் திருவுள்ளத்திற் கொண்டே முன்னோர்கள் "தன் நாவில் பசை கொடுத்துப் புஜிக்க வேண்டியிருக்கிற" என்று அருளிச் செய்தார்கள் போலும் என்று சுவாமிகளும் இங்குச் சுட்டுகிறார்.

'உயிர்களெல்லா உலகமு முடையவனை' என்னும் திருநாமப் பாட்டின் சிறப்பு, தீபிகையின் வாயிலாக நன்கு அறியலாம். காக்கும் இறைவனான நாராயணனுக்கு ஒரு குறை வந்தாலும் காக்கும் தொழிலில் குறை உண்டாகுமன்றோ என்று பெரியவாச்சான் பிள்ளை தம் உரையில் தெரிவிக்கிறார்.

"(உயிர்கள் இத்யாதி) இவர் தரித்த பின்பாயிற்று; அவன் எல்லா வுலகமும் எல்லாவுயிருமுடையவனாயிற்று; இங்கு இவரொருவரையுமிறே இழக்கப்புக்கது. அங்கு ஸவிபூதிகனானவனையாயிற்று இழக்கப்புக்கது. ஏகாங்கம விகலமானாலும் அங்கவை கல்யமுண்டிறே; இவரைப் பெற்ற பின்பாயிற்று ஈச்வரத்வம் பூர்ணமாயிற்று"[180]

"எல்லா வுயிர்களும்—எல்லாவுயிர்களையும்;
எல்லா வுலகங்களும்—எல்லா வுலகங்களையும்;
உடையவனை—உடையவனை"
என்பது பன்னீராயிரப்படி.[181]

இவை அனைத்துக்கும் மேலாக ஆழ்வார் காட்டிய இத்தொடரில் அமைந்துள்ள நுட்பத்தை சுவாமி எடுத்துக் காட்டுகிறார். ஆழ்வாரைத் தரிக்கச் செய்ததனாலேயே இறைவனுக்குப் பிறிதொன்றுக்குமில்லாச் சிறப்புடைய ஒரு புகர்(ஒளி) உண்டாயிற்று. இறைவனிடத்து இயற்கையாக அறிவில் பொருளும் அறிவுள் பொருளும் ஒடுங்கி அமைந்ததனால் இத்தொடர் அமையப் பெற்றதன்று; ஏனெனில் இப்பதிகத்தில சரீர சம்பந்தத்தைப் போக்க ஆசைப்பட்டதால் அவரை இன்னும் இருத்தி ஆயிரம் பாசுரங்களையும் இயற்றி உலகைத் திருத்த எண்ணி ஆழ்வாரைத் தரிப்பிக்கச் செய்தான் இந்தத் தரிப்பே காரணமாக இறைவனுக்கு ஒரு புகர் உண்டாயிற்று. அதைத் தம மனத்தே கண்ட ஆழ்வார் இறைவன் இப்பொழுதே ஒப்பற்ற புகர் படைத்தமையைக் கண்டார். அதனாலேயே 'உயிர்களெல்லா வுலகமு

மூடையவனை' என்ற தொடரை ஆழ்வார் அமைத்தார் என்பர் சுவாமி.[189] இத்தொடரின் நுட்பத்தைச் சுவாமி எடுத்துக்காட்டி விளக்குகிறார்.

அடுத்ததாக முன்னோர் கூறிய உரையின் விளக்கத்தில் நுட்பமாக அமைந்த பொருளை எடுத்துக்காட்டுகிறார் சுவாமி. அதாவது முதல் இரண்டு திருவாய்மொழிகள் 'தத்துவபரமாகவும், பக்தி பரமாகவும் அமைந்துள்ளன. இவ்வாறு அமைந்ததன் காரணத்தையும் சுவாமி எடுத்துக்காட்டுகிறார். வைணவ சமயத்திற்கு வடமொழியும் தமிழ்மொழியும் இரண்டு கண்களாகத் திகழ வேண்டியுள்ளதால் ஒரு பொருளைக் காண இருகண்கள் தேவைப் படுவது போலே ஸ்ரீ பாஷ்யத்திற்கு மூலமான பிரம்மசூத்திரமும் திருவாய்மொழியும் ஒப்புமையாக அமையவேண்டுதலால் ஸ்ரீபாஷ்யத்திற்குப் பக்தி பரமாகவும் திருவாய்மொழிக்குப் பிரபத்தி பரமாகவுமானால் ஒப்புமை குன்றியதாகும். என்று எண்ணி உபய வேதந்தத்தில் ஓரே நோக்கு என்ற நுட்பத்தை எடுத்துக்காட்டுகிறார் சுவாமி.

இந்நூற்றாண்டில் உரைக்கு உரை செய்த உத்தம உரைகாரரான சுவாமியுடன் நெருங்கிப் பழகிய பெரியர்களின் அனுபவங்கள் பின்னிணைப்பில் காட்டப்பட்டுள்ளன (பின்னிணைப்பு எண்.     )

## முடிவுகள்

1. தொல்காப்பியம் முதலான பண்டைத் தமிழிலக்கண நெறியில் திவ்யார்த்த தீபிகையுரை அமைந்துள்ள பாங்கு நிறுவப்பெற்றுள்ளது

2. திருவாய்மொழிப் பதிகங்களில் அமைந்துள்ள வைணவ கோட்பாடு, ஆழ்வாரின் பாரிப்பு நிலை, அவர் தம் விருப்பக் காட்சி தத்துவம் என்னும் நான்கு பொருள்களைத் தீபிகை உரை சுட்டி உரைக்கிறது என்பது எடுத்துக்காட்டப் பட்டுள்ளது

3. பதிகத்தின் திரண்ட கருத்தைக் கூறுவதன் வழி ஒவ்வொரு பதிகத்தையும் பாடும்போது ஆழ்வார்க்கு இருந்த மனநிலையும். அவர்பால், இறைவனுக்கிருந்த உறவுநிலையும் தெளிவாகவும் திறமாகவும் முழுமையாகவும் இந்த உரைதான் புலப்படுத்துகிறது என்று நிலைநாட்டப்படுகிறது. திருவாய்மொழியைக் கற்போர்க்கு அதனுடைய அடிப்படையும் பதிகப் போக்குகளை

யும், தொடர்புகளையும், வளர்ச்சியையும் உணர்த்தி நெறிப் படுத்துவதற்குச் சிறந்த உரை தீபிகை ஆகும்.

4 பதிகத்தில் உயிரான பாசுரத்தையும், பாசுரத்தில் உயிரான தொடரையும், உயிரான சொல்லையும், முன்னோர் காட்டியதினும் , சிறப்பாக இவ்வுரை எடுத்துக்காட்டுகிறது என்பதும் தெளிவுசெய்யப் பெறுகிறது.

5. முன்னுரையில் சுட்டியது போல ஐந்து பொருள்களை நான்கு நோக்குகளில் பதினைந்து வகைப்பாடுகளாக ஆழ்வாருடைய திருவுள்ளக்கிடக்கை தீபிகை உரையில் உள்ளங் கை நெல்லிக்கனி போல எடுத்துக்காட்டியுள்ள பாங்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

6. தீபிகையின் தனித்தன்மை, ஆழ்வார் பாசுரப் பாடு பொருளைப் பல்வேறு உத்திகளில் விளக்குகிறது என்பதும், நம்பிள்ளை காலத்துக்குப் பின்வந்த நூல்களிலிருந்தும் சிறப்பாக ஆசாரிய இருதயத்திலிருந்தும் மேற்கோள் காட்டி விளக்கம் செய்யப்பெற்றுள்ளது என்பதும் உரைக்கப்பெற்றுள்ளன. இவ்வியல் தீபிகை உரையாசிரியரான சுவாமியின் இலக்கிய இலக்கணப்புலமை, தத்துவ ஞானம், உலகியல் தெளிவு ஆசாரி யன்பால் அன்புடைமை ஆகிய ஆளுமைகளைப் புலப்படுத்தி அமைகிறது.

## இயல்—4

### அடிக்குறிப்புகள்

1 இரண்டாம் இயல், ப.

2 திருவாய்மொழி அவதாரிகை, தீபிகை, தொகுதி 1, ப. 8

3 மேலது, ப. 9

4 ,,

5 ,,

6 9-4-9 தீபிகை

7 "அங்கம்என்பதாவதுஉறுப்பு,அங்கங்களையுடையதுஅங்கி எனப்படும். அதாவது கை, கால் போன்ற அங்கங்களை யுடையது ஓர் உடம்பு. அது போன்று மற்ற ஆழ்வார்களாகிற அங்கங்களை உடைய ஒரு முழுத்திருமேனியாக—அங்கியாக—நம்மாழ்வார் விளங்குகிறார்"

—நேர்முகப்பேட்டி, ஸ்ரீமான் உ.வே தி.அ கோபாலாசாரிய சுவாமி, வியாகரண சிரோமணி, திருப்பதி, 18-5-1991.

8 தீபிகை, ப.9

9 சடகோபரந்தாதி, பா. 11

10 மேலது, பா. 101

11 1-1-1

12 4-4. தீபிகை

13 4-6. தீபிகை

14 முமுட்சுப்படி, நூ-16

15 ஆளவந்தார் ஸ்தோத்ரம், சு 57

16 4-8. தீபிகை

17 தொல் பொருள். மெய்ப்பாட்டியல், நூ. 27

18 திருவிருத்தம், பா. 1

19 10-10-1

20 கடிதம், நாள்:19-8-90, ஸ்ரீமான்வித்வான் உ.வே. தி. அ. கிருஷ்ணமாசாரிய சுவாமி, நியாய சிரோமணி, காஞ்சிபுரம்.

21 5-3-1. தீபிகை

22 5-3-2. தீபிகை

23 5-3-4-10, தீபிகை

24 8-7 தீபிகை

25 8-7-1, 24, 36 தீபிகை

26 8-7. முழுவதும், தீபிகை

27 9-2. தீபிகை

28 2-2, தீபிகை

29 1-1. தீபிகை

30 2-2-11 தீபிகை

31 3-6-9, "இத்திருவாய் மொழிக்கு நிதானம் இப்பாட்டு"
24, 36

32 2-9-4, 3-6-9, 6-4-7, 6-8-1, 6-8-4, 6 8-5, 8-1-3, 8-2-7, 8-2-11 8-5-6, 8-10-4, 9-1-7, 9-1-8, 9-2-9, 9-4-9, 9-6-10 9-7-1, 9-7-3, 9-10, 9-10-5, 10-1-1, 10-3-6, 10-3-9, 10-4-4, 10-4-5, 10-5-9, 10-6-4, 10-8-4, 10-8-9, 10-10-6, 10-10-8 (31) இடங்கள்

33 9-1-7, 36, 24 தீபிகை

34 முமுக்ஷுப்படி ஸாரார்த்த தீபிகை, சுவாமி எழுதியது
ப. 94

35 10-5-9 தீபிகை

36 (அ) "நின்புகழில் வைகும் தஞ்சிந்தையிலும் மற்றினிதோ
நீயவர்க்கு வைகுந்த மென்றருளும் வான்"
—பெரிய திருவந்தாதி, பா. 53

(ஆ) "மிக்கசீர்த் தொண்டர்"—பெரிய திரு பா.

37 6-4-7. தீபிகை

38 ,, ,,

39 8-1-3. ,,

40 10-8, 36, 24, 12, 9, 6

41 6-4-9. தீபிகை

42 4-9-0 ,,

43 7-7-1, 7-7-5 தீபிகை.

44 4-7-5, 4-7-6, 36, தீபிகை

45 4-7-1

46 3-8-5, 4-7-3, 5 6-9, 6-9-8, 7-2-5, 7-1-10, 7-3-3, 10-5-6, 10-6-6

47 8-3-6, 36, தீபிகை

48 3-4-3, தீபிகை

49 6-4-4, தீபிகை

50 4-7-7, தீபிகை

51 8-5-5, ,,

52 10-8-9, ,,

53 10-8-10, ,,

54 8-1-10 ,,

55 6-5-4, தீபிகை

56 4-2-0, 4-6-11, 6-6-0, 6-7-4, 6-7-6, 9-7-9, 10-4-5

57 6-8-5, தீபிகை

58 6-1-3, 6-1-4, 6-1-8, 9-5-2

59 5-5-8, 5-5-9, 10-7-2

60 5-5-8. தீபிகை

61 9-4-9. ,,

62 "பக்தாம்ருதம் விச்வஜநாநு மோதநம் ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோபவாங்மயம் ஸஹஸ்ர சாகோபநிஷத் ஸமாகமம் நமாம்யஹம் த்ராவிட வேத ஸாகரம்" —

திருவாய்மொழித் தனியன்.

63 அ) கூரத்தாழ்வான்: 2-10-3, 3-8-0, 3-8-1, 10-3-5, 10-6-8.

ஆ) பட்டர் : 3-1-1, 7-5-6
இ) எம்பெருமானார் : 10-10-6
ஈ) வேதாந்த தேசிகர் : 5-1-7

64 10-5-9 தீபிகை

65 8-2-4 ,,

66 3-5-4 ,,

67 திருநெல்வேலி செக்குமாழிவழ

68 3-5-5 தீபிகை

69 3-4-1

70 3-10-7, தீபிகை

71 2-3-6, தீபிகை

72 1-1-9, 6-9-7, 9-1-8, 9-6-10, 10-4-6

73 7-8-4

74 1-5-4

75 8-9

76 8-10

77 முமுட்சுப்படி. நூ. 89

78 8-10 தீபிகை

79 8-3-2, தீபிகை

80 2-1-5, 9, 24, 36, தீபிகை

81 1-6-8, 1-6-9, 1-6-10, 3-6-1, 3-8-3, 4-3-7, 4-4-2, 4-9-10, 8-1-5, 8-3-2

82 "ஸ்ரீ சடகோபரென்றும் ஆசாரியரை வணங்கித் துதித்து" பூர்வாசாரியர்களால் ஆதரிக்கப்பட்டுப் பரம்பரையாக வந்த தமிழ்மறை முடியாம் திருவாய்மொழியின் பேருரையை (அடியேன்) கேட்டபடியே காட்டக் கடவேன்" — (சுலோகத்தின் கருத்து), திருவாய்மொழி, புதுப்பட்டு திருவேங்கடாசாரியரின் பதிப்பு, முதல் ஐந்து பத்து, குரோதன ஆண்டு, ப 7.

83 7-4-11, 6, 24, 36, தீபிகை

84 3-5-9, 6, 9, 12, 24, 36, தீபிகை

85 2-8-8, 2-9-6 3-2 3, 3-5-9, 9-4-11

86 7-9-3

87 தன்னை 2-2-3 36
படிகின்ற 2-2-3, 24

88 1-1-1 (நலமுடையவன்), 1-1-1 (அருளினன்), 1-211, 1-4-2, 1-4 4, 1-4-6, 1-8-1, 2-2-1, 3-1-10. 3-9-2, 4-3-1, 4-6-1, 5-3-2, 6-1-2, 6-7-4, 6-8-2, 6-810, 6-10-6, 7-5-3 8-1-1, 8-4-8, 9.1-10, 9-2-1, 9-4-1, 9-4-9, 9-7 10, 9-8-1, 10-5-5, 10-5-6, 10-6-1—தீபிகை (30) இடங்கள் பின்னிணைப்பு எண்.

89 31-10
90 3-1-10
91 7-6-3
92 7-5-2, தீபிகை
93 5-7-3, 36—அக்நிமீடே; அக்நிமீளே
94 5-7-3, தீபிகை
95 5-2-5, 36, தீபிகை
96 5-5-3, 36, தீபிகை
97 4-4-9, தீபிகை
98 1-9-5, தீபிகை
99 தொல், பொருள், மரபியல். நூ-855
100 4-3-1 தீபிகை
101 புறம். பா, 36
102 1-6-3, தீபிகை
103 1-6-3, 2-7-2
104 2-7-3, தீபிகை
105 திருக்குறள், 110
106 1-4-4, 1-7-1, 2-7-3, 5-3-4, 5-4-5, 6-1-5, 6-3-2, 6-5-5
107 6-3-2, 107 அ-கம்பராமாயணம், யுத்தகாண்டம், காப்புச் செய்யுள்
108 9-9-5. தீபிகை
109 திருவரங்கக் கலம்பகம், பா
110 மேலது. பா-1
111 3-6-9, தீபிகை
112 5-1-8, ,,
113 5-4-2, ,,
114 நாச்சியார் திருமொழி 8-3
115 9-3-4
116 3-5-5, தீபிகை
117 ஸ்ரீவசந பூஷணம், நூ-162
118 6-8-1, தீபிகை
119 ஸ்ரீவ-பூ, நூ 432
120 6-8-1, தீபிகை

121 ஸ்ரீவ-பூ, நூ-5

122 2-1-2, 2-3-5, 2-4-4, தீபிகை

123 4-2-11, தீபிகை

124 5-10-3, ,,

125 4-4-5, ,,

126 10-3-2, ,,

127 10-6-9, 36

128 2-5-9, 36

129 2-5-9, 24

130 2-5-9, தீபிகை

131 1-6-2, 24

132 3-3-3, தீபிகை

133 7-3-1, 36

134 4-4-8, தீபிகை

135 2-5-6, 36, தீபிகை

136 1-4-2, 1-6-2, 2-5-1, 2-10-1, 3-6-6, 4-10-5, 4-10-8, 5-5-4, 7-1-9, 7-2-4, 7-2-9, 7-6-7, 7-8-3, 8-4-9, 8-10-9, 9-6-5, 10-1-11, 10-6-5, (18 இடங்கள்)

137 2-10-1, 12, 24

138 7-8-3, 12, 24, தீபிகை

139 2-3-10, தீபிகை

140 4-2-5, ,,

141 4-6-7, ,,

142 நேர்முகப் பேட்டி, ஸ்ரீமான் உ வே. வித்வான் தி. அ. கிருஷ்ணமாசாரிய சுவாமி, நியாய சிரோமணி, காஞ்சி புரம், 10-6-91

143 3-7-11, தீபிகை

144 3-7 ,,

145 5-1-11, ,,

146 1-2-7, ,,

147 3-6-1, ,,

148 (அ) முமுட்சுப்படி, நூ. 1, 25, 37

(ஆ) ஸ்ரீவ பூ: முதல் பிரகரணம், 4, 8, 51, 93...
இரண்டாம் பிரகரணம் : 174, 176, 183, 218, 243...

மூன்றாம் பிரகரணம் : 257, 263, 266, 274, 294, 307, 314, 321, 349, 363, 365
நான்காம் பிரகரணம் : 383, 396, 398, 406, 428, 463

(இ) ஆசாரிய இருதயம் :
முதல் பிரகரணம்: 17, 53, 54, 55, 63, 70
2ஆம் பிரகரணம்: 101, 113, 128, 134, 138

149. 9-4-2, தீபிகை

150. 10-6-8, ,,

151 9-4-2, 9

152 1-1-4, 1-1-6, 1-1-9, 1-1-11, 1-3-6, 1-4-9, 1-5, 1-5-4, 1-6-2, 1-7, 1-7-6, 1-9, 1-9-1, 1-10-1, 2-1, 2-1-7, 2-3-9, 2-4-6, 2-8, 3-1, 3-3-5, 3-5-7, 3-5-11, 3-6-3, 3-7-2, 3-7-3, 3-9-3, 3-9-7, 4-1, 4-1-5, 4-5-2, 4-7-8, 4-7-9, 4-10-1, 5-1-1, 5-3-4, 8-3-3, 8-9-5, 8-9-10, 8-9-11, 9-1-1, 9-3, 9-3-3, 9-3-4, 9-4-2, 9-4-5, 9-4-8, 9-4-10, 9-5, 9-6, 9-8-1, 9-8-9, 9-10-1, 10-2-6, 10-4-1, 10-4-2, 10-4-3, 10-4-4, 10-4-6, 10-4-7, 10-4-8, 10-5-2, 10-5-7, 10-5-9, 10-6-8, 10-7-1, 10-7-3, 10-7-5, 10-7-6, 10-7-8, 10-9, 10-10-4, 10-10-4, 10-01-8 (74 இடங்கள்).

153 திருக்குறள் 1289.

154 நம்பிள்ளை உரைத்திறன், இரா. அரங்கராசன், 1985, ப 1399

155 திருக்கோவையார், அதிகார வரலாறு, பேராசிரியர் உரை.

156 ஸ்வாமி, ஸத்ஸம்பிரதாய பரித்ராணம், 1945, ப 1

157 6 7. தீபிகை.

158 6-8-6 தீபிகை

159 6-8-6, 36

160 1-5-3, தீபிகை

161 6-6-1, தீபிகை.

162 3-8-5.

163 1-9-1, 2-7-6, 3-8-5, 4-9-3, 9. 2.

164 கண்ணிநுண்சிறுத்தாம்பு தனியன்.

165 "சாமவேத சாரமான திருவாய்மொழி பல கிளைகளை யுடைத்தான உபநிஷத்துக்களுக்கெல்லாம் திரண்ட திரட்சியாயிருக்கும் இப்படிப்பட்ட பல பொருத்தங் களாலும், உள்ளாழமறியக் கூடாமையினாலும் கடல் என்று சொல்லத்தகுந்ததான தமிழ் வேதத்தை வணங்கு கிறேன்"

திருவாய் மொழித் தனியன் 1, தீபிகை. ப. 2

166 ஆ. இ., நூ. 54.

167 1. 2. 10, தீபிகை.

168 இக்கதை 1933ஆம் ஆண்டுப் பதிப்பில் மட்டுமே காணக்கிடைக்கிறது. மற்ற பதிப்புக்களிலில்லை.

169 9-1-4, தீபிகை.

170 1-5-5, தீபிகை.

171 6-10-5, தீபிகை.

172 7-1-6, தீபிகை.

173 6-5-3.

174 3-2-6.

175 3-2-6, 24.

176 3-2-6, 36.

177 3-2-6, 12.

178 3-2-6, தீபிகை.

179 ஆ. இ., நூ. 102.

180 3-2-11, 36.

181 3-2-11. 12

182 3-2-11, தீபிகை.

# இலக்கணப் புலமை

**6-0**

'திருவாய்மொழித் தீபிகையின் சிறப்பு' என்ற தலைப்பில் ஆழ்வார் திருவுள்ளக்கிடக்கை குறித்தும், அதனை உணர்த்திய தீபிகையுரையின் தனித்தன்மை குறித்தும் ஆயப்பட்டன. இலக்கிய நயம் அமைந்த தீபிகையுரையில் இலக்கணக் குறிப்புகளும் அடங்கப்பெற்றுத் தனித்தன்மை வாய்ந்துள்ளதால் அவை ஈண்டு ஆயப்பெறுகின்றன. தன்னிகரில்லாத் தமிழிலக்கியப் புலமையோடு சுவாமி தம் தீபிகையுரையில் பொருளைத் தெளிவு படுத்துவதற்கும் பொருளின் சிறப்பினை உணர்த்துவதற்கும் உறுதுணையாகவுள்ள இலக்கணக் குறிப்புகளையும் பல இடங்களில் காட்டியுள்ளார். இவை பெரும்பாலும் தொல்காப்பியம், நன்னூல் நூற்பாக்களுக்கேற்ப இடம் பெற்றனவாகும்.

ஆழ்வாருடைய அவா உந்தவுந்த எழுந்த திருவாய்மொழியானது 'கோல் விழுக்காட்டிலே' எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய இலக்கணக் கூறுகளோடு அமைந்தது 'அளவியன்ற அந்தாதி ஆயிரத்துள்'[1] என்றும், 'நிரைக்கொ ளந்தாதி யோராயிரத்துள்'[2] என்றும் ஆழ்வார் தாமே அருளியது மூலம் அறியாலாகும். இதற்கு உரையிட்ட வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் தம் உரையில் இவ்விலக்கணக் கூறுகளை நிறுவி, ஆங்காங்கே விளக்கமும் வழங்கியுள்ளார். சிறந்த தமிழ் வல்லுநராக அமைந்த நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை ஆகியோரின் உரைகள் ஆழ்வார் மனநிலைமையில் முழுநோக்குக் கொண்டதாக அமையவே அவற்றில் இவ்விலக்கண நயம் மிகுதியாகக் காணப் பெறவில்லை. வாதிகேசரி சீயரோ தம் உரையில் தமிழ்ப் புலமையைக்காட்டும் பாங்கில் இலக்கண அமைதிகளையும் அகப்பொருள் துறைகளையும் எடுத்துக்காட்டி யுள்ளனர். அவர்க்குப் பிறகு தீபிகையுரை அளித்த சுவாமி தம்முடைய இலக்கணப்புலமை தோற்ற, முன்னோர்கள் சொல்லாது விட்டதைக் காட்டும்பாங்கில் ஆழ்வார் பாடலில் அமைந்த இலக்கணக் கூறுகளையும்,

> ''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே''[3]

என்ற ஆரியமொழி திரிந்த வடசொற்களையும் உலகுக்கு உதவும் வண்ணம் எடுத்தியம்பியுள்ளார்;

5-1-0

இத்தகு இலக்கணப் புலமை போலி செய்யுள் விகாரம், சாரியை, அஃறிணைப் பெயர், வடசொல் வேற்றுமை, விளி வினைத்தொகை, அன்மொழித்தொகை, ஆகுபெயர். வினைப் பகுதியும் விகுதியும், வினைமுற்று, வினையெச்சம், எச்சத்திரிவு, பெயரெச்சம், இடைச்சொல், அசைநிலை, மங்கலவழக்கு, மரூஉ, வழுவமைதி, பொருள் நோக்கில், சொல்விரித்து உரை வழங்கல், அகப்பொருள் விளக்கம், உள்ளுறை (குறிப்புப்பொருள்). இசையெச்சம் என்னும் இருபத்துநான்கு வகைப்பாடுகளில் இங்கு ஆய்வுசெய்யப் பெறுகின்றது

5-1-1. போலி

ஒரு சொல்லிற்குரிய பொருளைத் தனித்தோ, தொடர்ந்தோ உருவாக்க வல்லது எதுவோ அதுவே எழுத்தாகும். எழுத்து மாறுவதால் சொற்பொருள் மாறிவிடும்

'அவன்' என்றதிலுள்ள னகர ஒற்றுக்கிடாக 'அவள்' என்று ளகர ஈறு பெய்வதால் பொருள் மாறுபடுவது தெரிகிறது. ஆனால் எழுத்து மாறியும் பொருள் மாறாத இடங்கள் சிலவுள. அவற்றையே போலி என்பர். இத்தகைய எழுத்து மாறியும் பொருள் மாறாத இடங்கள் சொல்லின் முதல், இடை, கடை ஆகிய மூவிடங்களிலும் வரும்.

இலக்கணக் கூறுகளைத் தன்னகத்தே கொண்ட ஆழ்வார் பாடலில் தமிழிலக்கணப் புலமை வாய்ந்த சுவாமி எண், முறை, பிறப்பு என்னும் எழுத்திலக்கணப் பகுதிக்கேற்ப மொழியிறுதிப் போலிகளை ஆங்காங்கே எடுத்துக்காட்டுவர். அவற்றில்

''மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே''[4]

என்பதனால்

| | | |
|---|---|---|
| மனன்- இனன் | — | மகர னகரப் போலி[5] |
| வரன்-வரம் | — | மகர னகரப் போலி[6] |
| வளன்-வளம் | — | மகர னகரப் போலி[7] |
| குளன்-குளம் | — | மகர னகரப் போலி[8] |
| தீர்த்தன்-தீர்த்தம் | — | மகர னகரப் போலி[9] |
| மதன்-மதம் | — | மகர னகரப் போலி[10] |

ஆகிய இடங்களில் பொருள் வேற்றுமையில்லாது மகரம் னகரத் தோடு ஒத்து வந்ததைச் சுவாமி எடுத்துக்காட்டுவர்

'புள்ளூர் கொடியானே' என்ற இடத்தில் 'ஊர்' என்பது ஊர்தி என்கிற சொல்லின் கடைக்குறைத்தலாகக் கிடக்கிறது என்பர்[11]

,தெருளே தரு' என்ற இடத்தில் 'தரு' என்பது 'தருக' என்ப தன் கடைக்குறையாகக் கொள்ளத்தகும் என்பர்.[12]

'ஒண்சங்கதை' என்றவிடத்திலும் 'சங்கதை' என்பது 'சங்கு கதை' எனக்காட்டி, 'சங்கு' என்பதன் கடைக்குறை இடம் பெற்றதைச் சுட்டுவர்[13]

'தெளிவு' என்ற இடத்தில் 'தெளி' என்று கடைக்குறையாக வந்ததையும் சுவாமி காட்டுவர்[14]

### 6-1-2. செய்யுள் விகாரம்

செய்யுள் யாப்பு அடிப்படையில் தளைக்கட்டோடு தொடை நயந்தோன்ற அமைவது. புலவர் பெருமக்கள் யாப்பு நோக்கியும், தொடை நலம் நோக்கியும் எழுத்துக்களை வலித்தும, மெலித்தும், நீட்டியும், குறுக்கியும், விரித்தும், தொகுத்தும் பாடுவர். முன்பு கூறிய காரணங்களால் செய்யுட் சொற்களும் முதல், இடை, கடை என்னுமிடங்களில் குறைந்து போதலும் உண்டு. இதனைச் செய்யுள் விகாரம் என்பர் இலக்கண நூலார்[15] இவ்விதியை மனத்திற் கொண்டு சுவாமி ஆங்காங்கே உரைவிளக்கம் செய்வர்.

நீந்தும் — நீத்தும் என்னும் வினைமுற்று நீந்தும் என்று மெலித்தல் விகாரம் பெற்றது[16]
நகந்தாய் – மெல்லொற்று வல்லொற்றாயிற்று.[17]

### தொகுத்தல் விகாரம்

காமுற்றாய் — காமம்+உற்றாய் — 'அம்' தொக்கது.[18]
நலார் — நல்லார் என்றது நலார் என்று தொக்கு நின்றது.[19]
அடங்கெழில் — அடங்க-எழில் — அகரம் தொக்கது.[20]
மூப்பிறப்பு — மூப்புப்பிறப்பு என்று இருக்க வேண்டுமிடத்து 'மூப்பிறப்பு' என்று தொக்கு வந்தது; உகரம் தொக்கது[21]

போகுறில் — போக+உறில் — அகரம் தொக்கது.[22]
கற்பகக் காவன — அன என்றது 'அன்ன' என்பதன் தொகுத்தல் விகாரம். னகரம் தொக்கது[23]

அசுர — 'அசுரனை' என்றது தொகுத்தல் விகாரம்.[24]
இன்ன — 'இன' என வந்தது. னகரம் தொக்கது.[25]
நின்றொரு — 'வயிற்றில் கொண்டு நின்றொரு மூவுலகும்' என்ற விடத்தில் 'நின்றொரு' என்பது 'நின்ற ஒரு' என்பதன் தொகுத்தல் விகாரமாய் 'அரசர்களையும் பிரமன் முதலானோர்களையும் தன்னுள்ளே கொண்டிருந்துள்ள மூவுலகையும்'' என்று பொருளுணர்த்துவதை எடுத்துக்காட்டுவர்.[26]

சம்மதித்தின்மொழியார் — சம்மதித்த இனிமொழியார் என்பதன் தொகுத்தல் விகாரம்.[27]

### 5-1-3. சாரியை

சாரியையாவது சொல் தொடர்ந்து செல்லும் நெறிக்கண் நின்று அதற்குப் பற்றுக்கோடாகச் சிறிது பொருள் பயந்தும் பயவாததுமாய் நிற்பது என்பர் அடியார்க்கு நல்லார்.[28] இவ் வகையில் சுவாமி ஆங்காங்கே சாரியை புணர்ந்த விதத்தைக் காட்டுவர்,

நச்சுமா மருந்தம் — 'அம்' என்பது சாரியை [29]
சாரியைப் புணர்ச்சி கூறும் தொல்காப்பிய நூற்பாவிற்கேற்ப 'அம்' சாரியை அமைந்தது காணலாம்.[30]

கைகளையார — கைகளார — ஐ சாரியை.[31]
கூடாமையை — கூடாமை — ஐ சாரியை.[32]
மாதவனை — மாதவன் — ஐ சாரியை.[33]

'வகையால் மனமொன்றி' என்ற பாடலில் 'மாதவனை' என்ற இடத்திலுள்ள ஐகாரத்தைச் சாரியையாகத் தள்ளி 'அமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற தகையானான மாதவன் சரணம்' என்றோ, 'மாதவனான தகையான் சரணம்' என்றோ' 'மாதவனான தகையான் சரணம்' என்றோ கொண்டு கூட்டி உரைப்பர்.

இவர் தம் இலக்கணக் குறிப்புகளைக் காணும்போது 'பதமுன் விகுதியும்...', 'அன் ஆன்... பொதுச்சாரியையே'[34] என்னும் நூற்பாக்களுள் அடங்கப்பெற்றது காணமுடிகிறது.

'என்னாருயிரைப் பருக' என்ற இடத்தில் ஐகாரத்தைத் தள்ளி 'என்னாருயிர்' என்றதாகக் கொண்டு 'என்னாருயிரானது

இறைவனை ஆரப் பருகும்படியாக ஆழ்வாருக்கு அதன் இனியனா யிருந்ததை முன்னோர் எடுத்துச் சொல்வர்.[35]

'வானவர் ஈசனை' என்னும் தொடரில் 'ஈசனை' என்றதில் ஐகாரத்தைச் சாரியையாக வைத்து முதல் வேற்றுமைப் பொரு ளாக வந்ததையும் சுவாமி காட்டுவர்.[36]

'ஒருத்தினில்' என்பதில் 'இன்' சாரியை இடம் பெற்றதைச் சுட்டுவர்.[37]

'மனக்கு' என்பது 'மனத்துக்கு' என்னும் பொருளில் 'அத்து'ச் சாரியைப் பெறாது வந்தது.[38]

## 5 2 அஃறிணை பெயர்

திராவிட மொழிகளில் தனித்தன்மைகளில் ஒன்று உயர் திணை அஃறிணைப் பகுப்பாகும். பொருண்மை அடிப்படையில் ஆண், பெண், பலர், ஒன்று, பல என்னும் ஐம்பால்களையும் கொண்டு அமைவது அவற்றினியல்பு. அம்மொழிகளுள் ஒன்றானாகிய தமிழுக்கு இது பெரிதும் பொருநதும். இத்தகு தமிழ் அஃறிணைப் பொருள்கள் எழுவாயாக அமையுபபோது ஒருமை பன்மை வேறுபாடின்றி அமைவது இயல்பு. இதனை ஒருமை பன்மை என்னும் கருத்து வினைமுற்றைக் கொண்டே முடிவு செய்யப் பெறும். இப்படி ஒருமை பன்மைக்குப் பொதுவாக அமைகின்ற அஃறிணைச் சொற்களைப் பால்பகா அஃறிணைச் சொற்கள என்பர். சுவாமியும் இதன் நுட்பம அறிந்து எழுதுகிறார்:

பெயர்ச்சொல் உறுப்புக்களுள இருதிணையின் பால் வருவன வற்றுள் அஃறிணைப் பெயரும் ஒன்று.

"பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய"[39] என்னும் நூற்பாவிற்கேற்ப 'நலமுடையவன்' என்றவிடத்தில் 'நலம' எனபது பாலபகா வஃறிணையாகக் கருதுவர்.[40] 'நலம்' என்பது பகாப்பதமாகும்.

## 5-3. வடசொல்

"பொதுவெழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானு மியைவன வடசொல்"[41]

என்ற நூற்பாவிற்கேற்ப ஆறு இடங்கள் பொது எழுத்தாலும் சிறப்பெழுத்தாலும் ஒப்பனவாகி வடசொல்லாக இயைந்ததைச் சுவாமி காட்டியுள்ளார்.

பொதுவெழுத்தால் இயைந்த வடசொல்:

கடி — கடி[42]
நேமி — நேமி[43]
ஏகம் — ஏகம்[44]
சாதனம் — சாதனம்[45]

ஈரெழுத்தால் அமைந்தன:

வேத: — வேதியா[46]

என்பது வடசொல் அடியாகப் பிறந்தது.

''இணைந்தியல் காலை...பிற''[47]

என்னும் நூற்பாவிற்கிணங்க 'விக்க்ருதம்' என்னும் வடசொல் இகரம் பெற்று 'விகிருதம்' என்றாயிற்று.[48]

இவ்வகையில் பத்துப் பத்துக்களிலுல் சுவாமி வடசொல், அதனால் திரிந்த சொல் ஆகியவற்றை 52 இடங்களில் எடுத்துக் காட்டியுள்ளார்.

## 5.4. வேற்றுமை

ஒரு பெயர்ச்சொல் வாக்கியத்தின் நிற்குமிடத்திற்கேற்பப் பொருண்மையில் ஓரளவு வேறுபடுகின்றது. 'மரம்' என்ற ஒரு பெயர்ச்சொல் 'மரம் நிற்கிறது' என்ற தொடரில் 'மரமானது' என்ற பொருண்மை பெறுகிறது. 'மரம் வெட்டினான்' என்ற தொடரில் 'மரத்தை' என்னும் செயப்படு பொருண்மை பெறுகிறது. இப்படி ஒரு பெயர்ச் சொல் அடிப்படைப் பொருண்மையில் மாறாமல் எழுவாய்ப் பொருளிலும் செயப்படு பொருளிலும் கருவிப் பொருளிலும் ஆகப் பலவேறு பொருண்மைக்கு உரியதாக வேறுபடுத்துவது வேற்றுமையாகும். இந்த வேறுபாட்டை ஐ; ஆல் முதலான உருபுகள் வெளிப்படையாகக் காட்டும். உருபுகள் வெளிப்படையாக இருப்பின் 'விரி' என்றும், மறைந்திருப்பின் 'தொகை' என்றும் கூறுவர்.

### 5-4-1. முதல்வேற்றுமை

''அவற்றுள்
எழுவா யுருபு திரிவில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லாதன்பய னிலையே''[49]

என்னும் நூற்பாவிற்கேற்ப 'அரசர்கள் தாம் தொழ' என்ற இடத்தில் 'தாம்' என்பதுமுதல்வேற்றுமைச்சொல்லுருபாகக் காட்டுவர் சுவாமி.[50] தாம் என்பதும் சொல்லுருபுடன் வந்தது.

### 5-4-2. இரண்டாம் வேற்றுமை

''இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்கலழித்த லடைத னீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்''[51]

என்ற நூற்பாவில் 'ஐ' என்னும் இரண்டனுருபுக்கு 'நீத்தல்' என்னும் பொருளுக்கேற்பப் 'பயனல்ல' என்னும் சொல்லில் அல்ல (அல்லை)என்னும் விகுதி நீக்கப்படும் பொருளைக் காட்டுவதால் இரண்டாம் வேற்றுமைத் தொகை என்று சொன்னது அறிய முடிகிறது [52]

### 5-4-3 ஐந்தாம் வேற்றுமை

நன்னூல் காட்டும் ஐந்தாம் வேற்றுமை உருபான 'இல்லும் இன்னும்'[53] எல்லைப் பொருள் கொள்வன என்பதற்கேற்ப 'நிலத்திலும்' என்பது அமைந்ததைக் காட்டுவர். இவ்விடத்தில் 'நிலத்திலும்' என்பது பரமபதத்தைக் காட்டிலும் பசுக்களின் கூட்டங்களை மேய்ப்பது பெருமையாதலால் இது எல்லைப் பொருளாக வந்தது காணமுடிகிறது.[54]

### 5-4-4 ஆறாம் வேற்றுமை

''ஆற னொருமைக் கதுவும்மா துவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்பு''[55]

என்னும் நூற்பாவில் வருமொழியின் பன்மைப் பொருளுக்கு அகரமும் ஆறாம் வேற்றுமை உருபாகச் சொல்லுவர்.[56] இதனைச் சுட்டும் வகையில் 'திரிவான தாளிணை'என்றவிடத்தில் 'திரிவான' என்பதில் ஆறாம் வேற்றுமை அகர உருபு வந்து 'திரிவானுடையவான தாளிணைகள் (திருவடிகள்) என்ற பொருள் அமைந்ததைக் காட்டுவர். மேலும் 'கலியன தமிழிவை'[57] என்றவிடத்தில் ஆறாம் வேற்றுமை உருபு வந்ததை எடுத்துக்காட்டுவர் சுவாமி.

### 5-4-5. ஏழாம் வேற்றுமை

இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளில் நன்னூல் நூற்பாவிற்கேற்ப 'அகம்', இல்' என்ற உருபுகள் ஐந்து இடங்களில் வந்ததை எடுத்துக்காட்டுவர் சுவாமி [58]

| | | |
|---|---|---|
| மனைமனம் | — | மனசிலே[59] |
| நிலத்திலும் | — | பரமபதத்தில்[60] |
| ஒருத்தினில் | — | ஒருமைப்பாட்டிலே[61] |

### 5-4-6. விளி வேற்றுமை

எட்டாவது வேற்றுமையாக விளி வேற்றுமை சொல்லப்படுகிறது. இவ்வேற்றுமையில் விளியேற்ற சில பெயர்ச் சொற்களைச் சுவாமி தீபிகையுரையில் குறிப்பிட்டுச் சொல்கிறார். அவை 'எட்டனுருபே எய்து'[62] என்னும் நூற்பாவிற்கேற்பவும், 'ரவ்வீற்றுயர்'[63] என்னும் நூற்பாவிற்கேற்பவும், 'ஒருசார் ளவ்வீற்றுயர்'[64] என்னும் நூற்பாவிற்கேற்பவும், 'அண்மையினியல்'[65] என்னும் நூற்பாவிற்கேற்பவும் அமைந்துள.

அரியேறு — அரியேறே — ஈறு திரிதல்[66]
ஊரன் — ஊரா — ஈறுகுன்றி ஈற்றயல் திரிதல்[67]
நெடியான் — நெடியாய் — இறுதி யவ்வாயிற்று[68]
வாமநன் — வாமநனே — ஈறு திரிதல்[69]
திருச்சக்கரத்தான் — திருச்சக்கரத்தாய் — இறுதி யவ்வாயிற்று[70]
கண் — கண்ணே — —
அரியாயவம்மான் — அரியாயவம்மானே — ஈறுதிரிதல்[72]
கருத்தன் — கருத்தே — ஈறுகெட்டு ஈற்றயல் ஏகாரமாயிற்று[73]
ஒளிமணிவண்ணன் — ஒளிமணிவண்ணரே — ஈறுதிரிதல்[74]
மடவார் — மடவீர் — ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று[75]
மாவலி — அண்மைவிளி[76]
கறந்தபால் — அண்மைவிளி[77]
வாடை — வாடாய் — ஈறுதிரிந்து யவ்வொற்று மிகுத்தது[78]
வலவன் — வலவா — ஈறுகெட்டு அயல் நீண்டது[79]
புல்கு — ஏவல் ஒருமை வினைமுற்றுக்குச் சேத விளியாக வந்தது[80]

### 5-5. வினைத்தொகை

தொக்கு வருவது தொகை உருபுகள் தொக்கும் வரலாம், பொருள் தொக்கும் வரலாம். இத்தகு தொகைகளை வேற்றுமைத் தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என இலக்கண நூலார் எண்ணி உரைப்பர்.

இவற்றுள் வினைத்தொகை, அன்மொழித்தொகை என்பன வற்றைத் தம் உரையில் எடுத்துக்காட்டுகிறார் சுவாமி, வினைக்கு அடிப்படையான காலம் மறைந்து வருவதனாலே,

"காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை"[81]
என்று கூறப்பட்டது.

| | | |
|---|---|---|
| திரிபுரம்[82] | — | திரிந்து கொண்டிருந்த பட்டணங்கள் எனப்பொருள் திரிதலால் வினைத் தொகை. |
| மருந்தம்[83] | — | விரும்பப்படுவதான மருந்து. |
| ஊர்சகடம்[84] | — | ஊர்கின்ற சகடம் |

### 5-5-1 அன்மொழித் தொகை

இருசொற்கள் இணைந்த தொடர்பால் இருசொற்களும் தம் பொருள் அல்லாத வேறொரு பொருண்மையை அத்தொடர் தரு தலால் அப்பொருண்மை அத்தொடரில் தொக்கிருத்தலால் அன் மொழித்தொகை எனப்பட்டது.

"ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி"[85] என்னும் நூற்பாவிற்கேற்ப 'வம்பவிழ் கோதை'[86] என்ற சொல் பண்புத் தொகையாய் இரண்டாம் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன் மொழித்தொகையாகும்.

கோதை என்பது பூமாலைக்குப் பெயர். அதை அணிந்த மயிர் முடிக்கு இலக்கணையாகும் எனவே 'பரிமளம் நிறைந்த அளகபாரத்தையுடைய நப்பின்னை' என்ற பொருள்படும்.

இவ்வாறே 'வாணுதல்'[87] என்றவிடத்தில் 'ஒளிபொருந்திய நெற்றியையுடையவள்' என்ற பொருள் பண்புத்தொகையாய் இரண்டாம் வேற்றுமைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை யாம்.

## 5-6 ஆகுபெயர்

ஒரு மொழியின் இயற்பொருள் அது முடிக்கலரும் மொழியின் பொருளோடு பொருத்தமின்றிப் போகுமிடத்து அம்மொழியில் ஆக்கப்பொருள் கொள்ளப் பெறும். இவ்வாறு ஆக்கப்பொருள் கொள்ளும் மொழியே ஆகுபெயராகும்.[88]

இவ்வடிப்படையில் 'பொருள் முதலாறோடு'[89] என்ற நூற்பாவிற்கேற்பக் 'கருமாணிக்கம்'[90] என்ற சொல் உவமையாகு பெயராக வந்ததென்பர் சுவாமி. அதாவது 'கருமாணிக்கம்' என்பதற்கு நீலமணி என்பது பொருள். இது கருமாணிக்கம் போன்ற திருவேங்கடத்தில் நிற்கும் வானவரீசனுக்கு ஆகிவந்தமையால் உவமையாகு பெயராகும்.

பாவை — பசுமைக்குப் பெயராய்ப் பெண்பிள்ளையை உணர்த்துவதனால் உவமையாகு பெயர்[91]

ஒண்தாமரை — திருவடியைச் சொல்லாது தாமரை என்றது உவமையாகு பெயர்[92]

### 6-7. வினைமுற்று

எழுவாய் ஒன்றன் நிகழ்ச்சியை முற்றுவிப்பதே முற்றாகும். இந்த முற்று பொதுவாக மூன்று காலங்களுள் ஏதேனும் ஒன்றைச் சுட்டி நிற்கும். தமிழைப் பொறுத்தவரை காலத்தைக் குறிப்பாகச் சுட்டும் குறிப்பு வினைமுற்றும் உண்டு. இலக்கண நூலார் கருத்தா, கருவி, நிகழ்இடம், நிகழ்ச்சி, காலம், செயப்படு பொருள் ஆகிய ஆறனையும் வினைமுற்று தரும் என்று குறிப்பிடுவர்.[93]

> ''ஐயா யிகர வீற்ற மூன்றும்
> ஏவலின் வரூஉ மெல்லா வீற்றவு
> முப்பா லொருமை முன்னிலை மொழியே''[94]

என்ற முன்னிலை ஒருமை வினைமுற்று நூற்பாவிற்கேற்பத் 'துஞ்சாய்'[95] என்பதற்குக் 'கண் உறங்குகின்றிலை' என்னும் கொண்டு எதிர்மறை வினைமுற்றாகக் காட்டுவர் சுவாமி.

கொடீர்—எதிர்மறை முன்னிலைப் பன்மை வினைமுற்று[96] தன்னொடுங் கூட்டும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மை எதிர் மறை வினைமுற்று நூற்பாவிற்கேற்ப[97] 'அம்' விகுதி பெற்ற 'செப்பம்' என்னும் சொல் தன்மைப் பன்மை எதிர்மறை வினை முற்றாகச் 'செப்போம்' என்ற பொருளில் வந்ததைக் காட்டுவர்[98]

எதிர்மறை ஏவல் பன்மை வினைமுற்றாகக் 'கூழேன்மின்'[99] என்ற சொல் அமைந்ததைக் காட்டுவர் சுவாமி.

'ஆடும்'[100] என்பதை ஏவல் பன்மை வினைமுற்றாகக் கொண்டு 'நீங்கள் தொழுதாடுங்கோள்' என்றதாகவும் உரைக்க

லாம் என்பர் இவ்விடத்தில் 'ஆடும்' என்பது 'செய்யும்' என்னும் முற்று.

**''வெற்பென்று வேங்கடம் பாடும்—வியன்துழாய்**
**கற்பென்று ஆடும்''** (4-6-10)

என்னும் இவ்விடத்தில் முன்னிலைப் பொருள் கொண்டது.

**''பல்லோர் படர்க்கை முன்னிலை**
**தன்மையில் செல்லாதாகும்**
**செய்யுமென் முற்றே''**[101]

என்ற சிறப்பு விதிக்கு மாறானது என்பர். இதனைப் 'புதியன புகுதலாக'க் கொள்ள வேண்டும்.[102]

**''அ ஆ விற்ற பலவின்...''**[103]

என்ற பலவின்பால் படர்க்கை வினைமுற்று 'தவிர்ந்த'[104] என்பதில் 'தவிர்ந்த' என்னும் பொருளதான வினைமுற்றாகும். இது 'அன்' சாரியை பெறாது, 'அ' விகுதி பெற்ற இறந்தகால வினைமுற்று.

'தெருளே தரு' என்றவிடத்தில் 'தந்தருள வேணும்'[105] என்று வினைமுற்றாகக் கொண்டு உரைத்ததாகக் கூறுவர் சுவாமி

**''கயவொடு ரவ்வொடு...''**[106]

என்னும் வியங்கோள் வினைமுற்று நூற்பாவிற்கேற்பத் 'தரு' என்பது தருக என்பதன் கடைக்குறைத்தலாய் வேண்டிக்கோடற் பொருளில் வந்தது எனலாம்.

இவ்வாறே 'எய்தற்க'[107] என்றவிடத்தில் எதிர்மறை வியங்கோள் வினைமுற்றாக வந்தது என்பர். இது விதிர்தல் பொருளில் வந்தது எனலாம்.

''இர் ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்

பன்மை முன்னிலை துன்னவற் றேவல்'[108] என்னும் நூற்பாவிற்கிணங்க 'ஈமின்' 'கோமின்' என்பன[109] 'மின்' விகுதி பெற்ற முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்றாகும். இவற்றில் ஈ' என்பதும், 'கோ' என்பதும் வினைப்பகுதிகள்.

**''குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ**
**டல்லன் னென்னே னாகு மீற்ற**
**இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை''**[110]

என்னும் நூற்பாவில் 'கு' என்னும் குற்றியலுகரப் விகுதிக்கேற்ப 'உறுகோ'[111] என்ற சொல்லில் 'உறுகு' என்பது 'உறு' என்னும் பகுதியின் அடியிற் பிறந்த தன்மை ஒருமை எதிர்கால வினை முற்று என்பர்

இவ்வாறே 'என்கோ'[112] என்னுமிடத்தில் என்கு—ஓ எனப் பிரித்து 'என்கு' என்பது 'என்' என்னும் பகுதியின் அடியாகப் பிறந்ததன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று என்பர். மேலும் இதில் 'கு' விகுதி காலத்தையும் இடத்தையும் காட்டும் என்பதை நன்னூல் நூற்பாவைக் காட்டியுரைப்பர்.[113]

## 5-8. வினையெச்சம்

''செய்து செய்பு...முறைதரும்'[114]

என்ற வினையெச்ச வாய்ப்பாடுகளுக்கேற்பத் 'தொழுதெழ' என்பது இறந்தது தழுவிய வினையெச்சமாகக் கொண்டு 'வணங்கி' என்று அமைந்ததை எடுத்துக் காட்டுவர் சுவாமி.[115] இரண்டாவது பொருளில் எதிர்காலத்தில் காரியப் பொருட்டாகச் 'செய' என்ற வாய்ப்பாட்டிற்கேற்ப எதிர்காலம் தழுவிய வினையெச்சமாகக் கொண்டு 'தொழுதெழும்படியாக' என்ற பொருள் உரைத்ததை எடுத்துக் காட்டுவர்

இவ்வாறே 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகத் 'தளரா'[116] என்பதற்குத் 'தளர்ந்து' என்ற பொருள் அமைந்ததை எடுத்துக் காட்டுவர்.

மேலும் 'சீறா' என்றவிடத்திலும் செய்யா என்னும் வாய் பாட்டு இறந்தகால வினையெச்சமாகச் 'சீறி' என்ற பொருள் வந்ததைக் காட்டுவர்.[117]

'தொடர' என்ற விடத்தில் செய என்னும் வினையெச்சத் திற்கு ஏற்பத் 'தொடரும்படியாக' என்னும் பொருளில் வந்துள் ளதை எடுத்துக் காட்டுவர்[118]

இறந்தகால வினையெச்சத்திற்கேற்ப 'இ' விகுதி பெற்ற 'நாடி' என்ற சொல் அமைந்ததைக் காட்டுவர்.[119]

வினையெச்ச வாய்பாட்டிற்கேற்ப எதிர்கால வினையெச்ச விகுதியைக் காட்டும் 'காண்பான்'[120] என்பதில் 'பான்' என்னும் விகுதி வந்ததைக் காட்டுவர். காண்—காண என்றபடி.

> ''அவற்றுள்
> முதனிலை யொன்று மீற்றின் மூன்றும்
> வினைமுதற் கொள்ளும் பிறவுமேற் குப்பிற''[121]

என்னும் நூற்பாவிற்கேற்பச் ,சம்மதித்தின்மொழியார்''[122] என்பதில் 'சம்மதித்து' என்ற செய்து என்னும் வாய்பாட்டு வினையெச்சம் வினை முதல் கொண்டு முடிந்தது என்பர்.

### 5·9 எச்சத்திரிபு

வினையெச்ச வாய்பாடுகள் வேறு வாய்பாடுகளாக மாறி வரினும் அவற்றின் பொருள்கள் வேறுபடா[123] இதனை எச்சத் திரிபு என்பர்.

'நிலைபெற்று'[124] என்றவிடத்து 'பெற' என்ற செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் 'பெற்று' எனத் திரிந்தது. பெற்று என்பதற்குப் பெற என்பதோ பொருளகையால் பொருள் திரியா தாயிற்று. இதனையே சுவாமி 'எச்சத்திரிபு' என்பர்.

'ஆட்செய்து நோய்தீர்ந்த' என்றவிடத்திலும் 'ஆட்செய்து' என்பதை மேற்சொன்ன நூற்பாவிற்கேற்ப எச்சத்திரிபாகக் கொண்டு 'ஆட்செய்ய' என்னும் பொருள் கொள்ளத் தகும் என்பர்.[125]

இவ்வாறே 'வணங்கி',[126] 'நிலனாகி'[127] என்னும் இடங்களில் எச்சத் திரிபுகள் வந்ததைக் காட்டுவர் சுவாமி.

### 5·10. பெயரெச்சம்

''செய்த செய்கின்ற...... பெயரெச்சம்மே''[128] என்னும் நூற் பாவிற்கேற்ப அறுவகைப் பொருட் பெயர்களும் ஒழிய நிற்பன தெரிநிலைப் பெயரெச்சமும குறிப்புப் பெயரெச்சமும் ஆகும இவற்றில் எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சமாக 'வீடில போக மெய்தி'[129] என்றவிடத்தைச் சுவாமி எடுத்துக்காட்டுவர். இதில் 'இல' என்பது இன்மையின் அடியாகப் பிறந்த எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம் என்பர்.

### 5·11. இடைச்சொல்

இடைச்சொல்லானது வேற்றுமை, வினை, சாரியை, உவம உருபுகள், தத்தமக்குரிய பொருளை உணர்த்தி வருவன வேறு பொருளின்றிச் செய்யுளிசை நிறைதநலே பொருளாக வருவன, அசைநிலையே பொருளாக நிற்பன, குறிப்பின் பொருளாக வருவன என எட்டுத் தன்மையன வாகும்.[130]

இவற்றில் இடைச்சொல் உணர்த்தும் பொருளாகத் தீபிகை யுரையில் சுவாமி காட்டியதைக் காணலாம்.

5-11-1. **ஏகார இடைச்சொல்**

தீபிகை உரையில் எதிர்மறை, அசைநிலை, பிரிநிலை என்ற வகையில் ஏகார இடைச்சொல்லும், ஐயம், இரக்கம் என்ற பொருளில் ஓகார இடைச்சொல்லும் வந்துள்ளமையைச் சுவாமி காட்டுவர்.

5-11 2 **ஏகார எதிர்மறை**

மேவுதுமே[131]
நம்முடையமே[132]

5-11-3. **ஏகார அசைநிலை**

மாயனே[133] — ஏகாரம் விளியுருபன்று; அசைநிலை.

5-11-4. **ஏகாரம் பிரிநிலை**

ஒளிமணி வண்ணனே[134]

5-11-5. **ஓகார இடைச்சொல்**

5-11-5-1. **ஐயப்பொருளில் ஓகாரம்**

"புகழுநல் ஒருவனென்கோ"[135] என்கிற பதிகத்தில் 'என்கோ' என்ற சொல் ஐம்பது இடங்களில் வந்துள்ளது. எல்லாவிடங்களிலும் ஐயப்பொருளே கொண்டிருக்கிலது.

5-11-5-2. **இரக்கப் பொருளில் ஓகாரம்**

உறுகோ[136]—உறுகு—ஓ என்று பிரித்து ஓகாரம் இரக்கப் பொருளில் வந்தது என்பர்.

5-12 **உம்மை இடைச்சொல்**

**"எதிர்மறை சிறப்பைய மெச்சமுற் றளவை**
**தெரிநிலை யாக்கமோ டும்மையெட்டே"**[137]

என்னும் நூற்பாவிற்கேற்ப முற்றுப் பொருளிலும் சிறப்புப் பொருளிலும் வந்ததைத் தீபிகை உரையில் சுவாமி காட்டுவர்.

யாவையும் — உம் } முற்றுப் பெருமை[138]
யவரும் — உம் }
உன்னையும் — உம் — சிறப்பும்மை[139]

எண்ணிடைச் சொற்களுக்குக் காட்டும் இலக்கண நூற்பாவிற்கேற்ப[140] 'ஒடு' என்னும் எண்ணும்மை ஓரிடத்தில் வந்ததைக் காட்டுவர் சுவாமி.

"புனலொடு மலர்கள்"[141]—ஒடு உம்மைப் பொருளது. 'புனலையும் மலர்களையும்' என்று தொகையாகக் கருதத்தக்கது.

### 5-13. அசைநிலை

வேறு பொருளின்றி ஓசை நிறைத்தற்பொருட்டு நிற்கும் இடைச்சொல் அசைநிலையாகும்.[142]

திருவாய்மொழியில் பொருளற்ற அசைநிலைச் சொற்களாக வந்த இடங்களை எடுத்துக்காட்டுவர் சுவாமி.

"ஆவிசேர் உயிரினுள்ளால்[143]
மாலுமால், கூவுமால்,
மடங்குமால், நம்புமால்[144]
உள்ளால்[145]

"மற்றென் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பாலி ரெண்டென மொழிமனார் புலவர்"[146]

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கேற்ப, "வைகுந்த மாநகர் மற்றது" என்ற விடத்தில் 'மற்று' என்பது அசைச்சொல்லாக அமைந்ததைக் காட்டுவர்.

### 5-14. மங்கல வழக்கு

மொழி மனிதனுக்கு வாய்த்த தலையாய கருவி அதன் வழியே தான் அவன் சிந்தித்துக் கருத்துக்களை வெளியிட்டுச் சிறந்து வளர்ந்துள்ளான் மனிதனுடைய இயல்புகளையெல்லாம் மொழி காட்டவல்லது. மொழி மேலும் ஒரு சமுதாயக் கருவி. இந்தக் காரணங்களால் மொழியிலமைந்த சொற்கள் வழக்கின் காரணமாக உரியதல்லாத வேறு பொருண்மையைச் சுட்டுவதாக அமைகின்றன.

மங்கலம் என்பது மங்கல மல்லாததை மங்கலமாகச் சொல்வது. அதாவது பொருளை அறிதற்கு அமைந்து கிடந்த இச்சொல்லால் சொல்வது தகுதியன்று; வேறொரு சொல்லால் சொல்வது தகுதி என்று கூறுதலால் "தகுதியோ டாளும் வழக்கியல்"[147] என்னுங் நூற்பாவின்படியே தகுதி வழக்காகும். இத்தகு தகுதி வழக்கிலக்கணத்தில் மங்கல வழக்காகத் தீபிகை உரையில் இரண்டு இடங்களைக் காட்டுவர் சுவாமி.

"எருதேழ் தழீஇ"[148] என்னுமிடத்தில் எருதுகளை முடித்தவர் என்னவேண்டும்; ஈண்டுத் தழுவினர்' என்பது மங்கல வழக்கு

"அன்றுருமேழும் தழுவி நீகொண்ட"[149] என்றவிடத்தில் 'தழுவி' என்றது 'வதைசெய்து' என்ற கருத்தைக் காட்டி மங்கல வழக்காகக் கூறுவர் சுவாமி.

**மரூஉ**

மரூஉ என்பது தொன்றுதொட்டு வருதலின்றி இடையிலே சில எழுத்துக் கெட்டும், சில எழுத்துத் திரிந்தும், சில எழுத்துத் தோன்றியும் இலக்கணத்தில் சிதைந்தது தானே மருவி வழங்குவது.[150]

வாழ்-நன் என்பது வாணன் ஆயிற்று.[151]

## 5-15. வழுவமைதி

அச்சம், வியப்பு, விரைவு முதலிய காரணங்களால் வழக்கி லுள்ள சொற்கள் வழுவும்போது அவற்றிற்குரிய பொருள் தந்து அமைத்துக்கோடல் வழுவமைதியாகும்.

'தளர்ந்தும் முறிந்தும்' என்னும் பாசுரத்தில் சகடாசுரன் வதம் வருகிறது "சகட அசுரன் என்னவேண்டுமிடத்து அசுரர் என்று பன்மையாகச் சொன்னது ஒருவனே பலராகத் தோற்றின பயங்கரத் தன்மையாலே" என்பர் சுவாமி. இஃது அச்சம் பற்றி வந்த பால்வழுவமைதி[152]

**விகுதிகள்**

எழுத்திலக்கணத்துக்கு இன்றியமையாத உறுப்பான பகுதிகள் பத்தினுள் விகுதியைக் காட்டும் 37 எழுத்துக்களைத் தெரிநிலை வினைமுற்றுப் பகுபதங்களின் விகுதிகளாகவும், பெயர்ப் பகுபதங் களில் சில விகுதிகளாகவும் அமைந்துள்ளதை நன்னூல் நூற்பா உணர்த்தும்.[153]

இவற்றைப் பின்பற்றிக் 'கொல்லைமை' என்ற விடத்தில் 'கொல்லை' என்னும் சொல்லின் மீது மை' விகுதி ஏறிக்கிடந்து வரம்புகடந்த செயல் என்ற பொருளைத் தருவதாகக் காட்டுவர்.[154] இது தொழிற்பெயர் விகுதியாகும்

## 5-16 பொருள்நோக்கில் சொற்பிரித்து உரைவழங்கல்

உரையாசிரியர்களுள் முன்னோர்களெல்லாம் பெரும்பாலும் பொழிப்புரையாகவும், விரிவுரையாகவுமே திருவாய்மொழிக்கு உரை வகுத்துள்ளனர். சுவாமி முன்னோர் செய்த உரைப் பணியைத் தழுவிக் கொண்டதோடன்றிச் சொல் சொல்லாகப்

பிரித்தும் பொருள் தந்துள்ளது இவர்தம் உரையின் தனிச்சிறப்பு களில் ஒன்றாகும். இவ்வாறு சொல்சொல்லாகப் பொருள்தர முனைந்ததனால் பொருள் நோக்கிற்கேற்பத் தொடர்களை நிலைமொழி, வருமொழி எனப்பிரிக்க நேருகிறது. சிற்சிலபோது ஒரே தொடர் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்தரும் போக்கில் அமைந்திருப்பின் அதற்கு ஏற்றவாறு ஒன்றுக்கு மேற்பட்ட வகை களிலே தொடர்களைப் பிரித்துக் காட்டுகிறார் சுவாமி. (பின்னிணைப்பு எண் )

வண்ண மருள்[155]

அ) முதற்பொருள்: வடிவானது கண்டார் நெஞ்சை இருளப் பண்ணுவதாயிருக்கை; வண்ணம் மருள்.

ஆ) இரண்டாவது பொருள்: அருள்தானே வடிவெடுத்த என்றபடி. அருளே திருவேங்கடமுடையானாக மூர்த்திகரித்த வண்ணம் அருள்—அருள் வண்ணம்.

## 5-17. அகப்பொருள் விளக்கம்

பண்டைத் தமிழிலக்கியங்களின் தலையாய இருவகைப்பாடு களாகிய அகமும் (காதலும்) புறமும் (வீரமும்) பக்தி இயக்கக் காலத்தில் பக்தி வைராக்யங்களாகச் சமயப் பாடல்களில் இடம் பெற்றன.

அகப்பொருள் காதல் துறைகள் பல மதுர பக்தித் துறை களாக மருவி வந்தன நம்மாழ்வார் பாசுரங்களில் சங்கத்தமிழ்க் காதல் துறைகள் நாயக—நாயகி பாவத்தில் துறைபல கொண்டு பாசுரங்களாக அமைந்தன. உரையாசிரியர்களனைவரும் இந்தப் பக்திப் பாங்கைப் புலப்படுத்தி வந்துள்ளனர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இத்தகு பக்திப் பாங்கில் தோய்ந்த ஆழ்வார் தம் மனநிலையைத் தாம் அனுபவித்து அனைவரும் அனுபவிக் குமாறு ஆசாரிய இருதயம் என்னும் நூலை இயற்றியருளி யுள்ளார். தலைமகள், தாய், தோழி பாசுரங்களாக ஆழ்வார் தம் 27 அகப்பொருள் பதிகங்களை வகை செய்து கொண்டு ஆழ்வார் உள்ளக்கிடக்கையை நமக்கு உணர்த்துகின்றார். என்றாலும் அகத்திணை இலக்கண மரபுக்கேற்ப ஆங்காங்கு இன்ன இன்ன துறையில் இப்பாசுரம் அமைந்து செல்கிறது என்ற இலக்கண குறிப்புக்கள் பன்னீராயிரப்படி உரையாசிரியர் வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் மட்டுமே குறிப்பிடுகிறார்.

ஆசாரிய இருதயத்தின் உரையாசிரியராகிய மணவாள மாமுனிகளைப் பெரிதும் தழுவி உரிய உள்ளுறை பொருளை ஆங்காங்கே உணர்த்தி உரை செய்கின்றபோது இரண்டிடங்களை மட்டும் சுவாமி துறைகளை விளக்கிச் செல்வது குறிப்பிடத் தக்கது.[156]

அகப்பொருளுக்குச் சுவாமி தரும் விளக்கம் அவர் தம் பொருளிலக்கணப் புலமையை உணர்த்துகிறது. இதனைக் கீழ்வரும் பகுதியினால் உணரலாம்.

## திருவாய்மொழி—முதற்பத்து
## நான்காந் திருவாய்மொழி—
## அஞ்சிறைய மடநாராய்

''அவதாரிகை: எம்பெருமானை அநுபவித்தல் பலவகைப் பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லி யநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லியநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்ய தேசங்களின் வளங்களைப் பேசியநுபவித்தல், அங்கே அபிமான முள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப் பேசியநுபவித்தல் என்றிப்படி பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகை களில் பரமவிலக்ஷணமான மற்றொரு வகையுமுண்டு; அதாவது— ஆழ்வார் தாமான தன்மையை விட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக் கொண்டு வேற்றுவாயாலே பேசி யநுபவித்தல். இப்படியநுபவிக்குந் திறத்தில், தாய் பாசுரம், தோழி பாசுரம், மகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வாருக்குப் பராங்குசர் என்ற ஆண்மைப்பெயர் நீங்கி, 'பராங்குச நாயகி' என்று பெண்மைப் பெயர் வழங்கப் பட்டு வரும். தாய் சொல்வது போலவும் தலைமகள் சொல்வது போலவும் தோழி சொல்வது போலவும் பாசுரங்கள் வெளி வந்தாலும் பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகினாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே, இம்மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் 'அமர்பொழில் வளங்குருகூர்ச் சடகோபன் குற்றேவல்கள்'' என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக்கொள்ளுதல் எதுக்காகவென்னில்; ஆழ்வார் தாமாக

ஏறிட்டுக் கொள்ளுகிறாரல்லர்; அந்த அவஸ்தைதானே பரவச மாக வந்து சேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்கு முன் உலகமடங்கப் பெண்தன்மையதாயிருக்கை யாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமே யின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கையாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீபாவனை வந்தேறியன்று என்றே கொள்ளலாம். தண்ட காரண்யவாஸிகளான முனிவர் இராமபிரானது ஸௌந்தர்யத் திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்ற ஐதிஹ்யமுமுண்டு. ஆழ்வார்கள் அப்படியின்றியே அப்போதே பெண்மையை யடைந்து புருஷோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர்.

ஆண் பெண் என்ற வ்யவஹாரங்கள் சிற்றின்ப நுகர்ச்சிக் கன்றோ ஏற்பட்டவை; பேரின்ப வநுபவத்திலே ஊன்றின ஆழ்வார்கள் பெண்மை எய்துவதாகவும், கொங்கை முதலிய சொற்களையிட்டுப் பாசுரங் கூறுவதாகவும், நிகழ்கிறவிது என்னோ? எனின்; விஷயாந்தர காமம் என்றும் பகவத்விஷய காமம் என்றும் காமம் இருவகைப்படும்; வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பக்தியே ஆழ்வார்களுக்கு ச்ருங்கார முறைமையில் பரிணமித்து நிற்கும். சிற்றின்ப வநுபவத்திற்குக் கொங்கை முதலியன ஸாதனமாயிருப்பதுபோல, பகவத் விஷயாநுபவத் திற்குப் பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகள் இன்றியமையாதன வாயிருப்பதாய் அவையே கொங்கை முதலிய சொற்களால் அருளிச் செயல்களிற் கூறப்படுகின்றனவென்று கொள்க.

ச்ருங்கார ரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்த பக்திரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்யக் கூடுமாயினும், ஆழ்வார்கள் ச்ருங்கார ரஸத்தையும் கலந்து பாசுரங்கள் பேசு வதற்குக் காரணம் யாதெனில்; ஆரோக்கியத்திற்குக் காரண மாகிய வேப்பிலையுருண்மையை உட்கொள்ள இறாய்க்குமவர் களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக்கொடுத்துத் தின்பிப்பது போலச் சிற்றின்பம் கூறும் வகையாற் பேரின்பத்தைக் காட்டி நாட்டுகின்றனரென்ப.

பகவத் விஷயத்தில் அபிநிவேசம் மீதூர்ந்த காலத்தில் தன் நிலைமாறிப் பெண்நிலை பெற்றுப் பேசுமிடத்தில் தாய் பாசுர மென்றும் தலைவி பாசுரமென்றும் தோழி பாசுரமென்றும் இப்படி வகுத்துக் கூறுவதற்கும் உட்கருத்து உண்டு; தோழியாகப் பேசுவதற்குக் கருத்து: நாயகனையும் நாயகியையும் இணக்கிச்

சேர்க்குமவள் தோழியாவள்; திருமந்திரத்தில் பிரணவத்தினால் எம்பெருமானோடு இவ்வாத்மாவுக்குச் சொல்லப்பட்ட அநந்யார்ஹ சேஷத்வம் முதலிய ஸம்பந்தங்களை உணருகையே அப்பெருமானோடு இவ்வாத்மா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்த ஞானமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தோழியென்பதாகக் கொள்க.

பெற்று வளர்த்து பெண்பிள்ளை யௌவன பருவத்தில் நாயகனிடத்துள்ள அன்பு மிகுதியால் அவனிருப்பிடத்துக்குச் செல்லவேணுமென்று பதறுமளவில் படிகடந்து புறப்படுகை குல மரியாதைக்குப் பொருந்தாதென்று தடுப்பவள் உலகில் தாய் எனப்படுவள்; ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணுமென்கிற ஆவலைப் பிறப்பித்து அதனால் படிகடந்து நடக்கவேண்டிவந்த வளவில் இது ப்ரபந்நர் குடிக்கட்டுப் பாட்டுக்குச் சேராதென்று விலக்கி 'எம்பெருமான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்க வேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்கப் பார்க்கிற நம: பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்தையைத் தாய் என்பதாகக் கொள்க.

உறவினர் கூட்டக்கூடுமையை அறிதானாகவே புணர்ந்து நாயகனுடைய மேம்பாட்டிலே ஈடுபட்டுக் குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டியல்லது நான் உயிர் வாழ்ந்திருக்க மாட்டேன்' என்னும் பதற்றத்தையுடையவளாயிருப்பள் உலகில் மகள்; பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் சேஷியென்றும் சரண்யமென்றும் உணரப்பட்ட எம்பெருமானுக்கு நாராயண பதத்தினாற் கூறப்பட்ட ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின் சேர்க்கையாலுள்ள பெருமையை அநுஸந்தித்து அதனாலே அவனைத் தாமதித்து அநுபவிக்க நிற்கவொட்டாமல் 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டை அதிக்ரமித்து, கிட்டியநுபவித்தாலொழியத் தரிப்புற்றிருக்கவொண்ணாதபடி நடக்கிற ப்ரஜ்ஞாவஸ்தையை மகள் என்பதற்காகக் கொள்க.

இம்மூன்று அவஸ்தைகளுள் முதல் அவஸ்தை நடக்கும் படியைத் தோழி பாசுரத்தாலும் இரண்டாவது அவஸ்தை நடக்கும்படியைத் தாய் பாசுரத்தாலும் மூன்றாவது அவஸ்தை நடக்கும்படியை மகள் பாசுரத்தாலும் வெளியிடுவரென்ற தாயிற்று. ஆகவே, தலைமகள் பாசுரமாகச் சொல்லுகிற இத்திரு

**வாய்மொழியில் எம்பெருமானை அனுபவிப்பதில் ஆழ்வாருக்கு மிக்க விரைவு உண்டானமை விளங்கும்**

நாயகி பாசுரமாகச் செல்லுகிற இத்திருவாய்மொழியில் சில பறவைகள் தூதுவிடப்படுகின்றன. இதற்கு உள்ளுறை பொருள் (ஸ்வாபதேசம்) ''சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞாந கர்மங்களைச் சிறகென்று குருஸப்ரஹ்மசாரி புத்ரசிஷ்யஸ்தாநே பேசும்'' என்று ஆசார்யஹ்ருதயத்தில் அருளிச் செய்யப்பட்டுள்ளது. பகவத் விஷயத்தில் அந்வயிப்பிக்குமவர்களைப் பக்ஷிகளாக ப்ரதிபத்தி பண்ணுகிறது. பறவையானது இரண்டு சிறகுகளாலே எப்படி உயர்கதியை யடைகின்றதோ அப்படியே ஞான அநுபவங்களினால் உயர்கதியை அடைகிறார்கள்வர்கள். ஆசார்யர்களென்ன, உடன் கல்வி பயன்றவர்களென்ன, சிஷ்யர்களென்ன ஆகிய இவர்கள் தூதுவிடப்படுகின்றார்களாக (அவ்வவ்விடங்கட்கு ஏற்ப)க் கொள்ளப்படுவர்கள்.

திருவாய் மொழியில் தூதுவிடும் பதிகங்கள் நான்கு:—

1. அஞ்சிறைய மடநாராய்  2. வைகல் பூங்கழிவாய்,
3. பொன்னுலகாளீரோ,  4. எங்கானலகங் கழிவாய்.

''தமிழிழையும் சிறந்த செல்வமும் படைத்த பரப்பும் தமரோட்டை வாஸமும் மறப்பித்த க்ஷமாதிகக்ஷாஸாரஸ்ய ஸௌந்தர்யங்களை யுணர்த்தும வ்யூஹவிபவ பரத்வ தல்யார்ச்சைகள் தூது நாலுக்கும் விஷயம்'' என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீசூக்தியும் அதன் வியாக்கியானமும் இங்கு உணரத்தக்கன. (வ்யூஹத்தில் தூதுவிடுவது* அஞ்சிறை மடநாராயில்; விபவத்திலே தூதுவிடுவது* வைகல் பூங்கழிவாயில்; பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூதுவிடுவது* பொன்னுலகாளீரில்; அர்ச்சையில் தூதுவிடுவது *எங்கானலகங் கழிவாயில்).

முதல் தூதாகிய இத்திருவாய்மொழியில் ''என்பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு'', ''கடலாழிநீர்தோற்றி யதனுள்ளே கணவளருமடலாழியம்மானைக் கண்டக்காலிது சொல்லியருள்'' என்கிற பாசுரங்கள் உயிர்நிலையானவை — எம்பெருமான் தனது ஸௌசீல்யத்தினாலே முதலில் என்னோடு கலந்துவிட்டான்; கலந்தபிறகு என்னுடைய தோஷங்களைக் கண்டான்; அதனால் உபேக்ஷித்துப் பிரியலுற்றான். தன்னிடத்தில் க்ஷமாகுணம் நிரம்பியிருக்கும்போது என் பிழைகளை அவன் லக்ஷியம் பண்ணக்

காரணமேயில்லை; என்னுடைய பிழைகளானவை அவனது பொறுமைக்குணத்தையும் மறப்பித்தன போலும். அக்குணத்தைச் சிறிது நினைப்பூட்டிவிட்டால் போதும் என்று நினைத்த ஆழ்வார் அந்த க்ஷமாகுணத்தை நினைப்பூட்டுதற்கே தூதுவிடுகின்றா ரெனக்கொள்க. இஃது எந்த இடத்தை நோக்கிவிடும் தூதென்றால்? ''கடலாழி நீர்தோற்றி அதனுள்ளே கண்வளரு மடலாழி யம்மானைக் கண்டக்காலிது சொல்லி'' என்றதனால் ஜகத்ஸ்ருஷ்டிக்காக ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினவனுக்கு ஸ்ருஷ்டிப்ரயோஜனம் ''விசித்ரா தேஹ ஸம்பத்திரீச்வராய நிவேதிதும்'' என்கிறபடியே திருவடிகளிலே அடிமை கொள்ளுகை யன்றோவென்று இதனைச் சொல்லவேணுமென்று வ்யூஹத்திலே விடுகின்ற தூது என்க.

சகுந்தலை துஷ்யந்த மஹாராஜனோடு கலந்து பிரிந்தாற் போலே ஒரு விளையாடு சூழலிலே பரம புருஷனாகிற தலைவனோடு கலந்து பிரிந்தவொரு பிராட்டியின் நிலைமையை ஏற்றுக் கொண்ட ஆழ்வார், அவ்வெம்பெருமான் விரைந்து மீண்டு வரக் காணாமையாலும் அவனைப்பிரிந்து தான் ஆற்றியிருக்க மாட்டாமையாலும் தானே அவனிருப்பிடம் நோக்கிச் செல்லுதற்கு இயலாதபடி மேனி மெலிந்து கிடக்கையாலும் கண்ணிற் கண்ட நாரை குருகு வண்டு முதலிய பறவைகளைத் தூதுவிடுகிறார். அதாவது ஆழ்வார் ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையரான சில மஹான்களைத் தம்மை எம்பெருமான் பக்கல் சேர்ப்பதற்கு உரிய ஆசாரியராகவரித்து அவர்களை நோக்கி சொல்லுகின்றாரென்றதாயிற்று.

இங்கே பட்டர் அருளிச் செய்வதொரு வார்த்தையுண்டு:— ''சக்ரவர்த்தி திருமகனார் (ஸ்ரீராமபிரான்) திருவவதரித்த பின்பு வாநரஜாதி வீறுபெற்றது'' என்றார். இராமபிரான் முன்னோர் தூது வானரத்தின் வாயில் மொழிந்தது போல் ஆழ்வார்கள் ''அஞ்சிறைய புட்கள்தமை ஆழியானுக்குத் தூதுவிடுகின்றார் களென்க.

முற்காலத்தில் ஸாமாந்யனாயிருப்பானொருவன், விரக்தர்களும் வைதிகர்களுமான மஹான்கள் பலரும் திருவாய்மொழியைப் பரிக்ரஹிக்கையாலே இது தத்வபரமாயிருக்குமென்று கருதி இத்திவ்ய ப்ரபந்தத்தை அதிகரிக்கவந்து; இத்திருவாய்மொழியில் வந்தவாறே ''இது காமுகவாக்யமாயிருக்கின்றது'' என்று உபேக்ஷித்து விட்டுப் போனானாம். வேதாந்தங்களில் விதிக்கப

படுகிற பகவத்காமமே இப்படிப்பட்ட பாசுரங்களாகப் பரிண மித்ததென்று அவன் அறிந்திலன் கருவிலே திருவிலாமையாலே— என்று நம்பிள்ளை மிக வருந்திப் பேசுவர்.

வேதாந்த தேசிகன் "பாஞ்சாலீகாத்ர ஸோபாஹ்ருதய வதூ வர்க்கபும்பாவரீத்யா பத்யௌ பத்மாஸஹாயே ப்ரணயிநி பஜத: ப்ரேயஸிபாரதந்த்ரியம்! பக்தி: ச்ருங்கார வ்ருத்த்யா பரிணமதி முநேர்பாவ பந்தப்ரதிம்நா யோகாத் ப்ராகுக்த பாவஸ்திதி ரிஹ விரஹோ தேசிகாஸ் தந்ர தூதா." என்று 'த்ரமிடோபநிஷத் தாத் பர்ய ரத்நாவளியிலும், போக்தும் தவ ப்ரியதம் பவதீவ கோதே! பக்திம் நிஜாம் ப்ரணயபாவநயா க்ருணந்த: உச்சாவசைர் விர ஹஸங்கமஜைருதந்தை: ச்ருங்கார யந்தி ஹ்ருதயம் குரவ ஸ்த்வ தீயா:!" என்று கோதாஸ்துதியிலு மருளிச் செய்தவை இங்கு ஸ்மரிக்கத்தக்கன.

—இப்பகுதியில் அகப்பொருள் மானுடக்காதல் எவ்வாறு தெய்வப் பக்திக் காதலாக உருவாகிறது என்பதற்குச் சுவாமி தரும் விளக்கம் நன்கு தெளிவு செய்வதைக் காணலாம்.

## 5-18. உள்ளுறை (குறிப்புப் பொருள்)

அகப்பொருள் இலக்கண நூலார் தலைவன்தலைவிக்கிடையே நிகழும் காதல் உணர்வுகளை, உறவுகளை வெளிப்படையாகப் புலப்படுத்தாமல் குறிப்பாகப் புலப்படுத்த உள்ளுறை, இறைச்சி ஆகிய குறிப்புகளைப் பயன்படுத்துவர். ஆனால் இங்குக் குறிப் பிடப்பட்டுள்ள தூது பாசுரங்களின் விளக்கமே ஆகும்.[157]

இத்தகு விளக்கக் குறிப்புகள் முன்னோர் உரையில் மணிப் பிரவாள நடையில் கற்றோரே அறியுமாறு சுட்டிக் கூறப்பட் டுள்ளன. அவற்றையெல்லாம் அனைவரும் அறியுமாறு எளிய தமிழில் விளக்கமாகச் சுவாமி உரைத்துச் செல்வர்.

சான்றாக, 'வைகல் பூங்கழிவாய் வந்துமேயும் குருகினங்காள்' என்ற பாடலில் உள்ளுறை பொருளாக ஆசாரியர் ஒருவரை விளித்துத் தமக்கு இறைவனோடு கலவி பண்ணி வைக்க வேண்டு மென்று வேண்டுகிறதாகக்கூறுவர். மேலும் அந்த ஆசாரியர் தூய தன்மையுடையவராய் இறைவனின் குணங்களில் தோய்ந்த வராய்த் தங்களைப் பிரியில் தரியாத அன்பையுடைய சீடர்

களுடனேகூட மனத்துக்கினிய காலக்ஷேப கூடங்களிலே இருப்பவர் என்று எடுத்துக் கூறுகிறார்.[158]

## 5-19 இசையெச்சம்

பாடலில் இல்லாமலிருந்தாலும் பாடற் சொற்போக்காலே புலப்படுமாறு எஞ்சி நிற்கும் கருத்து அல்லது சொல் இசையெச்சம் எனப்படும்.

'கண்ணைக் கூவுமாறே' என்ற இடத்தில் 'ஆறு' என்ற சொல் வருமிடங்களில், முடிக்கும் சொல் கூவும்படாது எஞ்சி நிற்பதைச் சுவாமி 'எங்ஙனே' என்ற சொல்லைப் பெய்துமுடித்துள்ளதைக் காண முடிகிறது.[159]

திருவாய்மொழி உரையாசிரியர்களுள் தமிழ் இலக்கணக் குறிப்பொடு உரை வழங்கிய சிறப்பு சுவாமிகளுக்கு உரியது என்றும், இச்சிறப்பு அவர் தம் மொழி ஆளுமையை எடுத்துக் காட்டுகிறது என்றும் இந்த இயலால் உறுதிசெய்யப் பெற்றுள்ளது. எழுத்து, சொல், பொருள், யாப்பு ஆகிய சுவாமியின் தமிழிலக்கணப் புலமை தெளிவு செய்யப் பெற்றுள்ளது.

## இயல்—5

## அடிக்குறிப்புகள்

1 7-4-11

2 5-3-11

3 தொல். சொல் எச்சவியல் 5

4 நன்னூல், நூ-122

5 1-1-2, இடுகை

6 1-1-8,

7 3-9-2

8 3-9-2

9 7-2-7

10 7-8-8

11 3-8-1

12 8-8-8

13 8-8-1

14 1-3-2

15 நன்னூல், நூ-156

16 2-8-2

17 4-4-7

18 2-1-2

19 2-3-7

20 1-2-7

21 4-9-7

22 4-10-9

23 6-6-6

24 7-4-6

25 4-4-3

26 8-7-9.

27 9-1-5.

28 சிலப்பதிகாரம், உரை, 61—62, ப. 24.

29 3-4-5

30 தொல். எழுத்து. நூ.119.
31 8-3-3.
32 8-8-9.
33 10-4-10.
34 நன்னூல், நூ. 243, 244.
35 10-10-5, 36, தீபிகை.
36 3-9-3, 36.
37 7-1-7.
38 9-7-8
39 நன்னூல், நூ 281
40 1-1-1
41 நன்னூல், நூ. 274
42 3-1-1
43 5-5-1
44 9-3 7
45 3-5-5
46
47 நன்னூல், நூ. 149
48
49 நன்னூல், நூ. 295
50 4-1-3
51 நன்னூல், நூ, 296
52 2-10-4
53 நன்னூல், நூ, 299
54 10-3-10, தீபிகை
55 நன்னூல், நூ, 300
56 10-6-5
57 8-7-10
58 நன்னூல், நூ. 300
59 1-1-2
60 10-3-10

61 7-1-7

62 நன்னூல், நூ. 303

63 மேலது 309

64 ,, 307

65 ,, 313

66 5-8-8

67 5-8-10

68 6-10-1

69 7-8-1

70 7-8-3

71 9-4-2

72 9-4-4

73 9-4-6

74 4-4-4

75 5-9-6

76 3-8-9

77 8-1-7

78 2-1-4

79 6-10-2

80 1-2-4

81 நன்னூல், நூ. 364

82 1-3-9

83 3-4-5

84 6-4-4

85 நன்னூல், நூ. 369

86 3-5-4

87 2-4-1

88 நன்னூல், காண்டிகையுரை, ப 247

89 நன்னூல், நூ. 290

90 3-3-3

91 4-2-2

92 6-9-9

93 நன்னூல், நூ 320
94 ,, நூ 335
95 2-1-4
96 2-2-5
97 நன்னூல், நூ 332
98 2-9-1
99 3-6-9
100 4-6-10
101 நன்னூல், நூ 348
102 ,, 462
103 ,, 329
104 8-10-1
105 9-8-8
106 நன்னூல், 338
107 2-9-5
108 நன்னூல், நூ 337
109 4-1-7
110 நன்னூல். நூ 331
111 8-1-5
112 3-4-1 (இப்பதிகத்தில் 50 இடங்களில் 'என்கோ' எனும் சொல் வந்துள்ளது)
113 நன்னூல், பதவியல் 18, வினையியல் 12
114 நன்னூல், நூ 343
115 1-3-11
116 5-8-8
117 6-10-2
118 10-1-4
119 5-5-1
120 2-1-4
121 நன்னூல், நூ 344
122 9-1-5
123 நன்னூல், நூ 346, "சொற்றிரி யினும் பொருடிரியா வினைக்குறை"

124 3-2-10

125 4-6-11

126 1-3-8

127 6-10-2

128 நன்னூல். நூ 340

129 3-4-11

130 நன்னூல், நூ 3420

131 3-2-7

132 8-2-5

133 8-5-9

134 4-4-4

135 3-4

136 8-1-5

137 நன்னூல் 425

138 3-4-9

139 5-1-3

140 நன்னூல் நூ 428

141 10-2-5

142 நன்னூல், நூ 435

143 3-4-10

144 4-2-1 முதல் 4-2-6

145 3-4-10

146 தொல். சொல். இடையியல் 14

147 நன்னூல், நூ 267

148 4-2-5

149 7-2-9

150 நன்னூல், காண்டிகையுரை, நூ 267, ப 216

151 5-7-8

152 6-9-4

153 நன்னூல் நூ 140

154 4-2-2

155 6-10-3

156 வெறிவிலக்கு 4-6; உருவெளிப்பாடு 5-5; 1-4

157 1-4, 2-1, 6-1, 8-2

158 6-1-1

159 3-4-1

# பின்னிணைப்புகள்

1 சுவாமி பதிப்பித்த உரைப்புத்தகங்கள்
2 வடமொழி நூல்கள்
3 தமிழ்மொழி நூல்கள்
4 தெலுங்குமொழி நூல்கள்
5 இந்திமொழி நூல்கள்
6 ஆறாயிரப்படி அவதாரிகை
7 முப்பத்தாறாயிரப்படி அவதாரிகை
8 பன்னீராயிரப்படி அவதாரிகை
9 தீபிகையுரை அவதாரிகை
10 பதிகத்தின் திரண்ட கருத்து காட்டல்
11 சொல்திறம் காட்டல்
12 வடமொழி மேற்கோளாட்சி
13 ஸ்ரீவசனபூஷண மேற்கோளாட்சி
14 ஆசார்ய இருதய மேற்கோளாட்சி
15 அருஞ்சொல் விளக்கம்
16 தீபிகையுரையில் சுவாமி காட்டும் பாடபேதங்கள்
17 தீபிகையுரையில் சுவாமி காட்டும் வடசொல் திரிபு
18 சுவாமியுடன் நெருங்கிப் பழகிய பெரியார்களின் அநுபவங்கள்

துணை நூற்பட்டியல்

பின்னிணைப்பு எண் 1:

## ஸ்ரீமத் உ. வே (காஞ்சீபுரம்) பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகள் பதிப்பித்த உரைப்புத்தகங்கள்

திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழி
திருப்பாவை
நாச்சியார் திருமொழி
பெருமாள் திருமொழி
திருச்சந்தவிருத்தம்

திருமாலை, திருப்பள்ளி யெழுச்சி, அமலனுதி பிரான்
கண்ணிநுண் சிறுத்தாம்பு

முதலாயிரம் முழுமையும் 3 வால்யூம்களாக உள்ளது

பெரிய திருமொழி I 1, 2 (பத்துக்கள்)

டிடி II 3, 4, 5 டிடி

டிடி III 6, 7, 8 டிடி

டிடி IV 9, 10, 11 திருத்தாண்டகங்களுடன்

இயற்பா I (முதல் 4 திருவந்தாதிகள்)

டிடி II (திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி,

டிடி III (திருவெழுகூற்றிருக்கை, திருமடல்கள்,
இராமாநுச நூற்றந்தாதி

இராமாநுச நூற்றந்தாதி (தனிப்புத்தகம்)

திருவிருத்தம் டிடி

திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் டிடி

பகவத்கீதை யமுதம்

ஆளவந்தார் ஸ்தோத்ரம்

முகுந்தமாலை

ஸுதர்சந சதகம்

ஸ்ரீரங்கராஜஸ்தவம்

கூரத்தாழ்வான் வைபவம்

ஸ்ரீ வசந பூஷண ஸாரம்

சேஷாவதாரச் சிறப்பு

ஸ்தோத்ரவ்யாக்யான சோதநம்

ப்ரணவாதிகார தத்துவம்

வாத்ஸல்யார்த்த விவரணம்

விதவாவபந வித்வம்ஸநம்

பாதுகா ஸஹஸ்ராவதார தத்துவம் (ஸம்ஸ்க்ருத பாஷை)

தர்க்க சாஸ்த்ர ஸர்வஸ்வம் டிடி

ரக்ஷாவிலோசந பாவப்ரகாசிகா டிடி

உபந்யாஸ ரத்நமாலா டிடி

வேதாந்தயதீ ஸர்வஸ்வம் முதலியன டிடி

அதிமாநுஷஸ்தவம் (தெலுங்கு லிபி)
ஆசார்யஹ்ருதயஸாரம்

[இன்னமும் அனேக நூல்கள் ஸ்ரீஸ்வாமி யருளிச் செய்தவை யுள்ளன.]

பின்னிணைப்பு எண்: 2

## நான்கு மொழிகளில் ஸ்வாமி வெளியிட்டுள்ள நூல்கள்

1. வடமொழி நூல்கள்

1 ஸ்ரீகாஞ்சி ஹஸ்த்யத்ரி வைபவம்
2 தர்மவாத:
3 பாலகோபதேச மாலிகா
4 ஸுப்ரபாத திவ்யப்ரபந்த ப்ரதிக்ருதி:
5 முநிவாஹந ஸூரிஸூக்தி பத்யமாலா
6 திவ்யப்ரபந்த வைபவ விவேக:
7 த்ருவ சரிதம்
8 குசேலோபாக்யானம்
9 உபந்யாஸ ரத்நமாலா
10 ஸாவித்ரீ பாதிவ்ரத்யம்
11 பரிபந்தி பஞ்சபங்கி
12 கோதாஸ்துதி வியாக்யானம்
13 ப்ரஹ்ம வ்யாப்தி பரிஷ்க்ரியா
14 வேதாத்யயந ஸர்வஸ்வம்
15 ஸர்வ ஸ்வகவசம்
16 பரமார்த்த பரித்ராணம்
17 ரஸிக புதாஞ்ஜநம்
18 ஜகத்குரு வைபவம்
19 ஜகத்குரு பஞ்சாம்ருதம்
20 ஸுதர்சந குரு ஸ்துதி
21 ஸ்பாபுஜங்கீ ஸர்வஸ்வம்
22 ஸ்ரீசைலேசாஷ்டக வ்யாக்யாநம்

23 ஸ்ரீமத் வேங்கடநாத குரு ஸ்தோத்ரம்
24 ஔத்தர திவ்யதேச திவ்ய ப்ரபந்தாவளி
25 வைதிக ஸௌகிக ரஞ்ஜக சதகம்
26 உபாக்கியாந ரத்நமாலா
27 லக்ஷ்மீதத்வ விநிர்ணய
28 மதிரேக்ஷணார்த்த தத்வம்
29 பாடசோதந பரீக்ஷா
30 ரஸிக ரஸாயநம்
31 க்ருத க்ருத்ய ப்ரதீக்ஷணம்
32 ஸ்ரீராமாவதார:
33 கோபாலபஞ்சாஸத்
34 ஸதாசார்ய ஸூக்திரக்ஷா
35 ரோதஸீதத்வபோதிநீ
36 ஸ்ரீராமாயண தண்டகம்
37 நந்தநந்தன வைபவ சூர்ணிகா
38 பகவத் ராமாநுஜ ஸஹஸ்ர நாமாஸ்துதி
39 ஸ்ரீமத் க்ருஷ்ணகுரு ஸ்துதி
40 ரத்நபரீக்ஷா
41 உத்யாந சுஷ்க வகோவிமர்க:
42 ஸஹஸ்ரநாம பாஷ்ய ப்ரபாவ:
43 யுஷ்மத் ஸூக்தி ஸௌரபம்
44 க்ஷேத்ர தீர்த்தயாத்ராதர்ச:
45 ஸாதுபாட ஸௌவாதவம்
46 ஸ்ரீமத் பரகால மஹாயோகி வைபவம்
47 த்ராவிடாம்நாய ரஸாஸ்வாத:
48 வர்ணாச்ரம தர்மரக்ஷா
49 கோஷ்டநாத சதகம்
50 ஹயக்ரீவ சதகம்
51 கருட விம்சதி
52 கமலாஸ்துதி:
53 ஆதிவராஹத்ரிம்சத்
54 கலிவைரி தசகம்
55 லோகாசார்ய ஸ்தோத்ரம்

56 ஸ்ரீமத் வரவரமுனி வைபவ ஸ்தோத்ரம்
57 ஸ்ரீசைலேசதயா பாத்ர ஸ்தோத்ரம்
58 அத்புதவார்த்தாப்ரகாச:
59 ஸ்ரீராமரத்ந நவரத்நம் நாம ஸ்ரீராமாயண ரஸாயநம்
60 ஸ்ரீலோகாசார்ய கர்ணாம்ருதம்
61 வரவரமுநீந்த்ர விஜயமாலா
62 ஸ்ரீராமபத்ர கர்ணாம்ருதம்
63 ஸ்ரீகோபால பக்தாம்ருதம்
64 ஸ்ரீகோவிந்த கீதாம்ருதம்
65 ஸ்ரீமத் வரவரமுநி ஸ்தோத்ர ரஸாயநம்
66 ஸ்ரீசைலேசதயாபாத்ர மங்களாசாஸநம்
67 ஸ்ரீமத் வரவரமுநி கர்ணாம்ருதம்
68 ஸ்ரீமத் வரவரமுநி நக்ஷத்ரமாலா
69 ஸ்ரீவரவரமுநி வாரமாலா
70 ஸ்ரீவரவரமுநி திதிமாலா
71 ஸ்ரீவரவரமுநி பக்ஷமாலா
72 ஸ்ரீவரவரமுநி மாஸமாலா
73 ஸ்ரீவரவரமுந்ய ருதுமாலா
74 ஸ்ரீவரவரமுநியயநமாலா
75 ஸ்ரீவரவரமுநி ஸம்வத்ஸரமாலா
76 ஸ்ரீவரவரமுநி ஸஹஸ்ர நாம ஸ்தோத்ரம்
77 ஸ்ரீவரவரமுந்யஷ்டோத்தரசதநாம ஸ்தோத்ரம்
78 ஸ்ரீவரவரமுநி மங்களாசாஸந ஸ்தோத்ரம்
79 ஸ்ரீவரவரமுநி தண்டக ஸ்துதி
80 ரஹஸ்யத்ரய ச்லோக மாலிகா
81 தத்வத்ரயச்லோக மாலிகா
82 ஸ்ரீவசன பூஷண ச்லோக மாலிகா
83 வேதாந்த ஸர்வஸ்வம்
84 ஸம்ப்ரதாய ஸித்தாஞ்ஜநம்
85 அத்யமே பத்யார்த்த சக தூஷணீ
86 பக்வத்ராமாநுஜ ஹ்ருதயம்
87 மங்களாசாஸந பத்யமாலா

88 பட்டநாத ஸூக்த சதகம்
89 ஸ்ரீகோதா வரதப்ரபந்த பத்யாவலீ
90 ஸ்ரீகோதாஸூக்த பத்யாவலீ
91 ஸ்ரீகுலசேகரஸூக்த பத்யாவலீ
92 ஸ்ரீமாலாப்ரபந்த பத்யாவலீ
93 மதுரகவிஸூக்த பத்யாவலீ
94 ப்ருஹத் ஸூக்த பத்யாவலீ
95 திருவாசிரிய ப்ரபந்த தண்டகம்
96 ஸ்ரீபரகால ரதப்ரபந்த தண்டகம்
97 லகுபாளீப்ரபந்த ப்ரதிக்ருதி:
98 குருபாளீ ப்ரபந்த ப்ரதிக்ருதி:
99 மங்களாசாஸந ப்ரபந்த வ்யாக்க்யா
100 ஸ்ரீபட்டநாத ஸூக்த வ்யாக்க்யா
101 ஸ்ரீகோதாவ்ரத ப்ரபந்த வ்யாக்க்யா
102 ஸ்ரீகோதா ஸூக்த வ்யாக்க்யா
104 ஸ்ரீ பக்திஸார திவ்ய ஸூக்தி வ்யாக்க்யா
105 ஸ்ரீமாலா ப்ரபந்த வ்யாக்க்யா
106 ஸூப்ரபாத திவ்யப்ரபந்த வ்யாக்க்யா
107 முநிவாஹநஸூரி ஸூக்தி வ்யாக்க்யா
108 மதுரகவி ஸூக்த வ்யாக்க்யா
109 ஸ்ரீபரகால ஸூரிஸூக்த்த வ்யாக்க்யா
110 திருவாசிரிய ப்ரபந்த வ்யாக்க்யா
111 ஸ்ரீபரகால ரதப்ரபந்த வ்யாக்க்யா
112 லகுபாளீ ப்ரபந்த வ்யாக்க்யா
113 குருபாளீ ப்ரபந்த வ்யாக்க்யா
114 ஸ்ஹஸ்ர கதி வ்யாக்க்யா
115 ப்ரபந்த காயத்ரீ வ்யாக்க்யா
116 ஸ்ரீ கோதாஸூக்த ஸர்வஸ்வம்
117 அபிநவ தயாசதகம்
118 அபிநவ தயாசதக தாத்பர்ய ஸார:
119 மதிரேக்ஷணார்த்த மாதுர்யம்
120 ஹ்ருத்ய ஸௌபாக்கியம்

121 பாதுகா ஸஹஸ்ராவதார தத்வம்
122 பரீக்ஷா விமர்ச பராமர்ச:
123 பரிஷ்கார பராமர்ச:
124 ரக்ஷா விலோசந பாவ ப்ரகாசிகா
125 ஸம்ஸ்யமாநோக்தி ஸௌஷ்டவ விமர்ச:
126 கோதார்த்தோக்ஷாவமர்த விமர்ச:
127 தேசிகாவதார வத்ஸர சிந்தா
128 ஸப்ததி ரத்ந தத்வம்
129 வைபவப்ரகாசிகா விமர்ச:
130 ராமாநுஜ தயாபாத்ர பத்ய சரித்ரம்
131 பாத்ரபத்ய சரித்ரப்ரதிஷ்டா
132 ஸத்ஸம்ப்ரதாய ஸஹஸ்ர நம்சு
133 ஸத்ஸம்ப்ரதாய ஸஹஸ்ராம்சா வ்யாக்யா
134 பதபாட பரித்ராணம்
135 சததூஷணீ வஜ்ரகுடார:
136 நவீந சரித்ர க்ரந்த விமர்ச:
137 ரஹஸ்யத்ரயார்த்த ஸர்வஸ்வம்
138 ஸ்ரீவசந பூஷண திவ்யார்த்த தீபிகா
139 ரஹஸ்யத்ரயஸார ஸாரப்ரதீபிகா
140 ஸமஸ்யாபூர்த்தி சதகம்
141 சித்ரப்ரச்நோத்தரமாலா
142 சரமச்லோகாவளீ
143 அபூர்வ ராமாயணம்
144 திவ்யபுருஷ பரீக்ஷா
145 மஹிளாபுர கேசவ ஸுப்ரபாதம்
146 மஹிளாபுர கேசவ கர்ணாம்ருதம்
147 மஹிளாபுர கேசவ மங்களம்
148 சென்னகேசவ ஸுப்ரபாதம்
149 வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகா
150 வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகாவிவ்ருதி
151 திவ்யஸூரி வைபவம்
152 பூர்வாசார்ய வைபவம்

153 தர்க்கசாஸ்த்ர ஸர்வஸ்வம்
154 யாத்ரா ஸ்தோத்ராம்ருதம்
155 ஸதர்த்த முச்சய:

## பின்னிணைப்பு எண்: 3

## தமிழ் நூல்கள்

### 1. பூர்வாசார்ய ப்ரபாவ நூற்கள்

1 கூரத்தாழ்வான் வைபவம்
2 ஸ்ரீராமாநுஜர் வைபவம்
3 அனந்தாழ்வான் வைபவம்
4 ஆழ்வார்கள் வைபவம்
5 வேதாந்த தேசிகன் வைபவம்
6 மணவாள மாமுனிகள் வைபவம்
7 அண்ணா வைபவம்
8 பூர்வாசார்ய ப்ரபாவம்
9 புரட்டாசித் திருவோண மலர்
10 ஐப்பசித் திருமூல மலர்
11 வாதிபீகர விஜயம்
12 அண்ணாவின் கால நிர்ணயம்

### 2. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்

13 அத்திகிரி வைபவம்
14 திவ்யப்ரபந்த பகவத்கதாம்ருதம்
15 ஸ்ரீ ராமாயண ஸாரம்
16 வான்மீகி ராமாயண வசனம்
17 அபூர்வ ராமாயணம்
18 நரஸிம்ஹாவதார சரிதம்

### 3. உபந்யாஸ நூல்கள்

19 ஸ்ரீராமாநுஜ பூஷணம்
20 பக்தாம்ருதம்
21 பன்னிரு திங்களநுபவம்

22 அறுபத்திரண்டு உபந்யாஸ மாலை
23 எம்பெருமானாரறுபத்திரண்டு
24 சாரீரகமீமாம்ஸை யறுபத்திரண்டு
25 பகவத்கீதை யறுபத்திரண்டு
26 அறுபத்துமூன்று உபந்யாஸமாலை
27 சக்ரவர்த்தி திருமகனறுபத்துநான்கு
28 அறுபத்துநான்கு நன்மொழிகள்
29 அறுபத்துநான்கு நல்வார்த்தைகள்
30 அறுபத்துநான்கு ஆராய்ச்சி மாலை
31 விசதவாக் சிகாமணிவாக் வைசத்யம்
32 அங்கண்மா ஞாலத்தமுது
33 அர்ச்சாவதார வைபவம்

4. **வேதாந்தார்த்த விளக்க நூல்கள்**

34 ஸ்ரீபாஷ்ய ஸாராம்ருதம்
35 த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வம்
36 விசேஷார்த்த ரத்நநிதி
37 ஸ்வஸ்வரூப நிரூபணம்
38 பரஸ்வரூப நிரூபணம்
39 ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமை
40 விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை
41 மாமுனிவன் மேற்கோள் விளக்கு
42 அத்ருஷ்டார்த்த ஸர்வஸ்வம
43 தென்னாசார்ய ஸம்ப்ரதாயம்
44 ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி
45 ஸ்வாபதேசார்த்த ஸாகரம்
46 விபவாவதார சோக தத்வம்
47 நரஸிம்ஹாவதார தத்வம்
48 தடஸ்தபரிசீலநம்
49 க்ருஷ்ணாவதார கதாரஹஸ்யம்

5. **திவ்யப்ரபந்தார்த்த விளக்க நூல்கள்**

50 திருப்பல்லாண்டு திவ்யார்த்த தீபிகை
51 பெரியாழ்வார் திருமொழி ,,

52 பெரியாழ்வார் திருமொழி பொழிப்புரை
53 திருப்பாவை திவ்யார்த்ததீபிகை
54 திருப்பாவை மற்றொரு வகையான உரை
55 திருப்பாவை ஸ்வாபதேசவுரை
56 திருப்பாவை விசேஷார்த்தவுரை
57 நாச்சியார் திருமொழி திவ்யார்த்த தீபிகை
58 நாச்சியார் திருமொழி சிறிது சுருக்கமான தெளிவுரை
59 பெருமாள் திருமொழி திவ்யார்த்த தீபிகை
60 ,, ,, சிறிது சுருக்கமான தெளிவுரை
61 திருச்சந்த விருத்த திவ்யார்த்த தீபிகை
62 ,, சிறிது சுருக்கமான தெளிவுரை
63 திருமாலை திவ்யார்த்த தீபிகை
64 திருப்பள்ளியெழுச்சி தீபிகை
65 அமலனாதிபிரான் திவ்யார்த்த தீபிகை
66 கண்ணிநுண்சிறுத்தாம்பு ,,
67 பெரிய திருமொழியாயிரம் ,,
68 திருக்குறுந்தாண்டகம் ,,
69 திருநெடுந்தாண்டகம் ,,
70 முதல் திருவந்தாதி ,,
71 இரண்டாந் திருவந்தாதி ,,
72 மூன்றாந் திருவந்தாதி ,,
73 நான்முகன் திருவந்தாதி ,,
74 திருவிருத்தம் ,,
75 திருவாசிரியம் ,,
76 பெரிய திருவந்தாதி ,,
77 திருவெழுகூற்றிருக்கை ,,
78 சிறிய திருமடல் ,,
79 பெரிய திருமடல் ,,
80 திருவாய்மொழியாயிரம் ,,
81 இராமாநுசநூற்றந்தாதி ,,
82 இராமாநுச நூற்றந்தாதி சுருக்கமான தெளிவுரை

83 நித்தியாநுஸந்தான வுரை

84 திவ்யப்ரபந்த ஸாரத்திரட்டு

85 திவ்யப்ரபந்த ஸாராம்ருதம்

86 திவ்யப்ரபந்தக் கண்ணாடி

87 திவ்யப்ரபந்தத் திருநாமமாலை

88 அருளிச் செயலாராய்ச்சி

89 அருளிச்செயல்பாகவதம்

90 ஆழ்வார்களுக்குகந்த இராமன்

91 ஆழ்வார்களுக்குகந்த கண்ணன்

**6. ஆசாரியர்களின் தமிழ்நூல்களுக்கு உரைகள்**

92 உபதேச ரத்தினமாலையுரை

93 திருவாய்மொழி நூற்றந்தாதியுரை

94 ஆர்த்திப் பிரபந்தவுரை

95 ஞானஸாரவுரை

96 ப்ரமேயஸாரவுரை

97 ஸப்தகாதையுரை

98 அடைக்கலப்பத்து உரை

99 அத்திகிரி மாகாத்மியவுரை

100 திருச்சின்னமாலையுரை

101 பிள்ளையந்தாதியுரை

102 (தனி) கம்பரின்பக் கவித்திரட்டு

**7. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்**

103 முமுக்ஷுப்படிஸாரம்

104 ஸ்ரீவசநபூஷணஸாரம்

105 தத்வத்ரயஸாரம்

106 ஆசார்யஹ்ருதயஸாரம்

107 ,, சிறிது சுருக்கமானது

108 ஆசார்யஹ்ருதயப் பதவுரை

**8. ஸ்தோத்ரம் முதலிய ஸம்ஸ்க்ருத நூல்களுக்கு உரைகள்**

109 அகிலபுவநஜந்ம வியாக்கியானம்

110 த்வம்மேஹம்மே வியாக்கியானம்

111 முகுந்தமாலை வியாக்கியானம்
112 ஸ்தோத்ரரத்னம் ,,
113 சதுச்ச்லோகி ,,
114 தேவராஜாஷ்டகம் ,,
115 சரணாகதிகத்யம் ,,
116 ஸ்ரீரங்கத்யம் ,,
117 ஸ்ரீவைகுண்டகத்யம் ,,
118 ஸ்ரீவைகுண்டஸ்தவம் ,,
119 அதிமாநுஷஸ்தவம் ,,
120 ஸுந்தரபாஹுஸ்தவம் ,,
121 வரதராஜஸ்தவம்—அதிக விரிவான வியாக்கியானம்
122 வரதராஜஸ்தவம் அதிக விரிவில்லாத வியாக்கியானம்
123 ஸ்ரீஸ்தவ வியாக்கியானம்
124 ஸுதர்சந சதகம் வியாக்கியானம்
125 ஸ்ரீரங்கராஜஸ்தவம் இரண்டு சதகமும் வியாக்கியானம்
126 ஸ்ரீகுணரத்ந கோசம் வியாக்கியானம்
127 அஷ்ட ச்லோகி ,,
128 யதிராஜ விம்சதி ,,
129 தாடீபஞ்சகம் ,,
130 ராமாநுஜ சதுச்ச்லோகி ,,
131 ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரம் ,,
132 க்ஷமாஷோடசி ,,
133 ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம் ,,
134 தேவராஜ மங்களம் ,,
135 நரஸிம்ஹாஷ்டகம் ,,
136 காஞ்சீக்ஷேத்ரஸங்க்ரஹஸ்துதி வியாக்கியானம்
137 தேவராஜ பஞ்சகம் வியாக்கியானம்
138 பராங்குசாஷ்டகம் ,,
139 வரவரமுநி சதகம் ,,
140 வரவரமுநி பூர்வ திநசர்யா ,,
141 வரவரமுநி உத்தர திநசர்யா ,,
142 நக்ஷத்ரமாலிகா ,,

143 த்ரமிடோப நிஷத்ஸங்கதி ,,
(தேசிக ஸ்தோத்ர வியாக்கியானங்கள்)

144 ஹயக்ரீவ ஸ்தோத்ர வியாக்கியானம்

145 கோதாஸ்துதி ,,

146 பரமார்த்த ஸ்துதி ,,

147 வைராக்கிய பஞ்சகம் ,,

148 ந்யாஸ தசகம் ,,

149 பகவத் த்யாந ஸோபாநம் ,,

150 தசாவதார ஸ்தோத்ரம் ,,

151 அபீதி ஸ்தவம் ,,

152 கோபாலவிம்சதி ,,

153 யதிராஜ ஸப்ததி ,,

154 ரகுவீரகத்யம் ,,

155 த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி ,,

156 த்ரமிடோபநிஷ த்ஸாரம் ,,
(ஸ்வகீய ஸம்ஸ்க்ருத நூல்களினுரைகள்)

157 கலிவைரி தசகம் வியாக்கியானம்

158 ஸ்ரீமத் க்ருஷ்ணகுருஸ்துதி வியாக்கியானம்

159 லோகாசார்ய ஸ்தோத்ரம் ,,

160 வரவரமுநி தண்டகம் ,,

161 வரவரமுநி வைபவ ஸ்தோத்ரம் ,,

162 ஸ்ரீசைலேச தயாபாத்ர ஸ்தோத்ரம் ,,

163 ஸ்ரீமத் வரவரமுநி ஸ்தோத்ர ரஸாயநம் ,,

164 ஸ்ரீசைலேச தயாபாத்ர மங்களாசாஸநம் ,,

165 ஸ்ரீமத் வரவரமுநி கர்ணாம்ருதம் ,,

166 ஸ்ரீமத் வரவரமுநி நக்ஷத்ரமாலா ,,

167 ஸ்ரீமத் வேங்கடநாத குரு ஸ்தோத்ரம் ,,

168 வாத்ஸல்யார்த்த ப்ரகாசிகை ,,

169 யாத்ரா ஸ்தோத்ராம்ருதம் ,,

170 ஸபாபுஜங்கீ ஸர்வஸ்வம் ,,

9. வேதலக்ஷண விசார நூல்கள்

171 ஸர்வஸ்வ ஸம்ரக்ஷணி
172 சாஸ்த்ரஜ்ஞாந சாணபலகம்
173 ஸர்வஸ்வரக்ஷா
174 அஸூயா ப்ரமௌஷதம்
175 வைதிக வித்வதாபரணம்
176 வித்வத் வைதிக பூஷணம்

10. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்

11. லோகாபிராம நூல்கள்

12. பரபக்ஷப்ரதி க்ஷேப நூல்கள்

177 அத்புத சக்தி
178 அத்யமே பத்யார்த்த தத்வம்
179 ,, தத்வப்ரதிஷ்டா
180 ,, தத்வப்ரதிஷ்டா விஜயத்வஜ
181 ,, விஜயத்வஜ வைஜயந்தீ
182 அர்ச்சாவதாரத் திருமண் காப்பு
183 ஆசார்ய ஹ்ருதய பாடபரிஷ்காரம்
184 ஆச்சான்பிள்ளை யஷ்டாத்யாயி
185 ஆச்சான்பிள்ளை யாறுரஹஸ்யம்
186 ஆராய்ச்சி மணிமாலை
187 உத்யாந ஸம்வாதம்
188 உத்யாந சிக்ஷா
189 உபதேச ரஸாயனம்
190 ஐகமத்யரஸம்
191 ஐதிஹ்ய நிர்வாஹ ரத்னமாலை
192 க்ஷேத்ர தீர்த்தயாத்திரை விளக்கு
193 சதபூஷனீ வஜ்ரகுடார ஸாரம்
194 சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை
195 சிரோமணி சிரோபூஷா
196 சிரோமணி சேகரம்
197 சுகஸாரண மதமர்த்தநம்

198 செந்தமிழாராய்ச்சி
199 சேஷாவதாரச் சிறப்பு
200 சேட்லூரர் மாயமயக்கம்
201 சேட்லூராார் நூலாராய்ச்சி
202 ச்ருத ப்ரகாசிகாரக்ஷா
203 ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி
204 ஸ்ரீமடஸௌபாக்யம்
205 ஸ்ரீராமநுஜன்
206 ஜகதாசார்ய ஸூக்தி ஸுதாநிதி
207 தத்வநிவேதநம்
208 தத்வஹிதோபதேசம்
209 தத்வார்த்த பூஷணம்
210 தானே எழுதிய தன்சரிதை
211 திருப்புட்குழிஸ்வாமி வைபவ பரிஷ்காரம்
212 திருப்புட்குழிஸ்வாமி பரிசிஷ்டம்
2.3 திவ்யஸூரி சரித காலநிர்ணயம்
214 தீண்டாமை தொலையாமை
215 துவரைப்பிரான் திருவருள்
216 தேசிகப்பிரபந்தவுரை யாராய்ச்சி
217 தேசிகப்ரபாவ பரிஷ்காரம்
218 தேசிகஸூக்தி ஜயத்வஜமாலா
219 தேசிக ஸூக்தி பரிமளம்
220 தேசிக ஸூக்தி ஸித்தாஞ்ஜநம்
221 தேவப்பெருமாள் ஸன்னிதி விமர்சம்
222 நம்பின்னையவதார ரஹஸ்யம்
223 நமஸ்கார தத்வம்
224 நமஸ்கார தத்வ விஜயத்வஜம்
225 நற்பொருள் விளக்கம்
226 நான் கண்ட நல்லது
227 ந்ருஸிம்ஹ ப்ரியா நிரீக்ஷணம்
228 ந்ருஸிம்மஹ ப்ரியா ஸமீக்ஷணம்
229 பக்தன் மூலிதமிழாராய்ச்சி

230 பகவத் சாஸ்த்ர தத்வம்
231 பரதுக்கதுக்கித்வ பரமார்த்தரக்ஷா
232 பாதுகாஸஹஸ்ர வுரையாராய்ச்சி
233 பாத்ரதத்வ ஜயத்வஜம்
234 பாத்ரதத்வ பரமார்த்தம்
235 பிழைதிருத்தப் பேரின்பம்
236 பெரியாழ்வார் திருமகள்
237 பேரருளாளன் பாடல் விளக்கம்
238 ப்ரணவாதிகாரதத்வம்
239 ப்ரமாணத் திரட்டாராய்ச்சி
240 மடவித்வத் விபூஷணம்
241 மாமுனிவனருள் விளக்கு
242 யுஷ்மத்ஸூக்தி ஸௌரபம்
243 ரக்ஷாவிமர்சசிக்ஷா
244 ராமாநுஜ தயாபாத்ர சரித்ரம்
245 ராமாநுஜ தயாபாத்ர தத்வம்
246 வம்பவிழ்கோதை தத்துவம்
247 வரதன் ஸன்னிதி வரலாறு
248 விதவாவபநவித்வம்ஸநம்
249 வித்வத்விநோதிநி
250 வ்யாமோஹ ப்ரசமௌஷதம்
251 வாத்ஸல்யார்த்த விவரணம்
252 வாத்ஸல்யார்த்த விஜயத்வஜம்
253 விஷ்ணுகோவில்களும் விசேஷ தர்ம பரிபாலனமும்
254 ஸதாசார்ய ஸூக்திரக்ஷா
255 ஸத்புருஷ் ஸமாராதநம்
256 ஸத்ஸம்ப்ரதாய பரித்ராணம்
257 ஸத்ஸம்ப்ரதாய பரிசுத்தி
258 ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன்
259 ஸதுபதேச சிக்ஷா
260 ஸத்யநாராயணாஸ்த்ரம்

261 ஸத்யநாராயணாஸ்த்ர ஸத்ய ப்ரதாபம்
262 ஸத்ய வாதிஸமாச்வாஸநம்
263 ஸாது ஸாத்விக ஸம்வாதம்
264 ஸெளஜன்ய ஸெளரபம்
265 ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம்
266 ''வக்ரந்த சோதநம்''

பின்னிணைப்பு எண் : 4

## தெலுங்கு மொழிநூல்கள்

1 ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம டீக
2 முகுந்தமால டீக
3 ஸ்தோத்ர ரத்ந டீக
4 கத்யத்ரய டீக
5 அதிமாநுஷஸ்தவ டீக
6 ஸ்ரீவைகுண்டஸ்தவ டீக
7 ஸ்ரீஸ்துதியநே கநகதாராஸ்தவ டீக
8 யதிராஜ விம்சதி டீக
9 தாடீபஞ்சக டீக
10 ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ர டீக
11 க்ஷமாஷோடச டீக
12 ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ர டீக
13 நரஸிம்ஹாஷ்டக டீக
14 தேவராஜாஷ்டக டீக
15 தேவராஜ மங்கள டீக
16 திருமந்த்ரார்த்த டீக
17 ஆசார்ய ஹ்ருதய ப்ரதம ப்ரகரண டீக
18 பகவத் கர்ணாம்ருதமு
19 ஆள்வார்ல வைபவமு
20 திவ்யதேச தர்பணமு
21 விசேஷார்த்த ரத்நமாலா
22 ஸத்ஸம்ப்ரதாய ஸாரநிதி

23 பூர்வாசார்ய ப்ரபாவமு
24 கஞ்சி தேவப்பெருமாள்ள வைபவமு
25 வேதாந்த தேசிக வைபவமு
26 திருப்பல்லாண்டு டீக
27 பெரியாழ்வார் திருமொழி டீக
28 நாச்சியார் திருமொழி டீக
29 திருப்பாவ டீக
30 நித்யாநுஸந்தான டீக
31 அபூர்வ ராமாயணமு
32 உத்தர திவ்யதேச திவ்ய ப்ரபந்தாவளீ
33 பதரீ யாத்ரா ப்ரதீபமு
34 ஸ்ரீபாஷ்யார்த்தஸார ஸங்க்ரஹமு
35 மலயாள திவ்யதேச யாத்ரா
36 சரணாகதி ஸாம்ராஜ்யமு
37 உபந்யாஸ ரத்னாவளீ
38 ஜகதாசார்ய ஸூக்தி ஸுதாநிதி
39 நாச்சியார் திருமொழி ஸாரமு
40 பெரியாழ்வார் திருமொழி ஸாரமு
41 ஸ்ரீராமாநுஜ பத்ரிகா (இதி மாஸ பத்ரிகா)

பின்னிணைப்பு எண்: 5

## இந்திமொழி நூல்கள்

1 ஆள்வார் வைபவ:
2 திவ்யதேச ஸூசி
3 திருப்பல்லாண்டு வ்யாக்யா
4 யதிராஜ விம்சதி வ்யாக்யா
5 ஸ்ரீவைஷ்ணவ ஸுதா
6 ஸ்ரீபரகால ஸூரி ஸூக்த ஸார ஸங்க்ரஹ
7 மதுரோபந்யாஸமாலா
8 பூர்வாசார்ய ப்ரபாவ

பின்னிணைப்பு எண்: 6

## எட்டாந் திருவாய்மொழி - முடியானே ப்ரவேசம்

ஆறாயிரப்படி:

''(முடியானே) தேர்கடவிய பெருமான் கனைகழல் காண்பதென்றுகொல் கண்கள்'' என்று பிறந்த அபேக்ஷையானது மிகவும் உத்பூதையாய், அந்த அபேக்ஷையானது குணமாகக் காணப் பெறாத வ்யஸநத்தினாலே அத்யந்தம் அவஸந்நராய்க் கொண்டு, தம்முடைய ஸர்வ கரணங்களாலும் ஸர்வ ப்ரகாரத்தாலும் எம்பெருமானை அநுபவிக்க வேணுமென்று சொல்லிக் கொண்டு கூப்பிடுகிறார்.

முடியானே மூவுலகுந் தொழுதேத்தும் சீ
ரடியானே ஆழ்கடலைக் கடைந்தாய் புள்ளூர்
கொடியானே கொண்டல் வண்ணா அண்டத்தும்பரில்
நெடியானே என்றுகிடக்கு மென்னெஞ்சமே.

ஸர்வலோகாதிபத்ய ஸூசகமாய் நிரதிசய தீப்தியுக்தமாய், அதிரமணீய தர்சநமாயிருந்த திருவபிஷேகத்தாலே அலங்க்ருதனாய், ப்ரஹ்மேசாநாதிகளுக்கும் ஈச்வரனாய் வைத்து அநாலோசித விசேஷாசேஷ லோக சரண்யனாய், ஆச்ரித ஜந ஸமீஹித நிர்வர்த்தகனாயிருந்தவனே! பொன்மலையின் மீமிசைக் கார்முகில் போலே பெரியதிருவடி திருத்தோளின் மேலேறியருளி இந்த லோகத்திலே ''வந்து தோன்றாய்'' என்று எம்பெருமானைக் காண ஆசைப்பட்ட போதே காணப் பெறாமையாலே குறைப்பட்டுக் கிடக்கும் என்னெஞ்சம் என்கிறார்.

பின்னிணைப்பு எண்: 7

## ஈடு முப்பத்தாறாயிரப்படி அவதாரிகை

கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை
வரனவில்திறல்வலி அளிபொறையாய் நின்ற
பரனடிமேல்குருகூர்ச் சடகோபன் சொல்
நிரனிறையாயிரத்து இவைபத்தும் வீடே (11)

ஈடு:— நிகமத்தில், முதற்பாட்டிலே கல்யாண குண யோகத்தையும் திவ்யவிபூதி யோகத்தையும விக்ரஹ வைலக்ஷண்யத்தை

யும் சொல்லி, இரண்டாம் பாட்டிலே இவற்றுக்கு ஆச்ரயமான திவ்யாத்ம ஸ்வரூபம் சேதநாசேதநவிலக்ஷணமென்றும், மூன்றாம் பாட்டிலே நித்யவிபூதியோபாதி ததீயத்வாகாரத்தாலே அவனுக்கு அந்தரங்கமாய்த் தோற்றுகிற லீலாவிபூதியோகத்தை அநுபவித்தார்; நாலாம் பாட்டிலே அந்த லீலா விபூதியினுடைய ஸ்வரூபம் அவனதீநமென்றார்; அஞ்சாம் பாட்டிலே அதினுடைய ஸ்திதியும் அவனதீநை யென்றார்; ஆறாம் பாட்டிலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்தியும் பகவதீந மென்றார்; ஏழாம் பாட்டிலே சரீரசரீரிகளுக்கு உண்டான லக்ஷணம் ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் உண்டாகையாலே இதுக்கும் அவனுக்குஞ் சொன்ன ஐக்யத்துக்கு நிபந்தம் சரீராத்மபாவ மென்றார்; எட்டாம் பாட்டிலே குத்ருஷ்டிகளை நிரஸித்தார்; ஒன்பதாம் பாட்டிலே சூந்யவாதியை நிரஸித்தார்; பத்தாம் பாட்டிலே வ்யாப்தி ஸௌகர்யத்தை அருளிச்செய்தார்: இப்படிகளாலே அவனுடைய பரத்வத்தை நிஷ்கர்ஷித்தாராய் நின்றார் கீழ்; இத் திருவாய்மொழியில் அந்வயித்தவர்களுக்குத் தாம் பெற்ற பேறே பேறென்னுமிடத்தை அருளிச்செய்கிறார்.

(கரவிசும்ப)—கரமான விசும்பு; த்ருடமான விசும்பென்றபடி அன்றியே. (கரவிசும்பு)—கரந்தவிசும்பி; அச்சமான விசும்பென்னுதல் 'அத்ர, க்ருத்த்ர:பததி' என்று நிரூபிக்க வேண்டும்படியாயிருக்குமிறே (எரி) | தேஜஸ்த்த்வம். (வளி)- காற்று. (நீர்)—ஜலம். (நிலம்) – பூமி. (இவை மிசை) — இவற்றின்மே லேயுண்டான. (வரன்)—வரனான; ச்ரேஷ்டமான. (நவில்)—வரிஷ்டமான சப்தம், அக்நியினுடைய தாஹகத்வசக்தி, காற்றினுடைய மிடுக்கு ஜலத்தினுடையதண்ணளி, பூமியினுடைய பொறை. இப்படி ஸ்ஸ்வபாவமான பூத பஞ்சகங்களையும் சொல்லி, இத்தாலே லீலா விபூதியைச் சொல்லிற்றாய் ரஜஸ்தமஸ் ஸுக்களைக் கழித்து, நிஷ்க்ருஷ்டஸத்த்வமமேயா யிருக்குமிறே நித்யவிபூதி; அதுக்கும் இதுதானே உபலக்ஷணமாய், ஆக, உபயவிபூதி யுக்தனாயிருக்கிற ஸர்வஸ்மாத்பரன் திருவடிகளிலே (இவைபத்தும் பரனடிமேல் வீடு)-அவன் திருவடிகளிலே விடப்பட்டன; ஸமர்ப்பிக்கப்பட்டன (குருகூர்ச் சடகோபன்)*ஸவால்மீகிர் ப்பகவாந்ருஷி* என்னுமா போலே ஆப்திக்கு உடலாக அருளிச்செய்கிறார். நிரல்நிறை என்னுதல் நிரன்நிறை யென்னுதல், நிரல்நிறை என்றபோது சப்தங்களும் நிறைந்து, அர்த்தங்களும் புஷ்கலமாயிருக்கை நிரன் நிறை என்றபோது நேரே நிறுத்தப்படுகை. *ப்ரயாணைஸ்த்ரி பிரந்விதம்* *பாதபத்தேரக்ஷாஸமஸ் தந்த்ரீலய ஸமந்வித:* என்கிறபடியே லக்ஷணங்களிற் குறையாமே, எழுத்துஞ் சொல்லும்

பொருளும் அந்தாதியும் க்ரமத்திலே நிறுத்தப்படுகை (ஆயிரம்) *காவ்யம் ராமாயணம் க்ருதஸ்ந மீத்ருசை: கரவாண்யஹம்* என்னுமாபோலே மயர்வற மதிநலமருளப் பெற்றவராகையாலே மேலுள்ள தடையத் தோன்றாநின்றது; வாச: க்ரமவர்த்தித்வாத் அடைவே சொல்லு மத்தனையாகையாலே 'ஆயிரம்' என்கிறது. அன்றிக்கே, ஆயிரமுஞ் சொல்லியல்லது நிற்கவொண்ணாத விஷயஸ்வபாவத்தாலே சொல்லுகிறாராதல். [இவை பத்தும் வீடே] | இவை பத்தும் பரனடிமேல் விடப்பட்டன வென்னுதல்; அன்றிக்கே 'இச் செய்யடைய நெல்' என்றால் நெல்லை விளைக்குமதென்று காட்டுமாபோலே இவை பத்தும் வீடென்றது—வீட்டைவிளைக்குமென்றபடியாய் மோக்ஷப்ரத மென்கிறாராதல் பகவத்ப்ரஸாதத்தாலே தமக்குப் பரத்வஜ்ஞாநம பிறந்த படியையும், அந்த ஜ்ஞாநத்துக்கு பலம் மோக்ஷமென்னுமிடத்தையும், இப்ப்ரபந்தத்தில் ஏதேனுமொருபடி அந்வயமுடையார்க்குப் பலம் தம்முடைய பலமென்னுமிடத்தையும் அருளிச் செய்கிறார்

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார்
திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்

பின்னிணைப்பு எண். 8

## ஏழாந் திருவாய்மொழி-சீலமில்லா ப்ரவேசம்

**பன்னீராயிரப்படி:**

ஏழாந்திருவாய்மொழியில், கீழ் ''ஏத்துதலும் தொழுதாடும்'' என்று பகவந்நாம ச்ரவணத்தாற் பிறந்த ஆச்வாஸம் அவனைக் கிட்டி யநுபவிக்கைக்கு உடலன்றியே லோபத்தாலே ஆர்த்தராகைக்கு உடலாகையாலே அபிநிவேசாதிசயத்தையுமுடைய இவ்வாழ்வார் தமக்கு அநுபாவ்யனான ஸர்வேச்வரனுடைய-அகிலவஸ்து ஸத்தையும் அழியாமல் நோக்கும் அஸாதாரண ஸம்பந்தத்தையும், அநந்யார்ஹமாக்கி அநுபவிக்கும் ஔதார்யத்தையும் அநந்யார்ஹமான ஆச்ரிதர் பக்கல், அத்யந்த பவ்யதையையும், அவர்களுக்கு ஆசாஜநகமான ஆபிரூப்யாதிசயத்தையும், அருந்தொழில் செய்தும் ஆச்ரிதர்க்கு அபேக்ஷிதங் கொடுக்கும் படியையும், ஆசைக்கு உத்தீபகமான ஆந்த்ர ஸ்திதியையும். அந்த அவஸ்தாநத்தினுடைய அதிசயித போக்யதையையும், போக்யதாநிபந்தநமான அபிநிவேசாதிசய ஜநகத்வத்தையும், அபிநிவிஷ்டர்க்கு அநுபாவ்யமான அஸாதாரண சிந்ஹவத்தையும் அகில

வேத வேத்யத்வத்தையும் அநுஸந்தித்து, ஏவம் விசிஷ்டனான போக்யபூதன் பக்கல் அநுபவாபிநிவேசத்தாற் பிறந்த ஆர்த்தி யதிசயத்தை அருளிச்செய்கிறார்

**சீலமில்லாச் சிறியனேலும் செய்வினையோ பெரிதால்**
**ஞாலமுண்டாய் ஞானமூர்த்தீ நாராயணா என்றென்று**
**காலந்தோறும் யானிருந்து கைதலை பூசலிட்டால்**
**கோலமேனி காணவாராய் கூவியும் கொள்ளாயே.**

முதற்பாட்டில், அகில ஸத்தையையும் நோக்கும் அஸாதாரண ஸம்பந்தத்தையுடைய நீ என்னை அங்கீகரியாதொழிகைக்கு நான் பண்ணின பாபாதிசயம் இருந்தபடியென்? என்கிறார்.

(அபேக்ஷாநிரபேக்ஷமாக ப்ரளயாபத்திலே)

ஞாலம்—அகில பதார்த்தத்தையும்

உண்டாய் - அமுதுசெய்து ஸத்தையை நோக்கினவனே

ஞானம்—ஏவம் விதமான ரக்ஷணத்துக்கு விரகறிகைக்கு ஈடான விலக்ஷண ஜ்ஞாநத்தை

மூர்த்தீ - வடிவாகவுடையவனே

நாராயணா—இப்படி விரகறிந்து ரக்ஷிக்கைக்கீடான அப்ருதக்ஸித்த ஸம்பந்தத்தையுடையவனானவனே

என்றுஎன்று—என்றென்று பலபடியும் உன் ஸ்வபாவத்தைச் சொல்லி

காலந்தோறும்—ஒருகால மொழியாமல் எல்லாக்காலத்திலும்

யான்—(வ்யதிரேகத்திலழியும்படியான ஸ்வரூபத்தையுடைய) நான்

இருந்து—(உன்னைக் காணவேணும் என்கிற ஆசாபந்தமடியாக) வருந்தியிருந்து

கைதலை பூசலிட்டால்—கைதலையிலேயாம்படி மஹாத்வநியாகக் கூப்பிட்டால்

கோலம்மேனி—தர்சநீயாகாரமான உன் வடிவை

காண—நான் கண்டு அநுபவிக்கும்படி

வாராய்—வருகிறிலை; (அது உன்தரத்துக்குப் போராதாகில்)

கூவியும் கொள்ளாய்—என்னை அங்கே அழைத்துக் கொள்ளுகிறிலை; (ஆதலால் தான்)

சீலம் இல்லா சிறியன் ஏலும்—நன்றான சரிதமின்றியே அறிவிலியான க்ஷேத்ரனா யிருந்தேனேயாகிலும்.

செய்வினை—(நீ ஜகத்ச்ருஷ்டி பண்ணுமோபாதி ஸங்கல்ப மாத்ரத்தாலன்றியே காயிக பர்யந்தமாக அநுஷ்டித்த பாபம்

பெரிதால் – அதிமஹத்தாயிருந்ததிறே

பின்னிணைப்பு எண் : 9

## திருவாய்மொழி — திவ்யார்த்த தீபிகை

ஸ்ரீ:

### ஐந்தாம் பத்து — மூன்றாந்திருவாய்மொழி — மாசறுசோதி

உரையவதாரிகை:— இத்திருவாய்மொழி மடலூரசொருப் படுவதாயிருக்கும். கீழ் நாலாம்பத்திலே *ஏறாளுமிறையோனு மென்கிற திருவாய்மொழியில் உண்டாயிருந்த காதலே மீண்டும் கிளர்ந்து எம்பெருமானோடு ஸம்ச்லேஷிக்க விரும்பி அந்த விருப்பம் நிறைவேறப் பெறாமையினாலே மடலூர்வேனென்று அச்சமுறுத்திக் காரியம் கொள்ளப் பார்க்கிறார்.

சக்ரவர்த்தி திருமகன் ஸமுத்ரராஜனைச் சரணம் புகுந்து வழி விட வேண்டினவிடத்தும் அக்கடலரையன் இறுமாப்பையே பாராட்டி முகங்காட்டாமல் அலக்ஷியஞ் செய்து கிடக்க பெருமாள் சீறிச் சிவந்த கண்ணினராய் *ஸாகரம் சோஷயிஷ்யாமி சாபமாநய ஸௌமித்ரே! பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா.* 'இதோ இக்கடலை வற்றச் செய்துவிடப்போகிறேன்; லக்ஷ்மணா! சார்ங்கவில்லைக் கொண்டுவா; வானர முதலிகள் காலாலே நடந்து செல்லட்டும்; ஒரு க்ஷணத்திலே இக்கடல் படுகிற பாடு பாராய்' என்றருளிச் செய்து ஸமுத்ரராஜனை அழிக்க முயன்றாப் போலே இவ்வாழ்வாரும் 'தமது அபேக்ஷிதத்தை நிறைவேற்றாத எம்பெருமான் எதுக்கு?' என்று பகவத் தத்துவத்தை இல்லை செய்துவிடப் பார்க்கிறார்.

மடலெடுக்கையென்று தமிழிலே ஒரு முறைமையுண்டு. நாயகன் வேட்டைக்குப் புறப்பட்டானாய், நாயகியும் தோழியும் பூக்கொய்து விளையாடவென்று புறப்பட்டவளவிலே ஒரு வியாஜத்தாலே தோழியும் பிரிந்த ஸமயத்திலே நாயகனும் தெய்வ வசமாக அங்கே வந்து சேர, அங்கே அவனோடு கண்கலவியே

கூட்டக்கூடி வாழ்வினை பிரித்தலால் உடனே பிரியவும் நேர்ந்திட, அந்தப் பிரிவைப் பொறுக்கமாட்டாத நாயகி அவனோடு கூடுதற்காகச் செய்யும் ஸாஹஸ ப்ரவ்ருத்திதான் மடலூர்தல் எனப்படுவது.

நாயகனை ஒரு படத்திலேயெழுதி வைத்த கண்வாங்காமல் அதனைப் பார்த்துக் கொண்டு, புஷ்பம் சந்தனம் முதலிய போக்ய வஸ்துக்களையும் விஷமாக உதறித் தள்ளி ஊணும் உறக்கமும் உடம்பு குளிப்பதுமின்றியே, பனைமடலைக் கையிலே ஏந்திக் கொண்டு அதனால் உடம்பை மோதிக் கொண்டு தலைமயிரை விரித்துக் கொண்டு 'இன்ன படுபாவி என்னைக்காக்க மாட்டாதே கைவிட்டான்; அவன் கண்ணற்றவன்; அவனிலும் விஞ்சிய கொடியன் இல்லை' என்று தெருவேறக் கதறிக் கொண்டே கேட்டரெல்லாரும் நடுங்கும்படியும் இரங்கும்படியும் திரிந்துழல்வதுதான் மடலூருகையாவது.

இங்ஙனம் கதறிக்கொண்டு தெருவிலே புறப்படுவதற்கு ப்ரயோஜனம் யாதெனில்; இந்த ஸாஹஸ ப்ரவ்ருத்தியைக் கண்டு ராஜாக்களாயுள்ளவர்கள் இவ்வார்த்தியைப் பொறுக்கமாட்டாத கருணையினாலே இருவரையும் கூட்டி வைப்பார்கள்; உறவுமுறை யாராவது கூட்டி வைப்பர்கள்; பழிக்கு அஞ்சி நாயகனேயாவது வந்து கூடுவன்; இவையொன்றுமில்லையாகில் நாயகிதான் முடிந்து பிழைத்துப் போவள்; இவையாயிற்று மடலூர்தற்குப் பிரயோஜனங்கள்.

ஆழ்வார் இப்படி எம்பெருமானைப் பழித்துக்கொண்டு ஸாஹஸம் தோற்றத் தெருவிலே கிளம்பினாரோ? எனில்; இல்லை; மடலூர்வன் என்று சொல்லி அச்சமுறுத்தின மாத்திரமேயன்றி அதை முடிய நடத்தினபாடில்லை. "தோழீ! உலகுதோறலர் தூற்றி ஆம் கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே" என்றும். "யாம்மடமின்றித் தெருவுதோறயல் தையலார் நாமடங்காப் பழிதூற்றி நாடுமிரைக்கவே யாம் மடலூர்ந்தும் எம்மாழி யாழியங்கைப் பிரானுடைத் தூமடல் தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம்" என்றுமுள்ள பாசுரங்கள் காண்க. திருமங்கையாழ்வாரும் "பெருந்தெருவே ஊராரிகழிலு மூராதொழியேன் நான், வாரார்பூம் பெண்ணை மடல்" என்றும் "உலகறிய வூர்வன் நான் மன்னியபூம்பெண்ணை மடல்" என்றும் மடலூர்வதாகச் சொல்லி அச்சமுறுத்தினவத்தனையேயுள்ளது.

இத்திருவாய்மொழி ஆழ்வார் தாமான தன்மையிலேயிருந்து பேசுகிறதன்று. நாயகீ ஸமாதியிலே நின்று பேசுவதாகும். தம்முடைய ஆசையின் மிகுதியைக் காட்டுவதே இத்திருவாய் மொழியின் உள்ளுறையாகும்.

''எம்பெருமான் தனக்குத் திருவுள்ளமான போது நம்மை நோக்கியருளவன். நாம் பதறவொண்ணாது'' என்று அநுஸந்தித்து ஆறியிருக்க வேண்டிய தன்றோ ஸ்வரூபம்; அங்ஙனமிராமல் நாம பதறி ஒரு அதிப்ரவ்ருத்தி செய்ய நினைக்கைதானும் அவத்ய மன்றோ? அதிலும் ப்ரபப்நஜந கூடஸ்தரான ஆழ்வார் இப்படி மடலூர் வேனெனல் பொல்லாங்கன்றோ? என்னில்; அன்று; ப்ராப்ய வஸ்துவில் ப்ராவண்யாதிசயத்தினால் உண்டாகிற ப்ரவ்ருத்தியேயன்றி எம்பெருமானுக்குக் கெடுதலை விளைவிக்கவேணு மென்கிற கெட்ட எண்ணத்தினாலுண்டாகிற ப்ரவ்ருத்தியல்ல. ப்ரேமபரவசர்க்கு இது அவத்யத்தை விளைக்கக் கூடியதன்று' 'ஞானங்கனிந்த நலம்' என்றபடி ஜ்ஞாநபரிபாக ரூபமான பக்தியின் காரியமாக ஸம்பவிக்கின்ற ப்ராப்தாப்ராப்த விவேக விரஹத்தால் வரும் ப்ரவ்ருத்தி விசேஷங்கள் எல்லாம் மிகவும் ஆதரிக்கத் தக்கனவேயாம். கருமமடியான அஜ்ஞானத்தினால் வருமவைலையே ஹேயம் என்று கொள்ளக்கடவது.

ஆனாலும், சேதனனிடத்து ஒருவகையான ப்ரவ்ருத்தியையும் ஸஹியாத ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்திற்கு இந்த அதிப்ரவ்ருத்தியானது இடையூறாக மாட்டாதோ வென்னில்; இந்த அதிப்ரவ்ருத்திதானும் ஸித்தோபாயமான எம்பெருமான் பண்ணின க்ருஷியின் பயனெனக் கருதத் தக்கதாம். 'பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி நங் கண்ணன்'' என்று இப்படிப்பட்ட அதிப்ரவ்ருத்திக்கு ஹேதுவான பக்தியைப் பிறப்பிக்குமவனும் வளரச்செய்பவனும் அவ்வெம்பெருமான்றானாகவேயன்றோ சொல்லப்பட்டுள்ளது. ஆகையாலே பக்தி பாரவச்ய ப்ரயுக்தமான இந்த அதிப்ரவ்ருத்தி உபாயபல மென்று பூர்வாசார்ய ஸித்தாந்தம்.

அன்றியும், பலனைக் கடுகப் பெறவேணுமென்ற விரைவின் மிகுதியினால் கண்ணாஞ்சுழலையிட்டு இத்தலைபடுகிற அலமாப் பெல்லாம் 'நம்மையாசைப்பட்டு இங்ஙனம் துடிக்கப்பெறுவதே!' என்று அவன் திருமுகம் மலருகைக்கு உறுப்பாகையால் இத்தகைய அதிப்ரவ்ருத்திகளெல்லாம் அவனுடைய முகமலர்த்திக்காகப்

பண்ணும் கைங்கர்யத்தோடொத்து உபேயத்தில் அந்தர் பூதமாய் விடுமென்றே அறுதியிடத் தக்கதாம்.

**மாசறுசோதி என்செய்யவாய் மணிக்குன்றத்தை**
**ஆசறுசீலனை ஆதிமூர்த்தியை நாடியே**
**பாசறவெய்தி அறிவிழந்தெனை நாளையம்?**
**ஏசறு மூரவர்கவ்வை தோழீ! என்செய்யுமே. (1)**

மாசு அறு சோதி—அழுக்கற்ற தேஜஸ்ஸையுடைய

செய்யவாய்—சிவந்த திருப்பவளத்தையுடைய

என் மணி குன்றத்தை—மாணிக்க மலைபோல் எனக்கு போக்யனானவனும்

ஆசு அறு சீலனை—குற்றமற்ற சீலகுணத்தை யுடையவனும்

ஆதிமூர்த்தியை—முழுமுதற்கடவுளுமான எம்பெருமானை நாடி—தேடி

பாசு அறவு எய்தி—உடம்பில் பசுமைநிறம் அறிலடைந்து

அறிவு இழந்து—அறிவும் இழக்கப்பெற்று

எனை நாளையம்—எத்தனை காலமுடையோம்!

தோழீ—தோழியே!

ஏசு அறும்—ஏசுவதற்கென்றே அற்றுத் தீர்ந்த

ஊரவர்—ஊராருடைய

கவ்வை—பழிமொழி

என் செய்யும்—யாது செய்யும்?

*** பராங்குசநாயகி மடலூர்வதாக எண்ணினபடியை அறிந்த தோழி அதனை விலக்கப்புகுந்து 'ஊரார் பழிசொல்வார் காண்' என்ன; அவனுடைய அழகு முதலியவற்றிலே அகப்பட்டுக் கலங்கின நான் ஊரார் பழியை லக்ஷியம் பண்ணும் நிலைமையிலே இலேன் என்கிறாள் தலைவி. முதலடியினால் எம்பெருமானுடைய ஒப்புயர்வற்ற வடிவழகு பேசப்படுகிறது "மடலெடுக்கை மாசு என்கின்றாள் தோழி; மடலெடாதொழிகை மாசு என்றிருக்கின்றாளிவள் வ்யதிரேகத்தில் இப்படி ஆற்றாமை விளையாதாகில் நாம் காண்கிற விஷயங்களோடொத்தியாமே; வடிவிலே யணைந்த வளாகையாலே முற்படவடிவிலே மண்டுகிறாள்" என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்க.

வெறும் வடிவழகு மாத்திரத்தைக்கண்டு துடிக்கிறேனல்லேன்; அகவாயில் சில குணத்தையுங் கண்டு துடிக்கிறேன் காண் என்கிறாள்—ஆசறுசீலனை என்பதனால். ஆசு என்றாலும் மாசு என்றாலும் குற்றம் என்பதே பொருள்; குற்றமற்ற சீலமாவது கலக்கும்போது தன்பேறாகவே கலந்தபடி.

பாசறவெய்தி—இதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். (1) பாசறவு என்று துக்கத்திற்குப் பெயர்; அதை எய்தி (2) பாசு அறவு—என்று பிரித்து, பாசு—பசுமை நிறமானது, அறவு—அழிந்து போவது; வைவர்ணியமடைந்து என்றபடி. (3) பாசு என்று பாசமாய் (அதாவது பற்று) பந்துக்கள் பக்கல் பாசம் நீங்கி. (4) அற என்பதற்கு 'முழுவதும்' என்றும் 'மிகவும் என்றும் பொருளுண்டாகையாலே ஸ்நேஹம் முழுவதையும் அவன் பக்கலிலேயடைந்து எனவுமாம்.

எம்பெருமான் நம்மை நாடிக்கொண்டு வரவேணுமேயன்றி நாமாக அவனை நாடுவது ஸ்வரூபஜ்ஞானத்திற்குப் போராதே யென்று சிலர் சொல்ல அறிவிழந்து எனை நாளையம் என்கிறாள். அறிவு (ஸ்வரூபஜ்ஞானம்) அடியோடே தொலைந்து எத்தனையோ நாள் ஆயிற்றே என்றபடி;

இங்கே நம்பிள்ளை வீடு: ''*மயர்வற மதிநலமருளப் பெற்ற வன்றே போயிற்றில்லையோ நம்முடைய அறிவு. திர்யக்கின் காலிலே விழுந்து தூதுவிட்டவன்று அதுஜ்ஞான கார்யம் என்றிருந்தாயோ இன்றிருந்து கற்பிக்கைக்கு. அன்றே *மதி யெல்லாமுள் கலங்கிற்றில்லையோ தன் பக்கலிலே கைவைத்தால் மற்றொன்றறியாதபடி பண்ணும் விஷயமிறே. *பேரின்ப மெல்லாந் துறந்தார் தொழுதாரத்தோள்* என்னக் கடவதிறே. *தோபஜநம் ஸ்மரந்* என்று ப்ராப்தி ஸமயத்தில் இவ்வருத்தள்ள வற்றை நினையாதபடி பண்ணுகையே யன்றிக்கே ஜ்ஞானம் பிறந்த ஸமயமே படித்தும் இவ்வருத்தள்ளவற்றை நினையாமே பண்ணவல்ல விஷயமன்றோ தன்னையுமனுஸந்தித்து லோக யாத்ரையையும் அனுஸந்திக்கும்படியோ அவன்படி'' என்பதாம்.

ஆனாலும் ஊரார் சொல்லும் பழிக்கு அஞ்சவேண்டாவோ என்ன, ஏசறுமூரவர் கவ்வை தோழீ யென்செய்யுமே என்கிறாள். ஏசு அறும் ஊரவர்—ஏசுகையிலே அற்றுத் தீர்ந்திருக்கிற ஊரார் என்றபடி ஏசுவதற்கன்றே பிறந்திருக்கிற ஊராருடைய பழி மொழிகள் நமக்கு அவத்யமோ? அதுவே நமக்குத் தாரகமன்றோ வென்கை

மடலெடுக்கிற ப்ரஸ்தாவம் இங்கு இல்லாமற் போனாலும் மேலே ''மடலூர்துமே'' என்றும் ''யாமடலூர்ந்தும்'' என்றும் ஸ்பஷ்டமாகச் சொல்லுகையாலே மடலூரும் நோக்கத்தையும் கொண்டே இவையருளிச் செய்வதாகக் கொள்க.

பின்னிணைப்பு எண்: 10

## ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் நம்பிள்ளை உரைதரும் திரண்ட கருத்து

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 1-1 | உயர்வற | இறைவனின் மேன்மைத்தன்மையைச் (பரத்துவம்சொல்லல்) |
| 1-2 | வீடுமின் | வேறு விஷயங்களின் அற்பத்தன்மை, நிலையற்ற தன்மை. அவற்றைவிட்டு இறைவனிடம் பக்திசெய்ய உபதேசம் செய்தல் |
| 1-3 | பத்துடை யடியவர் | இறைவனுடைய எளிவந்த தன்மையைக் காட்டல். |
| 1-4 | அஞ்சிறைய | ஆழ்வார் இறைவனுடைய பொறுமைக் குணத்தை நினைப்பூட்ட தூதுவிடுதல் |
| 1-5 | வளவேழுலகு | இறைவன் தன் சீலக்குணத்தைக் காட்டி ஆழ்வாரைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளல் |
| 1-6 | பரிவதிலீசன் | இறைவனது 'ஆராதனைக் கெளியவன்' என்ற திருக்குணத்தை வெளியிடல் |
| 1-7 | பிறவித்துயரற | இறைவனுடைய தன்மைகள்—இறைவன் தனக்கும் இனிமையாயிருக்கும் என்பதைக் காட்டல். |
| 1-8 | ஓடும்புள்ளேறி | மனமொழி மெய்கள் மூன்றும் ஒருபடிப் பட்டிருத்தலாகிற நேர்மை குணமுடையவன் இறைவன் என்பதைக் காட்டல். |
| 1-9 | இவையு மவையும் | இறைவன் ஆழ்வாரோடு பொறுக்கப் பொறுக்கப் பரிமாறும் வகையை எடுத்துக் காட்டல், |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 1-10 | பொருமாநீள் படை | இறைவனின் இன்னருள்—ஒரு காரண மின்றி இயற்கையானது என அறிவித்தல் |
| 2-1 | வாயுந்திரையு களும் | அடியவர்களைப் பிச்சேறப் பண்ணும் தன்மையைக் (உந்மாதா மஹத்வம்) காட்டல். |
| 2-2 | திண்ணன்வீடு | இறைவனின் அவதாரத்திலும் பரத்துவத் தைப் பற்றி உபதேசித்தல் |
| 2-3 | ஊனில் வாழுயிரே | இறைவன் ஆழ்வாரோடு வருத்தம் தீர வந்து கலந்ததனால் உண்டான இன்பத்தை அருளிச்செய்தல் |
| 2-4 | ஆடியாடி | பாகவதர்களோடே கூடிக் குலாவி அநுபவித்தலை விரும்பி அது கிடையாமை யாலே வருத்தத்தினால் பேசுதல். |
| 2-5 | அந்தாமத்தன்பு | இறைவன் ஆழ்வார் கூக்குரலுக்குச் செவி கொடுத்து அவரோடு கலவிதந்து அதனால் உண்டான மகிழ்ச்சியினால் ஆழ்வார் தன் பேற்றைச் சொல்லுதல். |
| 2-6 | வைகுந்தா மணி வண்ணனே | இறைவன் வந்து ஆழ்வாருக்குக் கலவி தந்தமையால் ஆழ்வார் தம தாழ்ச்சியை நினைத்துஅகலஎன்ன, அதனால் கலங்கும் இறைவனை ஆழ்வார் தேற்றுதல். |
| 2-7 | கேசவன் தமர் | இறைவனுக்கு ஆழ்வார் பக்கல் உண்டான மையல் தம்முடைய சம்பந்திகளளவும் ஏறிப்பாய்ந்து அனைவரையும் ஈடுபடச் செய்தல். |
| 2-8 | அணைவதரா வணைமேல் | இறைவன் எல்லார்க்கும் தலைவனா யிருந்து வீடுபேறு அளிக்கும் தன்மையுடை யவன் என்பதை ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்கு உபதேசித்தல் "பரோபதேசமும் ஸ்வாத்ம ஸந்தோஷமும் இத்திருவாய்மொழியின் ப்ரமேயம்" என்பர். |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 2-9 | எம்மாவீட்டுத் திறமும் | இறைவனிடமிருந்து பெறவேண்டிய உறுதிப் பொருளான வீடு பேற்றை அவன் உகந்தளித்தாலல்லது வேண்டா வென்ற உறுதிப்பாட்டை ஆழ்வார் தெரிவித்தல். |
| 2-10 | கிளிரொளி யிளமை | இறைவன் காட்டிக் கொடுத்த தெற்குத் திருமலையை அநுபவித்து இனியராதல் |
| 3-1 | முடிச்சோதி யாய் | திருமாலிருஞ்சோலை அழகரின் வடிவழகை அனுபவித்து. வேதங்களும், வைதிகர்களும், பிரமன் முதலான தேவர்களுக்கூட நிலையிடமாட்டாதபடி இருக்கிற இருப்பை நினைத்து இனியராதல். |
| 3 2 | முந்நீர் ஞாலம் படைத்த | கரணக்குறையின் கலக்கத்தால் இறைவனை முழுமையாக அனுபவிக்க முடியாது வருந்துதல். |
| 3-3 | ஒழிவில் காலம் | திருமலையப்பனின் திருவடிகளிலே எப்பேர்ப்பட்ட அடிமைகளையும் செய்ய வேணும்எனப்பாரித்தல் |
| 3-4 | புகழுநல் லொருவன் | இறைவனின் எல்லாப்பொருளிலும்உறைந்திருக்கும் உள்ளுறை நிலையைப் பேசுதல் |
| 3-5 | மொய்மாம் பொழில் | அவயங்களின் பயனைக் காட்டும் வகையில் இறைவனின் குணங்களில் ஈடுபடுதல் |
| 3-6 | செய்ய தாமரைக் கண்ணனாய் | இறைவனின் அர்ச்சாவதார எளிவருந் தன்மையக் (ஸௌலப்யத்தை) கூறல் |
| 3-7 | பயிலுஞ்சுட ரொளி | அடிமைத்தன்மையின் எல்லைநிலமான பாகவதர்களுக்கு அடிமையாயிருக்கும் தன்மையை நினைத்து அதன் வாயிலாக ஆழ்வாரினியராதல் |
| 3-8 | முடியானே | ஆழ்வாருடைய ஆராத காதல் அவருடைய கரணங்களாகிய வாய்த்தலைகளாலே பெருகுகிறபடியைக் காட்டல் |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 3-9 | சொன்னால் விரோதம் | துதிப்பதற்கு வாய்த்த இயல்பு, வடிவு, குணம், விபூதி ஆகியவற்றோடு கூடின இறைவனைத் துதிப்பது தவிர்ந்து மனிதர்களை, கவிபாடித் திரியுமவர்களை உபதேசத்தாலே திருத்தப் பார்த்தல்; திருந்தாமையாலே தாம் இறைவனைக் கவிபாடப் பெற்றமை பற்றிய உகப்பு காட்டல் |
| 3-10 | சன்மம் பலபல செய்து | இறைவன் திறத்து முழுமையாகத் தாம் அநுபவிக்கப் பெற்ற பரிசைப் பரக்கப் பேசுதல். |
| 4-1 | ஒரு நாயகம் | இறைவனை அடைவது தவிர மற்ற பயன்கள் யாவும் நீசத்தன்மை, நிலையற்ற தன்மை ஆகிய குற்றங்களால் கொடிதாக இருக்குமதை விரித்துரைத்தல். |
| 4-2 | பாலனாய் | என்றைக்கோ கழிந்துபோன இறைவனது தன்மைகளை அக்காலத்தில் போலவே இன்று ஆழ்வார் அநுபவிக்க ஆசைப்படுதலை தாய்பாசுரமாக வெளியிடல் |
| 4-3 | கோவைவாயாள் | இறைவன் ஆழ்வாரோடு கலந்து தன்னுடைய மிகுந்த காதல் தன்மையை வெளிப்படுத்த அதனால் ஆழ்வார் மிகவும் உவந்து அதனை வெளியிடல். |
| 4-4 | மண்ணை யிருந்து துழாவி | இறைவனுடைய சம்பந்தம்பெற்ற பொருள்களையும் இறைவனுக்குப் போலியான பொருள்களையும் கண்டு அவ்விறைவனையே கண்டதாகக் கொண்டுகளிக்கையாகிற ஆழ்வாரின் உயர்ந்த வைணவத் தன்மையை வெளியிடல். |
| 4-5 | வீற்றிருந் தேழுலகும் | இறைவன் ஆழ்வாருக்கு முற்றுட்டாகக் காட்டித் தந்து மேலும் பல்லாண்டு பாடி மகிழ்வதைச் சொல்லல். |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
| --- | --- | --- |
| 4-6 | தீர்ப்பாரை யாமினி | வேறு தேவதையின் சம்பந்த வாசனையை யும் பொறுக்கமாட்டாத ஆழ்வாருடைய உயர்ந்த வைணவத்தன்மையைத் தோழி பாசுரமாகச் சொல்லல். |
| 4-7 | சீலமில்லாச் சிறியன் | இறைவனது கலவி பெறாமையால் கேட்டாரெல்லாம் நீராம்படியாகக் கூப்பிடுதல். |
| 4-8 | ஏறாளுமிறை யோனும் | இறைவனுடைய வெறுப்புக்கிலக்கான ஆத்மா, அது ஏறிட்ட உறுப்புக்கள் ஆகியன தள்ளத்தகுந்தவை எனல். |
| 4-9 | நண்ணாதார் முறுவலிப்ப | ஆழ்வாருடைய துக்கம் பேச்சுக்கு நிலமில் லாதபடி பெருகினமையை விளங்க வைத்தல் |
| 4-10 | ஒன்றுந்தேவும் | இறைவனின் அர்ச்சாவதாரத்தில் மேன்மைத்தன்மை (பரத்துவம்) வீறுபெற் றிருத்தலைச் சொல்லல். |
| 5-1 | கையார் சக்கரத்து | இறைவனின் அருள் ஒரு காரணமுமின்றி இயற்கையானது என்பதை உள்குழைந்து பேசி அநுபவித்தல். |
| 5-2 | பொலிக பொலிக பொலிக | இவ்வுலகிலிருக்கும் ஸ்ரீவைஷ்ணவ நிறைவுக்கு வாழ்த்து பண்ணுதல் |
| 5-3 | மாசறுசோதி | மடலூரும முயற்சி வலிதாய்ச் சென்றதை உரைத்தல் (ஆழ்வாருடைய ஆசையின் மிகுதியைக் காட்டுதல். இது பதிகத்தின் உள்ளுறை). |
| 5-4 | ஊரெல்லாந் துஞ்சி | இறைவனது குணங்களை நினைத்து அந் நினைவு அவனோடு கலந்து அநுபவிக்கப் பெறாமல் பிரிவின் ஆசையாலே மிகவும் ஆற்றாமையோடு சொல்லல். |
| 5-5 | எங்ஙனேயோ அன்னைமீர் காள் | ஆழ்வார் உருவெளிப்பாடாய் திருக்குறுங் குடி நம்பியின் வடிவழகையும் திவ்வியாயுத திவ்வியாபரணச் சேர்த்தியழகையும் வாய் வெருவுதல். |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 5-6 | கடல்ஞாலஞ் செய்தேனும் | ஆழ்வார் இறைவனாகவே தம்மை அநுகரித்துச் சொல்லல். |
| 5-7 | நோற்ற நோன்பு | ஆழ்வார் தம்முடைய உண்மையான நிலைமையை வானமாமலை இறைவனது திருவடிகளில் விண்ணப்பம் செய்தல். |
| 5-8 | ஆராவமுதே | வானமாமலை இறைவன் ஆழ்வாருக்கு முகங்காட்டாமையால் வருந்தித் திருக்குடந்தை இறைவன் திறத்தும் ஒன்றும் பெறாமையால் தளர்ந்து கிடந்து கூப்பிடுதல். |
| 5-9 | மானேய்நோக்கி நல்லீர் | திருவல்லவாழ் என்கிற திருப்பதி போக ஒருப்பட்டு அவ்வூர் அருகிலுள்ள சோலைகள், தென்றல் முதலியன கண்டவாற்றால் உண்டான நோவுபாட்டைத் தோழியைக் குறித்துச் சொல்லல். |
| 5-10 | பிறந்தவாறும் | இறைவனைப் பிரிந்து நோவுபட்டாலும தரித்து நின்று குணாநுபவம் பண்ணி அருளுமாறு வேண்டிச் சரணம் புகுதல். |
| 6-1 | வைகல் பூங் கழிவாய் | இறைவன் திருவண்வண்டூர் என்கிற மலைநாட்டுத் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் படியை நோக்கி அங்கே சென்று சேரமாட்டாதே ஆழ்வார் தம்முடைய நிலைமையை அவ்விறைவனுக்குத் தெரிவிக்கும்படி தூதுவிடுதல் |
| 6-2 | மின்னிடை மடவார்கள் | இறைவனோடு நமக்குள்ள ஒன்பது வகை உறவுகளுள் கணவன்-மனைவி பரிமாறுகிற முறையைக் காட்டும வகையில் ஆழ்வாருக்கும் இறைவனுக்கும் உண்டான பரிமாற்றத்தில் ஏற்பட்ட ஊடல்நிகழ்ச்சியைக் காட்டல் |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 6-3 | நல்குரவும் செல்வும் | இறைவனின் பொருந்தாதவற்றை பொருந்தவைக்கும் ஆற்றல் படைத்த தன்மையை (அகடித கடனா சாமர்த்யம்) திருவிண்ணகரிலே காட்டிக் கொடுத்ததைச் சொல்லல். |
| 6-4 | குரவையாய்ச்சியர் | இறைவனுடைய பலபல திருவிளையாடல்களை வாயாரச் சொல்லி நன்றாக அநுபவித்து அதனால் தமக்குண்டான பூரிப்பை பெருமிடறு செய்து வெளியிடுதல். |
| 6-5 | துவளில்மாமணி மாடம் | தோழிபாசுரமாக ஆழ்வார் தம்முடைய பெருமையைத் தாமே வெளியிடல். |
| 6 6 | மாலுக்கு வையம் அளந்த | இறைவனுடைய ஒரோர் அவதாரத் திருவிளையாடல்களையும் ஓரோர் குணங்களையும் நினைக்க நினைக்க ஆழ்வார் தாம் பரவசப்பட்டு மேனி மெலிந்து ஆவி நீராய் உருகுகின்றமையைத் தாய்பாசுரமாக வெளியிடல். |
| 6-7 | உண்ணுஞ் சோறு | திருக்கோளூர் சென்று அவ்விடத்து இறைவனோடே கலந்து இருக்க வேணும் என்கிற ஆழ்வார் வருப்பத்தைத் தாய்பாசுரமாக வெளியிடல் |
| 6-8 | பொன்னுலகாளீரோ | பரிவு உண்டாகி ஆற்றாமையாலே இறைவனைக் குறித்துச் சில பறவைகளைத் தூதுவிடுதல் |
| 6-9 | நீராய் நிலனாய் | கலங்காப் பெருநகரமான வைகுந்தத்திலும் இறைவன் தரித்திருக்கமாட்டாது கால் குலைந்து வரும்படி பெருமிடறு செய்து கூப்பிடுதல் |
| 6 10 | உலகமுண்ட பெருவாயன் | திருவேங்கடவன் திருவடிகளிலே பெரிய பிராட்டியார் முன்னிலையாக ஆழ்வார் தமக்கு இறைவன் தவிர வேறு கதியில்லாமையை விண்ணப்பம் செய்து சரணம் புகுதல். |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 7-1 | உண்ணிலாவிய | இந்தப் பூமியிலிருந்தால் என்ன துன்பம் வருமோ என்று அச்சம் மேலிட்டு ஓலமிடுதல். |
| 7-2 | கங்குலும் பகலும | இறைவனைப் பிரிந்து துடித்த நிலை கலங்கிய ஆழ்வார் தாமான தன்மையை இழந்து தமதுபரிதாபத்தைத் தம்மாலேயே சொல்லமாட்டாது தாய் சொல்ல வேண்டும்படியான தளர்த்தியுண்டாக, தாய்பாசுரமாகச் சொல்லல். |
| 7-3 | வெள்ளைச் சுரிசங்கு | ஆழ்வாருடைய பதற்றம் அளவுகடந்த படியைச் சொல்லல். |
| 7-4 | ஆழியெழ | இறைவன் முன்பு செய்த அவதார வீரச் செயல்களை ஒரேகாலமாகக்கண்டுபாடல் தோறும் ஒவ்வொரு வீரச்செயலைப் பேசித் தரித்தல். |
| 7-5 | கற்பாரிராம பிரானை | இறைவனுடைய குணங்களை அனுபவிக்க இட்டுப் பிறந்தும் சம்சாரிகள் வேறு விஷயத்தில் ஊன்றியிருப்பது என்னோ என்று வியந்தும் தம் திருவுள்ளம் நொந்துப் பேசுதல் |
| 7-6 | பாமருமூவுலகும் | இறைவன் முழுமையாக் அனுபவிக்கப் பெறாமையாலே உண்டான துக்கம் பரமபத நாதனுடைய திருச்செவி அளவும் படும்படியாகப் பெருமிடறு செய்து கூப்பிடல். |
| 7-7 | ஏழையராவி | இறைவனுடைய உருவெளிப்பாட்டிலே துக்கம் மேலிட்டு ஆற்றமாட்டமையாலே அலமாந்து பேசுதல். |
| 7-8 | மாயா வாமனனே | இறைவன் தன்னுடைய வேறு வேறு விதமான விபூதித் தன்மையைக் காட்டியருள அது கண்டு ஆழ்வார் வியந்து பேசுதல் |
| 7-9 | என்றைக்கும் | இறைவன் ஆழ்வாரைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக் கொண்ட பேருதவிக் கைம்மாறு என்றும்காணோமே தடுமாறினதைச்சொல்லல் |

| பாசுர எண் | பதிகத் தொடர் | திரண்ட கருத்து |
|---|---|---|
| 7 10 | இன்பம்பயக்க | இறைவன் பாரிப்பதற்கேற்பத் திருவாறன் விளைத் திருப்பதியின் சென்று திருவாய் மொழிகேட்பித்தலாகிற கைங்கர்யத்தைச் செய்யப் பாரித்தல். |
| 8-1 | தேவிமாராவார் | பாரித்தபடி நிறைவேறப் பெறாமையால் இறைவனின் திருக்குணங்களில் சந்தேகித்த ஆழ்வார் பிறகு ஒருவாறு தேறிக் குணங்களைச் சொல்லுதல். |
| 8-2 | நங்கள்வரிவளை | ஆத்மாவிலும் உடைமைகளிலும் ஆழ்வார் நசையற்ற படியை இறைவன் திருவுள்ளத்திலே படுத்த நினைத்து அதை நேராக விண்ணப்பம் செய்யாமல் தோழியோடு உரையாடலாக அறிவித்ததைச் சொல்லல். |
| 8-3 | அங்குமிங்கும் | இறைவனுடைய திவ்விய மங்களத் திருமேனியை நினைத்துப் பயந்து, அப்பயம் தீர அவர் ஒரு குறைவற்றவன் என்பதைக் கண்டு அச்சம் தீர்ந்தபடியையும் சொல்லல். |
| 8-4 | வார்கடாவருவி | திருச்செங்குன்றூர் திருச்சிற்றாறு இறைவனது வடிவழகிலே ஈடுபட்டு அநுபவித்து உகந்தபடியைத் தெரிவித்தல் |
| 8-5 | மாயக்கூத்தா | இறைவனது வடிவழகைக் கண்ணாரக் கண்டு அநுபவிக்க ஆசைபிறந்து அது பெறாமையாலே மிக்கதுக்கத்தோடு தலைக் கட்டுவதைச் சொல்லல் |
| 8-6 | எல்லியுங் காலையும் | இறைவன் தம்பக்கல்பண்ணுகிற மையலை நினைத்து ஆழ்வார் இனியராய் அதனைப் பேசி அநுபவித்தல். |
| 8-7 | இருத்தும் வியந்து | ஒரு சம்சாரி சேதனன் பக்கலில் இறைவன் தானே செய்தருளும் விஷயத்தில் ஈடுபட்டதைச் சொல்லல். |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 5-2-2 | ஆர்த்தும் | கோலாஹலம் பண்ணுவோம் |
| 6-1-7 | ஆற்றல் | நோவுபாடு |
| 1-1-5 | ஆனை | யானை, குதிரை முதலானவை |
| 4-4-6 | ஆன்கன்று | பசு ஈன்ற கன்று |
| 6-4-5 | இகல் | துக்கம், விரோதம், குறை |
| 6-3-9 | இகுளாய் | தோழியாய்; செவிலித்தாய் |
| 4-7-7 | இடறுதல் | சிலேசப்படுதல் |
| 5-2-3 | இரிய | இருந்த இடத்திலில்லாமை |
| 1-5-10 | இருவல்வினை | இரு என்று பெருமையைச் சொன்னபடியால் மிகப் பெரிய கொடிய பாபங்கள் |
| 1-2-4 | இல்லது | இல் வீடு, வீடாகவுள்ளது |
| 1-3-6 | இழிந்து | கீழ்நிலங்களில் வியாப்தி |
| 4-1-10 | இறுகல் | ஸங்கோசம் |
| 7-3-0 | ஈண்டென | சடக்கென |
| 2-2-2 | ஈதல் | அழிதல் |
| 2-8-10 | ஈர்மை | ஈரம், மனவிரக்கம் |
| 7-7-11 | உட்கு | சக்தி |
| 1-3-5 | உணர்வு | உணர்வுக்கு உறுப்பான |
| 4-7-1 | உண்ணாத | தடுப்புண்ணாத |
| 1-3-6 | உயர்ந்து | மேல்நிலங்களில் வியாப்தி |
| 9-2-7 | உலகர் | பரபோகைச்வர்ய காமரான ஸ்வதந்த்ரர் |
| 3-1-5 | உலக்க | முடிய |
| 5-8-4 | உலப்பு | முடிவு |
| 10-6-1 | உளுக்கினபடி | வருந்தியபடி |
| 1-2-4 | உள்ளது | உள்ளேயிருப்பது |
| 9-3-4 | உள்ளது | யுக்தம் |
| 3-2-11 | உறாவி | வாடி |
| 4-3-4 | உறாவு | வாடுகிற |
| 6-2-8 | ஊளர் அளர் | ஊரார் அஞ்சுதல் |
| 4-6-9 | ஊழ்மையின் | முறைப்படியே |
| 4-6-2 | எயில்பெறும் | வார்த்தை சொல்லப்பெறுவன் |
| 5-8-9 | எரியே | கேட்டை நட்சத்திரத்திற்குப் பெயர் |

| பாடல் எண் | திபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 1-1-1 | எழு | அதோகதியடைவதைத் தவிர்ந்து உயர்கதி |
| 6-8-8 | ஏசறு | துக்கப்படு |
| 1-1-5 | ஐயன்பாழி | சாஸ்தா என்கிற தெய்வத்தின் கோவில் |
| 1-2-8 | ஒடுங்குதல் | அந்வயித்தல் |
| 5-8-8 | ஒருங்கு | நிலையாக (நிரந்தரமாக) |
| 3-5-10 | ஒருமை | ஒருபடிப்பட்ட |
| 2-5-2 | ஒருவிடமும் | நீங்கின விடமும் |
| 1-3-7 | ஒன்ற (அடி 3) | நிஷ்பக்ஷபாதமாக |
| 4-10-1 | ஒன்றுதல் | பொருந்துதல் |
| 4-4-3 | ஒன்றே | பல |
| 4-1-1 | ஓட | நெடுங்காலம் வரையில் |
| 4-6-1 | ஓர்ப்பு | ஆராய்ச்சி |
| 5-4-7 | கங்கு | எல்லை நிலமாகச் செறிந்த இருள் |
| 4-7-9 | கடவனாகி | ஒரு நியமத்தோடே கடினவாகி |
| 3-1-1 | கடி | இடுப்பு |
| 4-9-1 | கடியன் | தன்னுடைய காரியத்திலே கணவேக முடையவன் |
| 4-2-11 | கண்ணாஞ் சுழலை இட்டு | கண்கழன்று |
| 6-10-8 | கப்படம் | ஏழைத்தனத்தை |
| 1-1-7 | கரந்து | ஒருவருக்கும் தெரியாமல் |
| 1-1-10 | கரண் | திடமாக உள்ளவன் |
| 4-1-1 | கருநாய் | கருக்கொண்டிருந்த நாய்; குட்டியிட்ட நாய் |
| 4-9-2 | கலவர் | மரக்கலத்திருப்பவர் |
| 6-2-6 | கழகம் | குழு, கோஷ்டி |
| 7-7-10 | கழறுதல் | மனம் நோகும்படி பேசுதல் |
| 3-9-3 | கழிய | மிகவும் (அத்யந்தம்) |
| 4-6-7 | கழுது | பேய் |
| 6-6-5 | கற்பு | கல்வி; ஞானம் |
| 6-2-6 | கன்மமொன்றில்லை | யாதொரு லாபமும் (பயனும்) இல்லை |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 3-8-10 | காணிய | காண்கைக்காக |
| 6-7-8 | காரிகை | அழகுடைய பெண் |
| 2-10-5 | கிறி | சிறந்த உபாயம் |
| 4-8-6 | கிறி | ,, |
| 5-3-9 | குதிரி | நாணாப் பெண்; அடங்காப்பெண் |
| 4-1-2 | குமைதின்பர்கள் | ஹிம்சைப்படுவார்கள் (துன்பம்) |
| 3-6-3 | குழகன் | ஒருநீராகக் கலப்பவன் |
| 4-1-9 | குறுகுதல் | அணுகுதல் |
| 4-8-1 | குறைவிலம் | குறைவு-அபேக்ஷிதம் (வேண்டும்); அது உடையோமல்லோம்; வேண்டியதில்லை என்றவாறு |
| 1-10-4 | குறைவினம் | குறையுடையோம் |
| 4-9-2 | கூமாறு | கூவுமாறு |
| 6-1-1 | கூழைமை | குழைந்து நடத்தல் |
| 3-6-9 | கூழ்ப்பு | ஸம்சயம் |
| 6-4-2 | சேயம் | சிறப்பு |
| 1-9-7 | கேள் | உறவு, பொருத்தம் |
| 5-3-5 | கொடியன் | (இத்தலையிலே நோவு பாராது) பிரியுமவன் |
| 1-8-7 | கொண்டான் | ஜயித்தான் |
| 4-2-2<br>6-7-4 | கொல்லாமை | வரம்புகடந்த செயல் (தூர்த்தாயிதம்) |
| 4-2-2 | கோதை | மயிர்முடி; பூமாலை |
| 8-10-11 | கோட்டை | 21 மரக்காலளவு |
| 4-1-7 | கோமின் | அனுபவியுங்கள் |
| 5-6-9 | கோலம் | அழகிய தன்மை |
| 5-6-9 | கோலுதல் | முயலுதல் |
| 3-5-4 | கோகு | அடைவுகேடு; அக்கிரமம் |
| 5-3-9 | கோணை | மிறுக்கு |
| 6-2-8 | கோயின்மை | அரசனில்லாமை |
| 3-8-3 | கோள்விடுத்து | தேஜஸ் (புகர்) ஸைப் புறப்படவிட்டு |
| 4-2-2 | கோள்வினை | முடித்தல்லது விடாத பாவம்; அனுபவித்தே அறவேண்டிய பாவம் |
| 6-2-5<br>6-3-4 | கைதவம் | மாயச்செயல்; பொய் |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 5-4-8 | கைவந்த | விதேயமான |
| 1-8-8<br>6-6-1 | சங்கு | கணக்கையுடைதல்; வளை |
| 8-10-9 | சதிர் | பெருமை |
| 1-8-3 | சந்தி | ஆராதனை |
| 4-6-9 | சம்பறுத்தார் | சம்பு-கோரைவகை |
| 6-6-7 | சாயே | சாயை-ஒளி |
| 4-8-4 | சறையினார் | தாழ்வு; சறாம்பியிருக்கை (உடம்பைப் பேணாதிருக்கை) |
| 6-1-6 | சிலாக்கு | ஈடு |
| 6-2-7 | சிலுகிட்டு | சண்டையிட்டு |
| 2-9-4 | சிறப்பு | முக்தி, செல்வம், நன்றி |
| 5-10-8 | சிறுச்சேவகம் | இளம்பிராயத்திலே காட்டின விக்கிரமம் |
| 4-10-2 | சீர் | குணம் |
| 3-1-7 | சூழ்த்து | ஒவ்வொருவர் ஒவ்வொரு குணத்தை வருணிப்பதாக வைத்துக்கொண்டு; திரள் திரளாக |
| 1-9-5 | செக்கம் | மரணம்; கோபம்; சிவப்பு நிறம் |
| 5-8-4 | செலக்காண்கிற்பார் | செல்லச்செல்ல |
| 3-2-11<br>4-8-11 | செயிர் | குற்றம் |
| 5-6-4 | செய்ய | கபடமறியாமல் ருஜுவான (நம்பத் தகுந்த) |
| 6-1-7 | செரு | யுத்தம் |
| 4-10-10 | செறு | விளைநிலம் |
| 1-5-3 | சேயோன் | தூரத்திலிருப்பவன் |
| 6-2-9 | தகவு | இரக்கம் |
| 4-3-1 | தடல் | வலிமை; கொலை |
| 4-9-1 | தன்னாவாது | விளம்பரம் செய்யாமல், தன்னாத்தல்—தாமதித்தல் |
| 6-5-11 | தவளவொண் சங்கு | தவளம்—வெண்ணிறமுடையது |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 6-2-7 | தன்மபாவம் | தன்மம்—தர்மம் |
| 2-6-1 | செய்குந்தாவரும் | தப்ப முடியாத |
| 1-3-8 | திரிபுரம் | திரிந்து கொண்டிருந்த பட்டணங்கள் |
| 1-10-4 | துஞ்சுதல் | உறங்குதல் |
| 1-9-6 | துயக்கு | சந்தேகம் |
| 9-8-6 | துரிசு | க்ருத்ரிமம் (பொல்லாத செயல்) |
| 7-8-7 | துலை | எடை |
| 2-6-8<br>2-7-8 | துழதி | அலமாப்பு; ஆயாஸம் |
| 4-6-1 | துழாய் | துழாவி (ப்ரமித்து) |
| 6-5-11 | துவள் | குற்றம் |
| 6-8-8 | தூவி | சிறகு |
| 10-5-10 | தெகுடாடி | திண்டாடி |
| 5-7-5 | எவ்வதெவ்வத் துளாயுமாய் நின்று | தெவ்வம் என்று எதிரிப்படைக்குப் பெயர் |
| 1-3-2 | தெளிதரு | தெளிவே வடிவெடுத்திடுமிடம் |
| 4-6-1 | தேறினோம் | தெளிவு பெற்றோம் |
| 5-4-8 | தைவந்த | தடவுகின்ற |
| 1-5-1<br>3-8-3 | தொடுவுண்ட | களவினால் உண்ட |
| 1-4-4 | தொடுவுழி தொடுவுழி | தொட்ட இடங்கள் தோறும் |
| 4-4-5 | தொலைவன் | சோர்வேன் |
| 3-1-9 | தொழும்பு | அடிமை |
| 4-2-8 | நம்பும் | விரும்பும் |
| 6-3-1 | நல்குரவு | ஏழைமை |
| 1-4-4 | நன்னீர்மை | நல்லுயிர் |
| 4-10-2 | நாடுதல் | தேடுதல் |
| 1-6-7<br>4-6-9 | நாழ் | பாபம்; அவத்யம் |
| 4-10-11 | நிமிகிற | அசைகிற |
| 4-9-10 | நிலாநிற்ப | அழகுற நிற்ப |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 1-5-5 | நிறத்தில் | அவ்விதமாக |
| 4-8-1 | நிறைவினால் | நிறைவு—அடக்கம் |
| 1-4-8 | நீ அலையே | நீ இதுவரையில் இருந்த மாதிரி இல்லையே |
| 5-4-6 | நெஞ்சம்பெரிது சுடும் | நெஞ்சை மிகவும் நோவு படுத்து கின்றது |
| 5-3-5 | நெடியமால் | மிகவும் பெரியவன் |
| 1-8-11 | நேர்தல் | சொல்லுதல் |
| 5-10-9<br>10-5-11 | நொடிதல் | சொல்லுதல் |
| 10-1-9 | பஜிக்க | அடைய |
| 6-2-6 | படிறு | கொடுமை |
| 1-7-9 | படிந்து | உட்புகுந்து |
| 4-9-4 | பண்டாரம் | பெட்டி; களஞ்சியம் |
| 4-6-5 | பரப்பு | நிற வேறுபாடு |
| 1-1-4 | பரத்தலான் | வியாபிக்கிறபடியினால் |
| 6-2-6 | பரமே | பொறுக்கப்போமோ |
| 4-6-7 | பராவி | பாரித்து |
| 1-6-11<br>4-2-1 | பரிவுஇன்றி | துயரம்; வருத்தம் |
| 2-2-5 | பலர்கொள் | பரம்பின; பரப்பைக் கொண்ட |
| 6-8-8 | பாசு | பசுமை |
| 6-4-3 | பாடகம் | பாடு-பெருமை |
| 3-2-8 | பாவுதல் | பரவுதல் |
| 4-2-2 | பாவை | பதுமை |
| 4-3-2 | பாழ்த்த | பொல்லாத |
| 4-9-7 | பிணி | தாரித்ரியம் (தரித்திரம்) |
| 1-7-6 | பிரான் | பிறர்க்கேயாயிருப்பவன் |
| 4-4-9 | பிற்கூழை | பின்னணி; பின்வரிசை |
| 2-10-4 | பீடு | பெருமேன்மை |
| 7-3-0 | புரிந்து | திரும்பி |
| 4-4-9 | புலம் | அழகிய |
| 4-4-2 | பூரித்தன | நிறைு விளங்கின |
| 1-4-8 | பூவை | நாகணவாய்ப்புள் |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 4-3-1 | பூவை வீ | பூவை பூ; வீ—பூவுக்குப் பெயர் |
| 3-8-10 | பேதுற்ற | பைத்தியம்; அறிவு கலங்கிய |
| 5-3-4 | பேரமர்க்காதல் | பேர்—பெரியதாய், அமர்—அமர்ந்த தான, காதல் என்று பொருள் அமர்—பூசல் |
| 1-10-1 | பொரு | தம்மிற் தாம் போர் செய்கிற |
| 2-6-1 | பொல்லா | தீதற்ற |
| 6-6-10 | பொற்பு | அழகு |
| 1-1-5 | போர்க்கு உரித்தாமன்று | யுத்தஞ் செய்ய உபயோகப்படுமே யானால் |
| 6-3-10 | மடங்குதல் | ஒய்தல் |
| 1-9-6 | மயக்கு | விபரீத ஞானம் |
| 4-4-10 | மயற் பெருங் காதல் | பேரன்பு |
| 3-4-3 | மறு | ஸ்ரீவத்ஸமென்கிற மயிர்ச்சுழி |
| 2-10-5 | மறுவில் வண் சுனை | பாசி, சேறு முதலிய களங்கமில்லாத சுனை |
| 5-10-11 | மாகம் | மஹாகம்—பரமாகாசம்; பரமபதம் |
| 4-2-5 | மாதர் | அழகு; அழகுடையவள் |
| 6-4-1 | மாய வினைகள் | அற்புத சேஷ்டிதங்கள் (திருவிளையாடல்கள்) |
| 6-4-2 | மாயா | ஸங்கல்பஜ்ஞானம்; ஆச்சரியம்; க்ருத்ரிமம் எனப் பலபொருள் படும். |
| 4-7-11 | மாறன் | ஸம்ஸார நிலைக்கு மாறாக இருந்தவர்; ஸம்ஸாரத்தை மாற்றினவர் |
| 10-9-4 | மானாவி | மஹாநவமி |
| 4-10-11 | மிடைந்து | வருந்தகில்ல |
| 4-4-6 | மீடுபடுத்தவல்ல | வருநதவல்ல |
| 3-1-10 | முறையால் | பர்யாயந்தோறும் |
| 1-4-3 | முன (3வது அடி) | எனக்குத் தெரியாத காலம் முதலாக |
| 4-8-0 | மூக்கின்று | வீங்கும்போது |
| 10-8-3 | மூலையடிவழி | குறுக்குவழி |
| 4-8-8 | மேகலை | வ்ருமபத்தக்க வஸ்திரம் (துணி) |
| 3-6-6 | மையல் | அன்பு |

| பாடல் எண் | தீபிகையில் வந்த சொல் | பொருள் |
|---|---|---|
| 4-4-6 | மையாத்தல் | மோஹித்தல் |
| | மோம்பழம் | மோந்துகொண்டிருக்கும் எலுமிச்சம் பழம் |
| 6-3-7 | வரங்கொள் பாதம் | உயர்ந்த |
| 5-1-5 | வரிந்து | கோலம்செய்து |
| 3-8-11 | வலம் | பெலம் (பயன்) |
| 2-10-8 | வழக்கு | நியாயம் |
| 3-10-7 | வான் | சிறந்த |
| 4-4-5 | வான்கன்று | திவ்வியமான கன்று |
| 3-9-3 | வான்கறி | திவ்வியமான கவி |
| 1-7-5 | விடவு | பெண்டிர்பால் தூர்த்தனஞ் செய்பவன் விடன்; தன்மை |
| 2-6-7 | விடியாவெந் நரகம் | ஸம்ஸாரம் |
| 5-4-8 | விடுநகம் | இட்டிக்கோல் |
| 1-4-4 | விடுவுழி விடுவுழி | விட்டவிடங்கள் தோறும. |
| 9-1-5 | விபாகத்தில் | கடைசியில் |
| 10-3-2 | வீசுதல் | ஒழிதல் |
| 4-5-3 | வீவில் | அவிச்சிந்நமான ஆனந்தம் (எப்போதும் பிரிவில்லாத பேரின்பம்) |
| 4-4-8 | வீழ்தல் | மோஹித்தல் |
| 4-4-8 | வெருவிலும் | வீழ்விலும் |
| 4-2-11 | வெளளகேடு | நறம்கேடு |
| 6-9-8 | வெறி | பரிமளம் |
| 1-5-4 | வைகுந்தன் | திருநாட்டைத் தனக்கு நிலமாக உடையவன் |

பின்னிணைப்பு எண் : 16

# திருவாய்மொழி மூலபாடம் (1952) முன்னோர் மேற்கொண்ட பாடம், சுவாமிகள் தழுவிய பாடம், அதன் காரணங்கள்

| பாடல் எண் | கா கோ. மூல பாடம் | முன்னோர்கள் பாடம்/பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 1-1-1 | எவனவன் | யவனவன் (12, 24, 36) | யவனவன் | யாவன் 'யவன்' எனக் குறுகியது |
| 1-2-1 | வீடுசெய்மினே | வீடுசெய்மினே (12, 36) வீடுஇசைமினே (24) | இருண்டும் உயர்ந்து | — — |
| 1-3-3 | உயர்ந்து | உயர்ந்து (24, 36) உயர்ந்த (12) | | |
| 1-3-8 | வணங்கி | வணங்கி (24, 36) வணங்கின் (12) | வணங்கி | வணங்கிஎன்றது எச்சத்திரிபாய் வணங்க என்றபடி. வணங்கின் என்றபாடத்தில் இங்ஙனம் கொள்ள வேண்டிய அருமையில் ஆதலின் அது பாடமன்று |
| 1-3-11 | குற்றேவல் | குற்றேவல்கள் (12, 24, 36) | குற்றேவல்கள் | ... |

| பாடம் எண் | காலேஜ் மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பட பேதம் | சிவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 1-4-2 | விதியினமே | விதியினனே (36) விதியினமே (12, 24) | விதியினமே | விதியினனே (பாபத்தை உடையேனான நான்) என்றும் ஒரு பாடமுண்டாம். |
| 1 4-10 | முதலாய் முற்றுமாய் | முதலாமுற்றுமாய் (24 36) முதலாய் முற்றுமாய் (12) | முதலா முற்றுமாய் | உடலாதிப் பிறப்புவீடு முதலான முற்றும் ஆவதற்காக என்று கொள்க. |
| 1-5-1 | நினைந்து நைந்தே | நினைந்து நைந்தே (12, 24, 36) இனைந்து நைந்தே (12) | நினைந்து நைந்தே | ... |
| 1-5-6 | நோக்கின் | நோக்கி (24, 36) நோக்கின் (12) | நோக்கி | ... |
| 1-6-1 | புரிவதுவும் புகைபூவே | புரிவதுவும் புகைபூவே 12,24,36 புரிவதுமாவதுபூவே (12) | புரிவதுவும் புகைபூவே | |
| 1-6-2 | மதுவார் | வதுவார் 36 மதுவார் 12, 24 | மதுவார் | வதுவை-மணந்த வது என்றது கடைக்குறை. |

| பாடல் எண் | கா லே மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 1-6-4 | கொள்கையினானே | கொள்கையினானே 12, 24, 36 | கொள்கையி | கொள்கலனானே என்பது 6 படி பாடம் |
| 1-6-7 | நாட்கடலை | நாட்கடலை 12, 24 36, நாழ் கடலை 24 36 | நாட் கடலை | ,, |
| 1-7-8 | மகிழ் பீடுடை | மகிழ்பீடுடை 24, 36 மகிழ்ப் பீடுடை 12 | மகிழ் பீடுடை | ,, |
| 1-7-8 | முழு முதல் தானே | முழு முதலானே 12, 24, 36 | முழு முதலானே | ,, |
| 1-7-10 | நிகரிலவன் புகழ் | நிகரிலவன் புகழ் 12, 24, 36 | நிகரிலவன் புகழ் | நிகரிலவன் புகழ் 6 படி பாடம் |
| 1-9-6 | அதுவே | அதுவே 12, 24, 36 | அஃதே | ,, |
| 1-10-4 | மஞ்சனை | மைந்தனை 12, 24, 36 | மைந்தனை | ,, |
| 1-10-5 | வாய்க்கின்று | வாய்க்கின்று 24, 36 வாய்க்கின்ற 12 | வாய்க்கின்று | ,, |
| 2-1-7 | கனையிருளே | கனையிருளே 12, 24, 36 | கனையிருளே | கனவிருளே என்றும் பாடம் கனை என்னும் வடசொல் விகாரம். கனை என்று வினைப் பகுதியுள்ளது |

| பாடல் எண் | கோ. மூல பாடம் | முன்னோர்கள் பாடம்/பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 2-5-1 | வாழ்முடி | வாழ்முடி 24, 36 வாண்முடி 12 (பா24,36) | வாண்முடி | ஆளவந்தார் பொருளாட்சியின் படி வாள்-முடி |
| 2-5-9 | அமுதும் | அமுதம் 24,36 | அமுதம் | நல்லமுதம்— பரம போக்யன் என்றபடி சரீரத்தோடு ஆத்மாவையும் நோக்குகின்ற அம்ருதம் என்க |
| 2-6-3 | பான்மை யேய் | பான்மையேய 24, 36 பான்மையேய் 12 | பான்மையே | ,, |
| 2-7-1 | கிழுமேல் | கிழ்மேல் 12, 24, 36 | கிழ்மேல் | ,, |
| 2-7-11 | வெற்பினன் | வெற்பன் 12, 24, 36 | வெற்பன் | ,, |
| 2-8-4 | அசுரரைச் செற்றான் | அசுரரைச் செற்றான் 12, 24, 36 | அசுரரைச் செற்றான் | ,, |
| 2-9-9 | எம்வானவ ரேறே | எம்வானவரே றே 24,36/பா. 12 அவ்வான வரேறே 12 | எம்வானவ ரேறே | ,, |
| 2-9-10 | தேறேல் | தேறேல் 12, 24, 36 தேறேன் பா/24, 36 | தேறேல் | தேறேன் என்னும் போது தெளிவில்லாமலிருக்கின்றான் |

| பாடல் எண் | கா வே மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| | | | | றும், உன்னை விட்டுத் தரித்திருக்க மாட்டாத என்னை என்றும் பொருள் |
| 2-10-1 | தளர்வில ராகில் | தளர் விலராகில் 36 தளர் விலாராகி 12 24 | தளர்வில ராகி | — |
| 3-1-4 | வைத்தாய் | வைத்தாய் 24 36 வைத்தால் 12 | வைத்தாய் | — |
| 3-1-9 | அலமர்கின் றேன் | அலமருகின் றேன் 12, 24, 36 | அலமருகின் றேன் | ... |
| 3-3-3 | தெண்ணி றைச்சுனை | தெண்ணிறைச் சுனை 24, 36 தெண்ணிறச்சுனே 12 | தெண்ணி றைச்சுனே | தெண்ணிறைச் சுனை : இப்பாடத்தில் சுனை என்று இயல்பாக வேண்டி யிருக்க நிறைச்சுனை என்றுசகரமிரட்டித்ததுஎங்ஙனே என்னில் நிறை என்பதைவினைப் பகுதியாகக் கொள்ளாமல் முதனிலைத் தொழிற் பெயராகக் கொண்டு நிறை தலையு |

| பாடல் எண் | ஏட்டு மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| | | | | டைய என்று பொருள் கொள்ளுமளவில் வல்லொற்றுமிகுதல் பொருந்து மென்ப. |
| 2-10-4 | கோகு கட்டு | கோகு கட்டு 12, 24, 36 கோகுகொட்டு பா.12 | கோகு கட்டு | கோகு- அடைவு கேடு அதாவது அக்கிரமம் |
| 3-6-11 | எம்மானை | எம்மானை 24 36, அம்மானே 12 | எம்மானை | ... |
| 3-6-6 | ஏற்றையே | ஏற்றையே 12, 24, 36 | ஏற்றையே | — |
| 3-6-9 | கூழ்ன்மின் | கூழ்ன்மின் 12, 24, 36 | கூழ்ன்மின் | எதிர்மறைஏவல் பன்மை வினை முற்று |
| 3-6-11 | பயின்மினே | பயிலுமினே 12, 24, 36 | பயிலுமினே | — |
| 4-1-9 | கழல் | கழல்கள் 12, 24, 36 | கழல்கள் | ... |
| 4-1-11 | உய்யத் பாலரே | உய்யற்பாலரே 12, 24, 36 | உய்யத் பாலரே | உய்யப் பாலரே என்ற பாடத்திலும் உய்யத் பாலரே என்ற பாடம் நலம். |

| பாடல் எண் | கா கோ மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சிவாமி தழுவிய பாடம் | அதன்காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 4-1-11 | கொய்பூம் பொழில்சூழ் குருகூர்ச்சட கோபன்குற்றே வல்கள் | குற்றேவல் 24 36 'சூழ்' இராது குற் றேவல்கள் 12 | குற்றேவல் | ... |
| 4-3-11 | மண்ணாடே | மண்ணாடே 24, 36 மண்ணோடே 12 | மண்ணாடே | ,, |
| 4-4-8 | வீழ்விலும் ஓவா | வீழ்விலும் ஓவா 24, 36 ஓவாள் 12 | வீழ்விலும் ஓவா | ,, |
| 4-4-8 | கழல் | கழல்கள் 12, 24, 36 | கழல்கள் | ,, |
| 4-4-10 | நோக்கும் | நோக்கும் 12, 24, 36 | நோக்கும் | நோக்கி (6) |
| 4-4-11 | நிலனிடை | நலனுடை 24, 36 நலனிடை 6, 12 | நலனுடை | இரண்டு பாட மும் ஒக்கும் |
| 4-5-3 | நிகழ்ந்தனை | நிகழ்ந்தனன் 24, 36 நிகழ்ந் தனை 12 | நிகழ்ந்தனன் | — |
| 4-7-10 | அலர்ந் தேன்அலந் தேன் | அலந்தேன் 24, 36 | அலந்தேன் | அலர்ந்தேன் என்னும் பாடம் பிழையுடைத்து |
| 4-5-7 | எனகுறை? | என்னகுறை | என்னகுறை? | — |

| பாடல் எண் | கா கோ மூலபாடம் | முன்னோர்கள் பாடல் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 4-6-7 | சுணங்கை | சுணங்கை 12 24,36 துணங்கை 12 | சுணங்கை துணங்கை | சூர்ணம் என்ற வடி வட சொல் சுணம் (சுண்ணம்) —மஞ்சட்பொடி துணங்கையென்ற கூத்து |
| 4-6-6 | பொழுதில்லை | பொழுதில்லை 12,24, 36 பொழுதின்றி பா 12 | பொழுதில்லை (மூலம்) பொழுதின்றி (உரை) | — |
| 4-7-11 | சொல்வழுவிலாத | சொல்வழுவிலாத 12,24,36 | சொல்வழுவிலாத | ... |
| 4-8-5 | கவிமலர்த் துழாய் | களிமலர்து ழாய் 12,24,36 | களிமலர்த் துழாய் | ... |
| 4-9-8 | கோட்டையினில் | கோட்டையினில் 24, 36 கோட்டையினை 12 | கோட்டையினில் | — |
| 4-9-9 | அஃது அறிவன் | அது அறிவன் 12, 24,36 | அஃதறிவன் | — |
| 4-7-7 | இடறும் | இடறும் 12, 24, 36 | இடறும் | இ[illegible]ரும் என்று பல ப்ரதிகளில் காண்பது தப்பு |
| 4-10-1 | மற்றைத் தெய்வம் | மற்றைத் தெய்வம் 24, 36 மற்றுளத் தெய்வம் 12 | மற்றைத் தெய்வம் | — |

| பாடல் எண் | ஏடோ மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 4-10-5 | வலிந்து | மலிந்து 12 | மலிந்து | 12 படியைப் பின்பற்றிய படி. |
| 4-10-8 | மற்றைறத் தெய்வம் | மற்றைறத் தெய்வம் 24, 36 மற்று எத் தெய்வம் 12 | இரண்டும் | ... |
| 4-10-9 | அவையாகிய | அவை யாகிய மற்றும் 24, 36 அவையாகி யும்மற்றும் 12 | ,, | ... |
| 5-1-2 | கூத்து | கூத்து 24, 36 கூற்று 12 | கூத்து | பொய்யுரைதல் |
| 5-1-4 | கூவியருளாய் | கூவியருளாய் 12, 24, 36 | கூவியருளாய் | ... |
| 5-2-7 | உய்யக் கொள் | உய்யக்கொள் 24, 36 உய்யக் கொளும் 12 | உய்யக் கோள் | பொருத்தமான பாடம் |
| 5-3-4 | பேரமர் காதல் | பேரமர்காதல் 24, 36பேரமர் காதல் 12 | பேரமர் காதல் | அமர்ந்த காதல் என்னும்பொரு ளில் வினைத் தொகையாகக யாலே இயல் பாம் |
| 5-3-11 | குருகூரவர் | குருகூர்ச் சட கோபன் 24, 36, குருகூர்ச் சடகோபன் 12 | குருகூர்ச் சடகோபன் | — |
| 5-3-7 | அம்மானை | அம்மானை 24, 36 எம் மானை 12 | அம்மானை | — |

| பாடல் எண் | கா கோ மூலபாடம் | முன்னோர்கள் பாடல் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 5-4-6 | இந்நின்ற நீளாவி | இ ந் நி ன் ற நீளாவி 24,36 எ ந் நி ன் ற நீளாவி 12 | இந் நின்ற நீளாவி | |
| 5-4-10 | சென்றுருகி | செ ன் று ரு கி 24, 36 சென் றுருகும் 12 | சென்றுருகி | ... |
| 5-4-11 | ஆயிரத்திப் பத்தால் | ஆ யி ர த் து ளிப் பத்தால் 24, 36, 12 | ஆ யி ர த் துளிப் பத் தால் | — |
| 5-5-4 | தேன் கொ ள் சோலை | தேன் கொள் சோலை 12, 24, 36 தேங் கொள் சோ லை பா. 12 | தேங்கொள் சோலை | ... |
| 5-5-8 | மொ ய் ய நீள்குழல் | மொய்ய நீள் குழல் 24, 36 மொய்கொள் நீள்குழல் 12 | மொ ய் ய நீள்குழல் | — |
| 5-6-11 | உ ல கி ல் ஏந்து | ஏந்து 12, 24, 36 | ஏந்து | ஏத்து என்பது எதுகை நோக்கி ஏந்து என்று திரிந்தது |
| 5-8-11 | ச ர ணாக் கொண்ட | ... | சரணாகக் கொண்ட | — |
| 5-3-11 | சொ ன் ன நிரை | சொ ன் ன நிரை 12, 24, 36 சொன்னி ரை 6 | சொ ன் ன நிரை | |

| பாடல் என் | காகோ மூலபாடம் | முன்னோர்கள் பாடல் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| | ஓராயிரத்துள் | ஓராயிரத்துள் 12, 24, 36 அந்தாதியாயிரத்துள் 6 | ஓராயிரத்துள் | |
| 5-7-8 | பகற் கதிர் | பகர்க் கதிர் 12, 24, 36 பகற்கதிர் பா 24, 36 | இரண்டும் | 1. மிக்க ஒளியையுடைய 2. பகல் என்று ஸூரியனுக்கும் பேராகையாலே ஸூரிய மண்டலத்தளவும் செல்லவுயர்ந்து ஒளியையுடைய மணிமாடங்கள் என்றபடி. |
| 6-4-1 | தவிர்கிலென்ன குறைவெனக்கே | தவிர்கிலம் என்ன குறை எமக்கு 12 தவிர்கிலம் என்ன குறை எனக்கு 24, 36 | தவிர்கிலம் என்ன குறைஎனக்கு 12 | ... |
| 6-6-4 | தூது செல் | தூதுசெய் 12 தூதுசெல் 24, 36 | தூதுசெல் | ... |
| 6-8-8 | அருள்செய்தொருநாள் | அருள் செய்யொருநாள் 12 அருள் செய்தொருநாள் 24, 36 | அருள்செய்தொருநாள் | 'செய்து' காரணம் காட்டி உரை தீபிகை |

| பாடல் எண் | கா கோ மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 6-10-3 | அடியேற் காவா | அடியோர்க்கு 12, 24 அடியேற்கு 36 | அடியேற்காவா | — |
| 6-1-4 | கடலின் மேனிப் பிரான் | கடலின் மேனிப் பிரான 12, 24, 36 | கடலமேனிப் பிரான்கடலின்மேனிப் பிரான் | 'கடல' - கடல் போன்ற என்றபடி |
| 6-6-3 | சிறுக்கன் வரலற்கு | சிறுக்கன்வனர்க்கு 12,24 36 | சிறுக்கன் வளைலற்கு | சிறுகள்ள வற்கு என்றும் பாடமுண்டு |
| 7-1-9 | வரமே | வலமே 12 வரமே 24, 36 | வலமேவரமே | 1 உரை 2 பாடல் |
| 7-2-2 | தகுவதோ | தகுவதோ 12 24, 36 தகவிதோ 36 | தகவிதோ | ... |
| 7-2-4 | கையளாய் | கையளாய் 12 | கையளாய் கைகளாய் | கையளாய்— நன்கு பொருந்தும பாடம் |
| 7-2-9 | அன்றுரு வேழும் | அன்றுருவேழும் (24, 12) உரு வேழும்/ உருமேழும் பா 12, 36 | அன்றுரு மேழும் | உரும்/உரு என்றாலும்இடிக்குப் பெயர் |
| 7-4-6 | அசுரைக் கொல்லு மாறே | அசுரரைக் கொல்லு மாறே 12, 24, 36 | அசுரைக் கொல்லு மாறே | அசுரரைஎன்பது பாடமன்று; அசுரை என்றே பாடம்தொகுத்தல்விகாரம் |
| 7-4-10 | ஆநிரை | ஆய்நிரை 12 ஆநிரை 24, 36 | ஆநிரை | ... |

| பாடல் எண் | காகோ மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 7-5-3 | வசைகளே | செவுகளே 12, 24, 36 | வசவுகளே | ... |
| 7-5-10 | இறப்பிலை | இறப்பலை 12 இறப்பிலை 24, 36 | இறப்பிலை | ... |
| 7-6-7 | எரித்த | எரித்த 24,36 எரித்து 12 | எரித்து எரித்த | எரித்து என்ற பாடம் கொள்வது சாலப் பொருந்தும் |
| 7-7-3 | திசையுளெல் லாம் | திசையுரெல் லாம்12, 24, 36 | திசையு ளெல்லாம் | ... |
| 7-8-1 | காலாய் | காலாய் 12 | காலாய் | ... |
| 7-2-2 | கூற்றமு மாய் | கூற்றமுமாம் 12, 24, 36 | கூற்றமு மாய் | ... |
| 7-8-3 | வித்தகத் தாய் | வித்தகத்தால் 12, 24 வித்த கத்தாய் 36 | வித்தகத் தால் வித்தகத் தாய் | இரண்டில் ஏதே னுமொரு |
| 7-8 8 | என்னசுண் டாயங்க ளானின்றிட் டாய்என்னை யாளும் கண்ணா! | என்னசுண் டாயங்களா லெங்ஙனே நின்றிட்டால் என்கண்ணா 12, 24 என்னசுண் டாயங்களால் நின்றிட்டாய் | இரண்டு பாடமும் காட்டுவர் | ... |

| பாடல் எண் | காகோ மூலபாடம் | முன்னோர்கள் பாடல் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| | | என்னை யாளும் கண்ணா! 36 | | |
| 7-8-9 | என்ன வியற்கைகளால் எங்ஙனே நின்றிட்டாய் | என்னவியற்களால் நின்றிட்டாய் என்னை யாளும் கண்ணு 12, 24 | ,, | ... |
| 7-9-11 | சடகோபன் சொல் | சடகோபன் 12, 24, 36 | சடகோபன் | |
| 7 1-2 | வினையேனுடை | வினையேனுடை | வினையேனுடை | வினையேனிடை என்று திருத்த வேண்டா; வினையேனுடை என்ற பாடத்திலும் வியாக்கியானம் பொருந்தும் |
| 7-2-4 | எழுந்துலாம் | எழுந்துலாம் 24, எழுந்துலாய் 36 | உலாம் | உலாய் என்பது அச்சுப்பிழை என்பர் |
| 7-3-1 | வெள்ளச்சுகமலன் | வெள்ளச் சுகமலன் 12, 24, 36 பா வெள்ளைச்சுகமலன் | வெள்ளச் சுகமவன் வெள்ளைச் சுகமவன் | வெள்ளை என்பது மறுவற்ற என்றபடி |
| 7-3 | திருப்பேரையில் | ... | திருப்பேரெயில் | பேரெயில் என்பதே சுத்தபாடம் பேரை என்றில்லை |

| பாடல் எண் | காலே மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 7-3-11 | மேயபத்தும் | மேயபத்தும் | மேயபத்தால் | (மேயபத்தால் என்பதேசிறந்தது) |
| 8-1-5 | பெருயிரேயோ | பெருயிரேயோ 12, 24, 36 | பேரியரே | பேரியரே என்று பாடமாகில் ஸ்வரஸம் |
| 8-2-11 | இங்கு மங்கும் | இங்கு மங்கும் 12, 24 36 அங்குமிங்கும் 6 | அங்கு மிங்கும் | ... |
| 8-3-8 | என்றே | என்றே 12, 24, 36 என்றேல் 12 | என்றே | ஆவி முக்கியம் தோற்ற நிற்க என்றே என்கிறார் |
| 8-4-3 | சரணம் | சரணம் | சரண் சரணம் | சரணம்என்னும் போது அடியல்லால் என்பதை அடியலால்என்று தொகுத்தலாகக்கொள்க |
| 8-5-5 | மல்லை | மல்லல் 12 மல்லை 24, 36 | மல்லை | ... |
| 8-8-1 | குனிசார்ங்கன் | குனிசார்ங்கன் 24, 36 குனிசார்ங்கம 12 | குனிசார்ங்கன் | ... |
| 8-9-9 | விரவார் | விரவார் 12, 24, 36 விரைவார்பா. 24, 36 | விரவார் | ... |
| 8-10-9 | சதுமூர்த்தி | சதுமூர்த்தி 24, 36 சதுர்மூர்த்தி 12 | சதிர் மூர்த்தி சதுமூர்த்தி | ஸாமர்த்தியம் — திறமை அநேக விக்ரஹ பரிக்ரஹம் செய்பவன் |

| பாடல் எண் | கோ. மூல பாடம் | முன்னோர்கள் பாடம்/பாட பேதம் | சுவாமி தழுவிய பாடம் | அதன் காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 8-4-9 | இனையர் | எனையர் 12 இனையர் 24 36 எனையர் பா 24,36 | எனையர் | ... |
| 8-5-10 | கண்டு கொள் | கண்டுகொள் 12, 24, 36 | கண்டுகோள் | கோள் என்றே த வேண்டும் |
| 9-5-4 | நீருஞ்சேவலும் | நீரும்நுஞ்சேலும் 12 நீருஞ்சேவலும் 24, 36 | நீருஞ் சேவலும் | ... |
| 9-5-9 | பண்புடை | பண்புடை 24 36 பண்புரை 12, 24 36 | பண்புரை பணபுடை | நம்பிள்ளை உரைப்படி |
| 9-6-6 | என் கண்ணன் | என்கண்ணன் 12, 24, 36 | என் கண்ணன் | நம் கண்ணன் கள்ளங்கள்— பொருளிசையந் தாதியிருக்கும் |
| 9-6-5 | நம் கண்ணன் | என் கண்ணன் 12 நம் கண்ணன் 24,36 | ... | ... |
| 10-1-11 | குற்றேவல் | குற்றேவல்கள் 12, 24, 36 | குற்றேவல்கள் | ... |
| 10-1-11 | நமர்காள் | நமர்காள் 12 24 36 | .. | — |
| 10-2-2 | ஆயிரம் மராம் | ஆயிரமா 12 ஆயிரமாம் 24, 36 | ... | ... |
| 10-6-4 | பாண்டவர்க் காய் | பாண்டவர்க் கா 12 பாண்டவர்க்காய 24, 36 | பாண்டவர்க்காய் | ... |

| பாடம் எண் | கா கோ மூலபாடம் | முன்னோர்கள் பாடம் பாட பேதம் | சிவாமி தழுவிய பாடம் | அதன்காரணம் குறிப்பு |
|---|---|---|---|---|
| 10-6-5 | திரிவான தாளிணை | திரிவானத்தாளிணை 12 திரிவானத்தாளிணை 24 36 | திரிவானதாளிணை | ... |
| 10-9-7 | குடந்தை எம் | குடந்தையன் கோவலன் 12 குடந்தை எம் கோவலன் 24,36 | குடந்தை எம் கோவலன் | ... |
| 10-3-2 | பிரிவையாமால் | பிரிவையாமால் 24, 36 | பிரிவையாமா | வியாக்யானங்களை நோக்குமிடத்து பிரிவையாமால் என்ற பாடம் ஏற்றதாகத்தோன்றவில்லை பிரிகையுண்டாம்படி என்றே வியாக்யானங்கள் காணுதலால் பிரிவையாமா என்ற ஆகார வீற்ற தான பாடமே யுக்தமென்று தோன்றுகிறது. பிரிவையாமால் என்ற பாடத்திற்கு பிரிவை ஆம் ஆல் என்றுபிரித்துக் கொள்வது பிரிவு என்னுஞ் சொலவே பிரிவை என்று கிடக்கிறது. பிரிவை ஆம்-பிரிவுண்டாகும் ஆல் -அசை ஆதலால் நின் பசு நிரை மேய்க்கப் போக்குவீவ (24, 36) பிரிவை ஆமா (று) நின் பசு நிரை மேய்க்கப் (போகும்) போக்கு வீவ (9,36) |

## பின்னிணைப்பு எண் : 17

# தீபிகையுரையில் சுவாமி காட்டும் வடசொல் திரிபுகள்

| பாடல் எண் | வடசொல் | பாடலில் வந்த திரிபு |
|---|---|---|
| 1-1-7 | கர: | கரன் |
| 1-1-10 | ,, | ,, |
| 1-1-8 | வரம் | வரன் |
| 1-1-8 | ஸுர: | சுரன் |
| 1-1-11 | குருகா | குருகை |
| 1-2-7 | ஸமபத் | சமபத்து |
| 1-3-9 | த்ரிபுரம் | திரிபுரம |
| 2-1-2 | தாமந் | தாமம் |
| 2-4-11 | தாமா | தாமம் |
| 2-1-7 | கண | கணை |
| 2-7-5 | பரிதி | சூரியன் (சூரியனைச் சுற்றி வருகின்ற ஊர்கோளுக்குப் பெயர் அசசொல்லே தமிழில் இலக்கணையால் சூரியனைக் குறிக்கும்) |
| 2-9-1 | பத்மம் | பற்பு |
| 2-10-7 | வரம | வலம் |
| 3-4-11/<br>4-1-11/<br>6-4-1 | போக: | போகம் |
| 3-7-6 | ஜன்ம | சன்மம் |
| 3-10-9/<br>5-2-10 | நக்ந: | நக்கன் |
| 4-1-3 | முரஜ: | முரசம் |
| 4-1-11 | ஸ்திரம் | திரம் |
| 4-2-8 | கீதா | கீதை |
| 4-6-5 | தவளம் | தவளம் |
| 4-6-7 | சூர்ணம் | சுண்ணம் (சுணம் ஆயிற்று) |
| 4-6-10 | த்வாரவதீ | துவராபதி |
| 4-8-8 | மேகலா | மேகலை |

| பாடல் எண் | வடசொல் | பாடலில் வந்த திரிபு |
|---|---|---|
| 4-9-4 | தமஸ் | தமம் |
| 5-2-1 | பூதா: | பூதங்கள் (பூஸத்தாயாம் என்கிற வினையடியாகப் பிறந்தது பூதம்) |
| 5-3-9 | குஸ்த்ரீ | குதிரி |
| 5-7-3 | கருட: | கருளன் |
| 5-9-11 | க்ஷேமம் | சேமம் |
| 6-7-2 | தர்மம் | தர்மம் |
| 6-6-1 | மேகநிகாச | மேகநியாயன் |
| 6-10-3 | ஆஹா | ஆவா |
| 7-8-3 | விஷம் | விடம் |
| 7-8-8 | மதம் | மதன் |
| 7-10-2 | மாகந்தம் | மாகந்த |
| 8-2-1 | சாயா | சாய் |
| 8-4-9 | வித்யா | விச்சை |
| 8-6-4/ | தேஜஸ் | தேசம் |
| 4-10-4 | | |
| 8-10-2 | ஜயம் | சயம் |
| 9-1-4 | ருணம் | இரணம் |
| 9-1-4 | தப்ரர் | தெப்பர் |
| 9-3-4 | கணம் | கனம் |
| 9-3-7/ | மஹாகம் | மாகம் |
| 6-10-11/ | | |
| 9-10-2 | | |
| 9-3-5 | கனகம் | கனம் |
| 10-8-1 | குரு | குரு |
| 9-4-6 | விருத்த: | விருத்தன் |
| 10-1-6 | ஆப்தன் | ஆத்தன் |

பின்னிணைப்பு எண் : 18

# சுவாமியுடன் நெருங்கிப் பழகிய பெரியார்களின் அனுபவங்கள்

திருப்பதியிலிருந்து ஸ்ரீகாஞ்சீபுரம் சென்று தங்கியிருக்கும் நாட்களில் ஸ்ரீ உ. வே மகாவித்வான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளின் இன்சுவையே வடிவெடுத்த அமுத மொழிகளைச் செவியும மனமும் குளிரக் கேட்கும் வாய்ப்பைப பல தடவைகள அடியேன் பெற்றிருக்கிறேன்; அவற்றில் ஒரு தடவை நேர்ந்த சம்பவத்தை இப்போது எழுதுகிறேன்.

ஒரு நாள் ஸ்ரீஸ்வாமிகள் எழுந்தருளியிருக்கும் ராமாநுஜ கூடத்திற்குச் சென்று அன்னாரைத் தெண்டனிட்டு அருகில் உட்கார்ந்திருக்கும் போது ஒரு சிறிய காகிதத்துண்டு அடியேன் கண்ணில் பட்டது. அதனை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன். ஸ்ரீஸ்வாமிகள் அதுகண்டு 'ஏதோ படிக்கிறாயே, அது என்ன?' என்று கேட்டருளினார 'இங்கே ஒரு நிதி கிடைத்தது, அதைக் கொள்ளையடிக்கலாமா என்று அது தன்னைப் பார்த்துக் கொண டிருக்கிறேன்' என்றேன். ஸ்ரீஸ்வாமிகள் புன்முறுவல் பூத்து, 'அம்பட்டன் குப்பையில் மயிர் தவிர வேறொன்றும் இராது. பண்டிதன் குப்பையில் காகிதத்துண்டுதான் கிடைக்கும. இதை நீ என்னவோ நிதி என்கிறாயே. வேணடுமானால் இந்த நிதியை நீயே எடுத்துச்செல். இப்படிப்பட்டவற்றையும் இவற்றைவிட உயர்ந்தவற்றையும அனைவருக்கும் நானே கொடுக்கக் காத்திருக்கிறேன். இவற்றை யாரும கொள்ளையடிப்பதற்காக எவ்வித பிரயாசமும் படவேண்டியதில்லை என்றருளிச் செய்தார்.

அதுதன்னில் குறிப்பிடப்பட்ட விஷயம்— வேதவியாச பகவான் இயற்றியருளிய ப்ரஹ்மசூத்திரத்தில்—நாராயணவாஸு தேவ விஷ்ணு சபதங்கள் இல்லை; கைங்கர்ய ப்ரஸ்தாவம் இல்லை; சேஷத்வம் பாரதந்த்ர்யம் என்பவை காணக் கிடைக்கமாட்டா; ராம—க்ருஷ்ணாத்ய வதாரங்களோ அர்ச்சாவதாரமோ தலை காட்டா; ப்ரபத்தியைப் பற்றி அவற்றில் ஒரு வாசகமும் இல்லை; ஸ்ரீமஹாலக்ஷ்மீ என்பவள் எவ்வளவு தேடினாலும் ஸேவை ஸாதிக்கமாட்டாள்; பகவானுடைய கல்யாண குணங்களைப் பற்றிய அநுபவங்களும் அவற்றில் இல்லை. அந்த ப்ரஹ்ம சூத்திரங்களுக்கு—வேதாந்த ஸாரம் வேதாந்த தீபம் ஸ்ரீபாஷ்யம்

என்னும் மூன்று வ்யாக்யானங்களை அருளிச் செய்த பகவத் ராமாநுஜ முனிவராகிய எம்பெருமானாரும் முற்கூறிய ஏழு விஷயங்களை அவற்றில் குறிப்பிட்டு உரையிடத் துணியவில்லை. ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்திற்கு இன்றியமையாத இவ்விஷயங்களை ப்ரஹ்ம ஸூத்திரவுரைகளில் குறிப்பிட முடியாத குறை தீரவே அவ்வெம்பெருமானார் கத்யத்ரயத்தை அருளிச் செய்தார். சரணாகதி கத்யம், ஸ்ரீரங்ககத்யம் ஸ்ரீவைகுண்டகத்யம் என்னும் பெயர் படைத்த அம்மூன்று கத்யங்களிலும் முற்கூறிய ஏழு விஷயங்களின் ப்ரஸ்தாவம் உள்ளமை அவற்றில் கண்டு கொள்ளலாம்'' இவையே அத்துண்டுக் காகிதத்தில் எழுதப் பட்டன. இவற்றை ஸ்ரீஸ்வாமிகளிடம் படித்துக் காட்டினேன். ''இக்குறிப்பை வைத்துக் கொண்டு நீ பல மணி நேரம் கேட்பார் மனம் இசையப் பேசலாம். உண்மையில் நீ கருதியபடி இது நிதியே தான் இன்னொன்றும் உனக்குச் சொல்லுகிறேன். கத்யத்ரய மருளிச் செய்த எம்பெருமானார் திருப்பாவைச் சீயர்' என்று புகழ் பெற்றவர். ஏன் தெரியுமோ? திருப்பாவையில் அவருக்கும் ஊற்றம் அதிகம் அது எதனால் என்றால்—ப்ரஹ்ம ஸூத்திரத்தில் ப்ரஸ்தாவிக்கப்படாத முற்கூறிய விஷயங்கள் அனைத்தும் திருப்பாவையில் உள்ளதனால் தான்'' என்றார்.

இச்சம்பவம் நடந்து பத்து வருடங்களாய் விட்டிருந்தாலும், இவற்றைச் சேர்ந்த விஷயங்களில் ஏதேனுமொன்று நினைவுக்கு வந்தாலும்—ஸ்ரீஸ்வாமிகளின் கம்பீரமான திருமேனித் தோற்றமும் புன்சிரிப்பும் [illegible] வார்த்தைகளும் நினைவுக்கு வந்து ஒருபுறம் மகிழ்ச்சியும் ஸ்ரீவைஷ்ணவ ஸமுத்ரத்துக்கு ஸூர்யன் போல் எழுந்தருளியிருந்த ஸ்ரீஸ்வாமிகள் இப்போது நம் கண் முன்னே [illegible] மறைந்து விட்டாரே இனி நமக்கென்ன கதி என்று ஒருபுறம் துன்பமும் உண்டாகின்றது. ஸ்ரீஸ்வாமிகள் எழுந்தருளியிருந்த நாளும் ஒரு நாளே! என்று நினைக்காமலிருக்க முடியவில்லை.

ஸ்ரீகாஞ்சி<br>20-6-91 } தி. அ. க்ருஷ்ணமாசாரியன்

# ஸ்ரீ உ. வே. மஹாவித்வான் ப்ர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி பற்றிய அடியேனது நினைவுகள்

## 1. அணுகுவதற்கு எளியவர்; பழகுவதற்கு இனியவர்

ஸ்வாமியை அடியேனுக்குப் பள்ளியில் படிக்கும் நாளிலிருந்தே தெரியும். ஒரு முறை யான் திருச்சி ஸம்ஸ்க்ருத ஸாஹித்ய பரிஷத்தின் ஆண்டு விழாவுக்குப் பரிசுவாங்கத் திருச்சி தேவர் மன்றத்துக்குச் சென்றிருந்தேன். 1939 அல்லது 1940ஆவது வருஷமாக இருக்கலாம். அப்போது ஸ்வாமி வடமொழியில் சுமார் ஒரு மணி நேரம் மிக எளிமையாகவும், சரளமாகவும் என்னைப் போன்ற உயர்நிலைப்பள்ளி மாணவனும் புரிந்துகொள்ளும்படியாகவும், தட்டுத் தடங்கலில்லாமலும், கங்காப்ரவாஹம் போலே உரையாற்றியதைக் கண்டு வியப்புற்றேன். அதற்குப் பிறகு சில வருஷங்கள் கழித்தபின் ஸ்ரீரங்கத்துக்கு உபந்யஸிக்க எழுந்தருளியிருந்தபோது, அடியேன் எந்தையாருடன் கூட ஸ்வாமியை அவர் தங்கியிருந்த வேளுக்குடி சிங்கமய்யங்கார்ஸ்வாமி பாடசாலையில் சந்தித்துப் பேசும் வாய்ப்புப் பெற்றேன். அப்போது ஸ்வாமியிடம் ஸம்ப்ரதாய விஷயமாகச் சில சந்தேகங்களுக்கு விளக்கங்கள் கேட்டேன். ஸ்வாமியும் தக்க பதில் அளித்து அடியேனைச் சிறப்பாக அநுக்ரஹித்துப் பாராட்டினார்.

1945 அல்லது 1946ல் வைகாசி விசாக உற்சவத்திற்கு எந்தையாரோடு சென்று ஸ்வாமி திருமாளிகையில் சில நாட்கள் தங்கி வார்த்தை சொல்லும் வாய்ப்புக் கிடைத்தது. இச்சந்திப்புக்களில் ஸ்வாமி வயதிலும், அறிவிலும் சிறியவர்களாலும் அணுகுவதற்கு எளியவராகவும் பழகுவதற்கு இனியவராகவும் இருப்பதைப் புரிந்து கொண்டேன்

## 2 எழுத்திலும் பேச்சிலும் ஒப்பற்றவர்

ஸ்வாமியின் பரிபூர்ணமான ஆசியுடன் எந்தையாரால் 1948ல் (ஸர்வஜித் மார்கழித் திருவோணத்தில்) ஸ்ரீனிவாசம் அச்சகமும், ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம் பத்திரிகையும், ஸ்ரீஸூக்தி மாலா வெளியீடுகளும் தொடங்கப்பெற்றன. 1953ல் எந்தையார் பரமபதமடைந்தபின் அடியேனே சிறப்பாக நடத்தி வருகிறேன்.

அடியேன் ஆசிரியர் பொறுப்பேற்றுச் சில நாட்களில் ''பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந சலக்ஷ்மண!த்வயா புத்ரேண தர்மாத்மா நஸம் வ்ருத்த: பிதா மம!'' என்னும் ச்லோகத்தை 'மம' என்று பதத்தில் அடிகோடிட்டு எழுதி, ''இந்த ச்லோகம் உன்னிடத்தில் பரிபூர்ணமாகப் பலித்திருப்பதைக் காண்கிறேன்'' என்று ஸ்ரீமுகம் அருளினார் ஸ்வாமி. அடியேன் ஸ்வாமியோடு பழகிய சுமார் 40 வருடத்தில் அடியேன் இத்தகைய அநுக்ரஹ ஸ்ரீமுகங்களை நூற்றுக்கணக்கில் பெற்றிருக்கிறேன் நூற்றுக்கணக்கான உபந்யாசங்களிலும் அந்வயித்திருக்கிறேன் ஸ்வாமியின் க்ரந்தங்களையும் பெரும்பாலும் படித்துச் சுவைத்திருக்கிறேன் நம் நாட்டிலுள்ள அறிவாளிகள் பலரும் இத்தகைய பேறு பெற்றுள்ளனர். எழுத்திலும் பேச்சிலும் ஒப்பற்றவர் என்று ஸ்வாமியை அனைவரும் பாராட்டுவது உள்ளதுரைத்தலேயொழிய மிகைமொழியன்று என்பதை அடியேன் அநுபவ பூர்வமாக உணர்ந்தவன்

### 3 ஸ்காவித்யே சாஸ்தா

ஸ்வாமி தமக்கு வரும் கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதி வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அப்படி பதில் எழுதும்போது தமக்கு வரும் கடிதங்களில் ஏதேனும் பிழைகள் தென்பட்டால் அவற்றைக் குறிப்பிட்டு, ''சிலவு என்று எழுதக் கூடாது; செலவு என்றே எழுத வேண்டும்; செல்வது செலவு, வருவது வரவு;'' என்றும், ''முயற்சித்தான் என்று எழுதவேண்டா, முயன்றான் என்றோ முயற்சி செய்தான் என்றோ எழுதுக'' என்றும், ''இயக்குனர் என்று வேண்டா; இயக்குநர் என்று தந்நகரமிட்டே எழுதவேண்டும். மிகுநரை இலனே என்று ஆழ்வார் அருளியது காண்க'' என்றும் எழுதி, எழுதுபவர்களின் பிழைகளைத் திருத்திப் பணிகொள்வதை ஸ்வாமி வழக்கமாகக் கொண்டிருந்தார். ஸ்வாமியின் விவாத நூல்களிலும் இத்தகைய பல திருத்தங்கள் வெளிவந்திருப்பதைக் காணலாம்.

### 4 புத்தகங்களை வாரி வாரி வழங்கியவர்

தாம் அச்சிடும் புத்தகங்களைத் தக்கவர்களுக்கு விலையில்லாமலே வாரி வழங்குவதிலும ஸ்வாமிக்கு இணையில்லை என்றே சொல்லலாம் ஒருமுறை ஸ்வாமியைத் திருமாளிகையில் சந்திக்கச் சென்றபோது தமது ஸ்தோத்ர வ்யாக்யானம் அனைத்தும் அடங்கிய (சுமார் 1000 பக்கமுள்ள) ஸ்ரீகோசத்தை, அதன் முகப்பில் ''ஸ்ரீமதே ஆயுஷ்மதே வித்வச் சிரோமணியே

ஸ்ரீக்ருஷ்ணஸர்மனே ப்ர அ. விரசித ஸகல ஸ்தோத்ர வ்யாக்யான மாலிகா ஸப்ரமோதம் அர்ப்யதே—25-3 1972'' என்று தம் திருக் கரத்தாலேயே க்ரந்தாக்ஷரங்களில் அழகாக எழுதி அடியேனிடம் அளித்தருளினார் இப்படி ஸ்வாமி அளித்த புத்தக நன்கொடை கள் கணக்கற்றவை.

## 5 நல்லது கண்டால் பாராட்டுகிறவர்

ஸ்வாமி எழுந்தருளியிருந்தபோது அடியேன் சுமார் முப்பது வருடங்கள் 'ஸுதர்சனம்' ஆசிரியராயிருந்து பல பூர்வாசார்ய க்ரந்தங்களை வெளியிட்டேன். பலக்ரந்தங்களை எழுதி வெளியிட்டேன். அவற்றைப் பாராட்டி ஸ்வாமி எழுதிய ஸ்ரீமுகங்கள் நூற்றுக்கணக்கில் இருக்கும். அடியேன் பதரி யாத்திரை சென்று வந்தபோது, ''திருப்பிரிதி என்னும் திவ்யதேசம் பதரிக்குத் தெற்கிலுள்ள ஜோதிர்மடம் (ஜோஷிமட்) அல்ல; அதற்கு வடக்கே 'இமயத்துள்' மானஸ ஸரோவரக் கரையிலேயே அது இருந்திருக்க வேண்டும்'' என்று ப்ரமாணங்களைக் காட்டி கட்டுரை எழுதினேன். ''இது மிகப் பொருத்தமானது. நாங்கள் எல்லாம் மருண்டிருந்தோம்'' என்று மனமார பாராட்டி எழுதினார் ஸ்வாமி அதுபோலவே அடியேனது ''கைவல்யஸித்தாஞ்சனி'' நூலில் ''தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்த வித்வான்கள் அனைவரும் பஞ்சாக்னி வித்யா நிஷ்டனைக் கைவல்ய நிஷ்டனாக்க கொண்டிருப்பது தவறு. அவனிலும் வேறுபட்டவனாய், 'ப்ராணன்' எனப்படும் கேவலாத்மாவை உபாஸிக்கும் அதிகாரியே கைவல்ய நிஷ்டன்'' என்று நூற்றுக்கணக்கான ப்ரமாணங்களைக் காட்டி எழுதிய போது அதை மனமாரப் பாராட்டி ''நான் எனது கருத்தை மாற்றிக் கொண்டேன்'' என்று ஸ்ரீமுகம் எழுதினார் ஸ்வாமி.

## முடிவுரை

இத்தகைய ஸ்வாமி திறத்தில் ஏதாவது செய்யவேணும் என்னும் விருப்பத்தாலேயே அடியேன் அவரது ஸ்ரீவைகுண்ட ஸ்தல வ்யாக்யானத்தை மறுபதிப்பு செய்து கொடுத்து அவரது அனுக்ரஹத்தை அவரது சரமதசையில் அடையும் பேறுபெற்றேன்,

எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

திருச்சி

# மணி வேண்டிய மாமணி

பணி சுமந்த பாரில் பலமணிக ளுண்டு
பணியவற்றை நாடலோ பண்பீர்—அணிவேன்
மணிவண்ணன் ஒத்தி மலையீன்ற தூய
மணிவேண் டியமா மணி

*அரவரசன் தலையாற் சுமக்கும் இப்பாரில் சிறந்த மணிகள் பலவுண்டு. பண்பாளர்களே! அவற்றை நாடுதலோ பணி? அன்று மணிவண்ணனாகிய திருவேங்கடமுடையானுடைய திருவத்தி கரியீன்ற தூய மணியாகிய அண்ணாஸ்வாமியை என் சென்னிக்கு நல்லணியாக வணிவேன். மணி வேண்டிய மாமணி யன்றோ அது!*

*விருதுகளுக்குப் பெருமை சேர்த்த ஸ்ரீகாஞ்சி ஸ்வாமி அஞ்சா நெஞ்சினர். ஆரண வாயினர். இன்சொற் களஞ்சியம்; ஈந்தே உகந்தவர்; உலகை வாழ்வித்தவர்; ஊக்கமதுள்ளவர்; எண்ணருநலத்தினர்; ஏதமொன்றிலாதவர். ஐயமறக் கற்றவர்; ஒப்பிலாச்சான்றோர்; ஓங்குபுகழ் நிறீஇயவர்; ஔடதம் போன்றவர். இவற்றைச் சான்றுகள் பல காட்டி நிறுவுதல் எளிதேயாயினும் 'மணி வேண்டிய மாமணி' என்பது பற்றி நண்பரான ஸ்ரீமான் உ.வே ரங்கராஜன், எம். ஏ. அவர்களுடைய அன்புக் கட்டளையின்படி சில வரைந்தனைவேன்.*

*ஓட்டைச் சாலில் நீரெடுப்பர் உன்மத்தர் பலர். அதுபோன்று நற்பொழுதும் வெறிதே கழியும் பலர்க்கு. ஆயின் உண்ணும் போதும் உறங்கும்போதும் உலகின் வாழ்ச்சி பற்றிய சிந்தனைக் கொடி படர்தரு நன்னெஞ்சினர் நம் ஸ்வாமி. நன்னீர்முகில்எங்கும் திரிந்து மழைபொழிந்து வாழ்விப்பதுபோல்இமவந்தந் தொடங்கி யிருங்கடலளவும் சென்று தம் சொன்மாரியால் உயிர்ப்பயிர்தழைக்கச் செய்த சீர்முகில் நம் ஸ்வாமி அதுமட்டுமன்று. எதிரில் கருத்துகளுக்குத்எழுத்துரு வீந்தது நம் ஸ்வாமிக்கு தலைப்புகழ் தரவல்லது. ஆம்.வானவில்லாய்த்தோன்றி மறையாமே என்றென்றும் நிலைத்து நிற்கும் வண்ணம் நூல்களை யியற்றி அவர் செய்துள்ள பேருதவிக்குக் கைம்மாறும் உளதோ? அவர் மறையினும் அவர்தம் நூல்கள் மறையா. ஒன்று நினைவுக்கு வருகிறது. ஆராவன் பிளையவனோடும் அருங்கானமடைந்த இராமபிரான் அவ் விலக்குவனை அமைத்த இலைவேய்குரம்பையைக் (பர்ணசாலை*

கண்டு மகிழ்ந்து சொல்வான். "பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந் தர்ம ஜ்ஞேந ச லக்ஷ்மண/த்வயா புத்ரேண தர்மாத்மா ந *ம் ்ருத்த பிதா மம" என்று. "இலக்குவனே. நினைவறிபவனும் நன்றி யுள்ளவனும் அறமுணர்ந்தவனுமான உன்னை மகனாகப் பெற்ற தனால் தர்மாத்மாவான என் தகப்பனார் இறக்கவில்லை" என்பது இதன் பொருளெனத் தோன்றும். நம் பூருவாசாரியர்கள் இச்சுவையே வடிவெடுத்ததான வியாக்கியானம் அருளிச் செய் துள்ளார்கள். "தர்மாத்மா' என்றவிடத்து ஈடு (5-4-8) வருமாறு "...தாமிருந்த நாளும் நமக்கு வேண்டும் ரக்ஷணங்கள் பண்ணி, தாம் போன நாளைக்கும் தண்ணீர்ப்பந்தல்வைப்பாரோபாதியும் (வைப்போரைப் போலவும்) வைத்துப் போவதே." ஸ்ரீஸ்வாமி யின் அரிய நூல்களை அவர் வைத்த தண்ணீர்ப் பந்தல்.

இப்பணிக்காகவும் மணிவண்ணன்பால் மணி (வாழ்நாள்) வேண்டினவர் நம் ஸ்வாமி ஒவ்வொரு நொடியையும் பயனுள்ள வழியிற் கழித்ததனால் 'மணி' வேண்டினவர் என்றேன். ஆண்டானிடம் மட்டுமன்று; அடியாரிடமும் மணி வேண்டினவர் ஸ்வாமி. வெளியூர்களில் உபந்யாஸம் ஏற்பாடு செய்ய விரும்பி ஸ்வாமியை அணுகுமவர்கள் அவர்க்கு ஸம்பாவனை எவ்வளவு பண்ண வேண்டும் என்று அறிய விரும்புவர். ஸ்வாமி ஸாதிப்ப தாவது "எனக்கு இங்கிலிஷ் மணி வேண்டா. தமிழ் மணி தான் வேண்டும். உபந்யஸிக்க எவ்வளவு அவகாசம தருவீர்கள்?"

ஆம். ஆயிரக்கணக்கான அன்பர்களிடையே அமர்ந்து சொற் பொழிவாற்றிய ஸ்வாமி ஆயிரக்கணக்கில் ரூபாய் வேண்டும் எனக் கேட்டதில்லை. அவகாசம் வேண்டுமெனக் கேட்டதன் காரணம் யாது? இறையரும் பண்புகளின் நுகர்ச்சியின் போக்கு வீடாகவே ஸ்ரீஸ்வாமியின் உபந்யாஸங்கள் திகழும். பகவத் குணத்திலோ ஆசார்ய குணத்திலோ ஈடுபட்டால் விரைவில் கரையேறத் தம்மால் இயலாது என்பதை ஸ்வாமி அறிந்து அவகாசம் அதிகம் வேண்டுவர். ஆழ்வார் திருவாய்மொழி

தொடங்கும்போதே 'ஆயிரத்து' என்று (1-1-11) ஸாதிப்பது ஒரு புடை நினைக்கவுரியது. மற்றொரு காரணமும் இருக்கலாம். எழுத்தின் மூலமாகப் பலருடன் தொடர்பு கொண்டாலும் பேச்சு என்பது தனிப்பட்டதே. நேரில் ரஸிகர்களைக் கண்டு சொற்பொழிவாற்றும்போது அவர் கொள்ளையின்பத் திறுதி காண்பவர். எழுத்தறிவில்லாதவரும் கேட்டுப் பயன் பெறலாம். பழமறை தொடங்கிப் பழமொழி வரை உள்ள வற்றில் நுண்பொருளைப் பாமரரும் அறியும் வண்ணம் அளிப்பது ஸ்வாமியின் சிறப்பியல்பன்றோ? எனவே கேட்போர் நலங் கருதியும் அவகாசம் கேட்பர் எங்க. ஸ்வாமி பக்கல் பலகால் நேரில் கண்ட பண்பினையே இங்குக் குறிப்பிட்டேன்.

தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்க மணி வேண்டிய மாமணியான ஸ்வாமியைப் பற்றித் தற்போது இவ்வளவில் அமைகிறேன்.

காஞ்சீபுரம்
16—6—1991

— தி. அ. அனந்தாழ்வான்

ஸ்ரீ

ஸ்ரீமதே வேங்கடேசாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத நந்தார்யமஹாகுரவே நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:

''தே கண்ட லக்னதுலஸி நளி நாக்ஷமாலா ''

—என்கிற ச்லோகத்தில் சொல்லியபடி ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் பொருந்திய ஸ்ரீ காஞ்சீ மஹாவித்வான் ஜகதாசார்ய ஸிம்ஹாஸனாதிபதி மஹாமஹோபாத்யாய ஸ்ரீமதுபயவே ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியோடு நெருங்கிய குடல் துடக்குடைய அடியேன் அநுபவித்த அந்த ஸ்வாமியின் ஒரு சில வைபவங்களை விண்ணப்பித்துக் கொள்கிறேன். அடியேனிடத்தில் மிகவும் வாத்ஸல்யமுடையவர். பல ஸமயங்களில் பல பேரிடத்தில் '' என்மச்சினன் குமாரர்கள் இருவர் திருப்பதி ஸம்ஸ்க்ருத கலாசாலையில் சாஸ்த்ர ப்ரவசனம் செய்து கொண்டு அருளிச்செயலில் ஸமர்த்தர்களாய் நல்ல திருமிடற்றோசையுடன் இன்னிசையில் திவ்ய ப்ரபந்த பாசுரங்களை ஸேவிக்கும் திறமையுடன் அருளிச் செயல் கோஷ்டியில் அன்வயித்து வருகிறார்கள். எனக்கு மிகவும் ஸந்தோஷமாக இருக்கிறது ' என்று ஸாதிப்பராம். அவ்வித ஆசியைப் பெறும் பாக்கியமுடையனானேன். ஸ்வாமியை நெருங்குவதற்கு மிகவும் பயமாயிருக்கும். நெருங்கினால் குழந்தைபோல் பழகுவர். ஒவ்வொரு பங்குனி விசாகத்திற்கும் ஸ்ரீமுகம் ஸாதிப்பர் அடியேன் உத்யோகியானபடியால் ஒன்றிரண்டு நாட்கள் தான் அன்வயிப்பேன். ஸ்ரீஸ்வாமியை தெண்டன் ஸமர்ப்பித்த போது என்காலைப் பார்த்து கோபாலா!! என்ன ஒருகால் தானே தெரிகிறது. மற்றொரு காலை பஸ்ஸிலேயே வைத்துவிட்டு வந்தாயா, என்ன!'' என்று வாத்ஸல்யம் பொங்கக் கேட்பர். ''உனக்கென்ன மாத வருமானம்?'' என்று ஒரு ஸமயம் கேட்டார். அப்போது வாங்கிக் கொண்டிருந்த சம்பளத்தை (ரூ. 2400/-) விண்ணப்பித்தேன். ''அப்படியா! இவ்வளவு சம்பளம் வாங்குகிறாயா! ஆயிரம் ரூபாய் சம்பளக்காரனை என்று சொல்வார்களே! அவர்களையும் விஞ்சிவிட்டாயே! கேட்கப் பரம ஸந்தோஷமாயிருக்கிறது'' தெனக் கண்கள் நீர்மல்க ஹார்தமாக ஸாதித்தார். ஸம்ப்ரதாயார்த்தங்களுக்கு விரோதமாக யார் எழுதினாலும் தன்னைச் சேர்ந்தவனென்றும் பிறரென்றும் பாராமல் உடனே கண்டிப்பர். எல்லாம் எழுத்தில்தான். நேரிலோ அளவளாவுவர், இவ்வித குணவிசேஷம் பிறரிடத்தில் காண்பதரிது.

திருக்காளத்தியில் வாழும் பலராம செட்டியார் என்பவர் நம் ஸ்வாமிக்கு மிகமிக வேண்டியவர். வடமொழியில் பேசும் திறமை படைத்தவர். தாய் பாஷையான தெலுங்கிலும் வல்லவர். அவர் ஒரு ஸமயம் காஞ்சி சென்று நம் ஸ்வாமியைத் தெண்டனிட்டுத் திருப்பதியிலிருந்து வருகிறேன் என்று சொல்ல, "அப்படியா மிகவும் ஸந்தோஷம். அங்கே ஒரு ஸ்வாமி மகாவித்வானாஎழுந்தருளியிருக்கிறாரே அவர் பாங்குதானோ! நீ சென்றால் நான் குசலப்ரச்னம் செய்ததாகச் சொல்" என்றார் அவரும் அப்படியே என்று சொல்லி திருப்பதி வந்து அந்த வித்வானிடம் "காஞ்சி சென்றேன். ஸ்வாமியைத் தரிசித்தேன். அவர் தேவரீருடைய க்ஷேமாதிகளைக் கேட்டார்" என்றார். அதற்கு அந்த ஸ்வாமி கோபாவேசத்துடன் "ஆச்ரஹி த்வேஷி ஆசார்ய தூஷணமே வடிவெடுத்தவர்" என்று ஸாதித்தாராம். இவ்விஷயத்தைப் பலராம செட்டியார் எனக்கு மிகவும் ஆப்தராகையாலே என்னிடம்வந்து இதைச்சொல்லி இவர்களெல்லாம் மனிதர்களாம், வாசித்தவர்களாம், குணமில்லாத ஜென்மம் என்ன ஜென்மம். ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியின் குணமெங்கே, இவர்கள் எங்கே' என்று நிர்வேதத்துடன் சென்றார். இங்ஙனம் எல்லோராலும் போற்றுதற்குரியவர் நம் காஞ்சீ ஸ்வாமி.

கீர்த்தி மூர்த்தியாய் திருப்பதியில் சிறிய ஜீயர் ஸ்வாமியாக எழுந்தருளியிருந்த ஸாது ராமாநுஜாசார்ய ஸ்வாமி, அடியேனுடைய அருளிச் செயலை ஸேவிக்கும் பாணியைக் கடாக்ஷித்து, அடியேனுக்கு ஒரு விருது வழங்க வேண்டுமெனத் திருவுள்ளம் பற்றி ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியிடம் "நம் கோபாலன் ச்ராவ்யமாக இன்னிசையோடு ஸேவிக்கிறான். அவனுக்கு ஒரு விருது கொடுக்கலாமென நினைத்துள்ளேன். என்னவென்று கொடுக்கலாம்" என்று கேட்க, ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி அருளிச் செயலிலே வல்லவனாகையாலே "அருளிச் செயல் வல்லான்" என்று கொடுப்பது சாலப் பொருந்துமென ஸாதித்தாராம். அவ்விதமே அந்த விருதை அக்ஷரங்களிலே பொறிக்கப்பட்ட தங்க மெடலை அடியேனுக்கு திருமலை எம்பெருமானின் திருத்தேர்த் திருநாளன்று கோஷ்டியிலே பல வித்வான்கள் முன்நிலையில் ஸாதித்தார். இவ்விதம் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமி அபதார்த்தமான என்னிடம் காட்டிய வாத்ஸல்யம் வாசாமகோசரமென்று விண்ணப்பித்துக் கொண்டு விடைபெறுகிறேன்.

—ஸ்ரீ அ. கோபாலதாஸன்

# துணைநூற் பட்டியல்


## முதன்மை ஆதாரங்கள்

1. சுவாமி, திவ்யார்த்த தீபிகை, திருவாய்மொழி,

முதற்பத்து, 1953.
2ஆம் பத்து, 1949.
3ஆம் பத்து, 1950.
4ஆம் பத்து, 1951.
5ஆம் பத்து, 1952.
6ஆம் பத்து, 1953.
7ஆம் பத்து, 1952.
8ஆம் பத்து, 1953.
9ஆம் பத்து, 1957.
10ஆம் பத்து, 1957.
க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம்.

2. கிருஷ்ணமாசாரியார், சே. (ப. ஆ), பகவத் விஷயம் (10 பகுதிகள், நோபில் அச்சுக்கூடம், சென்னை, 1919.

3. திருவேங்கடாசாரியார், புதுப்பட்டு (ப. ஆ.), திருவாய்மொழி, ஆறாயிரப்படி, பன்னீராயிரப்படி உரை, சுரு அவதாரிகைகள் (7 பகுதிகள்), ஸ்ரீநிகேதன் முத்ராக்ஷர சாலை, குரோதன வருடம் 1925-26.

## துணைமை ஆதாரங்கள்

1. அண்ணங்கராசாரிய சுவாமி, காஞ்சி பி ப, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சிபுரம், 1969, இரு பகுதிகள்.

2. ... ... ..., தானே எழுதிய தன்சரிதை, கிரந்த மாலா ஆபீஸ், 1950.

3. ... ... ..., காஞ்சி பி ப., முதலாயிரம், திவ்யார்த்த தீபிகை உரை, 2ஆம் பதிப்பு, 1928

4. ... ... ..., பகவத் விஷயம் (5 பகுதிகள்) குரு அச்சகம், சென்னை, 1975

5. அண்ணங்கராசாரிய சுவாமி, ஸ்ரீவசந பூஷணம், தாத்பர்ய சாரம், லிபர்டி பிரஸ், சென்னை, ஜய ஆண்டு.

6 ... ... ..., ஆசாரிய இருதய பதவுரை, ரத்நம் பிரஸ், சென்னை, 1951. (சஷ்டியப்த பூர்த்தி 8வது நினைவு மலர்).

7. ... ... ..., ஸ்ரீராமாயண ஸௌரபம், ரத்நம் பிரஸ், சென்னை, 1953.

8. ... ... ..., முமுட்சுப்படி ஸாரார்த்த தீபிகை, ஸ்ரீவிலாசம் அச்சுக்கூடம், ஸ்ரீ ரங்கம், 1952

9 ... ... ..., திருவிருத்தம் திவ்வியார்த்த தீபிகை, மார்டன் அச்சுக்கூடம், சென்னை, 1930.

10. ... ... ..., (ப.ஆ.), ஆசாரிய இருதயம், கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சி, 1950.

11. ... ... ..., (ப. ஆ), ஸ்ரீமத் வரவரமுனி கிரந்தமாலை, (ஸ்ரீவசந பூஷணம்) கிரந்தமாலா, ஆபீஸ், காஞ்சி, ஆண்டு இல்லை.

12. ... ... ..., (ப.ஆ.), நித்யாநுஸந்தானம், பகுதி2 காஞ்சி 1953.

13. ... ... ..., வால்மீகி ராமாயண வசநம், பாலகாண்டம் முதல் ஸுந்தர காண்டம் வரை, ஜி. எல். அச்சுக்கூடம், சென்னை, 1971

14. ... ... ..., ஸ்ரீராமாநுஜன், 224; 318, 334 முதல் 340 காஞ்சி 1976-1977

15. ... ... ..., காஞ்சி பி.ப., ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலா, கிரந்தமாலா, காஞ்சி, 1953.

16. ... ... ..., உபய வேதாந்த ப்ரமாண ஸங்க்ரஹ காஞ்சி.

17. ... ... ..., திராவிட வேதாந்த ப்ரமாணத் திரட்டு, (தெலுங்கு) கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சி, 1947.

18. அண்ணங்கராசாரியசுவாமி — ஸ்ரீராமாநுஜன் அநுபந்தம், வரவரமுநி க்ரந்த மாலையின் திரட்டு, கிரந்தமாலா ஆபீஸ், காஞ்சி, 1975.

19. ... — ..., வரவரமுநி சதக உரை, ஸ்ரீவாதி பீகராசார்ய ஸூக்திமாலிகா, 1-2 பாகங்கள், பி.ப. அண்ணா கைங்கர்ய சபை, காஞ்சி 1985, 1986,

20. அரங்கராசன், இரா., — நம்பிள்ளை உரைத்திறன், அமுத நிலையம், சென்னை, 1986.

21. அரவிந்தன், மு வை., — உரையாசிரியர்கள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், 1977.

22. அருணாசலம், மு., — தமிழிலக்கிய வரலாறு, 10ஆம் நூற்றாண்டு முதல் 15ஆம் நூற்றாண்டுவரை, காந்தி வித்தியாலயம், மாயூரம், 1971-1979.

23 இராமகிருஷ்ணய்யங்கார், — அமுதவிருந்து, குரு அச்சகம் சென்னை, 1982.

24. ... — ..., திவ்வியப் பிரபந்த அகராதி, அரசாங்கக் கையெழுத்துச் சுவடி வெளியீடு, சென்னை, 1961.

25 கந்தசாமி முதலியார், — கச்சிக் கலம்பகம், கழகம், சென்னை, 1964

26 கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் எஸ் (ப ஆ.), ஸ்தோத்ர ரத்ந வ்யாக்யாநம், சதுச்ச்லோகீ வ்யாக்யாநம், ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யாநம், ஸ்ரீநிவாசம் பிரஸ் திருச்சி, 2ஆம் பதிப்பு, 1976

27. ... ... ..., (ப.ஆ.), நாலாயிரத் திவ்விய பிரபந்தம், ஸ்ரீநிவாஸ அச்சுக்கூடம், திருச்சி, 1981.

28. ... ...., (ப ஆ.). முமுட்சுப்படி ஸ்ரீநிவாஸம் அச்சுக் கூடம், திருச்சி, 1970.

29. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ப ஆ.) ஆழ்வார் ஆசாரியர்கள் வைபவம், பா.பூ. ஸ்ரீவைஷ்ணவ சபா பொன்விழா மலர், ஸ்ரீநிவாஸம் பிரஸ், திருச்சி, 1970.

30. ... ... ... (ப ஆ.) குருபரம்பராப்ரபாவம், ஆறாயிரப் படி, ஸ்ரீநிவாஸம் அச்சுக்கூடம், திருச்சி' 1968.

31 கிருஷ்ணவேணி அம்மையார் எஸ்., செம்பொருள், திருமலை திருப்பதி தேவஸ் தான வெளியீடு, திருப்பதி, 1954.

32. கோபாலகிருஷ் ணமாசாரியார், வை.மு (ப.ஆ.) சடகோபரந்தாதி, கழகம் சென்னை, 1970

33. ... ... ..., (உ.ஆ.). கம்பராமாயணம், பாலகாண்டம் முதல் யுத்த காண்டம் வரை. வை.மு.கோ. பதிப்பு, சென்னை, 1970

34. சுப்பிரமணியன், ச.வே., அடியார்க்கு நல்லார் உரைத்திறன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

35. சுந்தரமூர்த்தி இ. பரிமேலழகர் திருக்குறள் உரைத்திறன், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1985.

36. சௌரிராசன், பொன்., சித்திரச் சிலம்பு, மாருதி பிரஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1984.

37. ஞானசுந்தரம், தெ, வைணவ உரைவளம், தாயம்மை பதிப்பகம், சென்னை, 1989

38. தாமோதரனார், கு., ஆழ்வார் திருவுள்ளம், பூங்கொடி பதிப்பகம், சென்னை, 1978.

39. — ... —, திருவாய்மொழித் திறன், பாரிநிலையம், சென்னை, 1981.

40 பிள்ளை லோகாசார்யர் உபதேச ரத்தின மாலை வியாக்கியானமும் பதவுரையும், யுனைடெட் அச்சகம், காஞ்சி, 1916.

41. பிள்ளைலோகஞ் சீயர், திருவாய்மொழி நூற்றந்தாதி வியாக்கியானமும் பதவுரையும், ஸ்ரீநிவாஸம் அச்சகம், காஞ்சி, 1916.

42. புருஷோத்தம நாயுடு பு.ரா., பகவத் விஷயம் திருவாய்மொழி நூற்றந்தாதி ஈட்டின் தமிழாக்கம் (10 பகுதிகள்), சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1951-59

43. வரதாசாரிய சுவாமி, தி., அருளிச் செயலனுபவம், இளங்கோ அச்சுக் கூடம், 1986.

44. ... — ..., அருளிச் செயலனுபவம் (கடைப்பகுதி), இளங்கோ அச்சுக்கூடம், 1988.

45. ... — –, பஞ்சரத்நம், இளங்கோ அச்சுக்கூடம், 1989.

46 ... ... ..., ஸௌந்தாரஸமஞ்சரி (பகவத் விஷயம்) பகுதி 1, குரு அச்சகம், சென்னை, 1981.

47 வரதராசன், மா, பன்னீராயிரப்படி-ஓர் ஆய்வு, கோமதி அச்சகம், சென்னை, 1989.

48 வேதாந்ததேசிகர், ஸ்ரீ வரதராஜ பஞ்சாஸத், லிப்கோ பதிப்பு, சென்னை.

இலக்கண நூல்கள்

1. தொல்காப்பியம், எழுத்ததிகாரம், நச்சினார்க்கினியர் உரை, கழகம், சென்னை.

2. தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையர் உரை, கழகம், சென்னை.

3. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, கழகம், சென்னை.

4. தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசிரியர் உரை, கழகம், சென்னை, 1969.

5. நன்னூல் விருத்தியுரை, ச. தண்டபாணி தேசிகர் பதிப்பு, பாரி நிலையம், சென்னை, 1980.

6 நன்னூல் காண்டிகையுரை, ஆறுமுக நாவலர் உரை, சென்னை, 1978.

7. நன்னூல், கழக உரை, சென்னை, 1974

8. இறையனார் அகப்பொருளுரை, கழகம், சென்னை, 1968.

9. நம்பியகப் பொருள் விளக்கம். கழகம், சென்னை, 1973.

நீதி நூல்கள்

1. திருக்குறள் மூலம், கழகம், சென்னை.

2. திருக்குறள் மூலமும் உரையும். கழகம், சென்னை.

அகராதிகள்

1. தமிழ் அகராதி, பாகம் 1, பகுதி 3, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, 1978.

கடிதங்கள்

1. அனந்தாழ்வான், தி. அ., காஞ்சிபுரம் சுவாமியின் அனுபவம். மணிவேண்டிய மாமணி

2. கிருஷ்ணமாசாரிய சுவாமி, தி. அ., காஞ்சிபுரம் சுவாமியின் அனுபவம், நாள் 10—6—1990; 20—5—1991.

3. கிருஷ்ணசுவாமி அய்யங்கார், எஸ், திருச்சி, சுவாமி பற்றிய நினைவுகள், நாள் 31—5—1991.

4. கோபாலாசாரிய சுவாமி, தி. அ, திருப்பதி, சுவாமியின் அனுபவம்.

செய்திகள்
நேர்முகப் பேட்டி

1. ஸ்ரீமான் உ. வே. தி. அ. கிருஷ்ணமாசாரிய சுவாமி, காஞ்சி, 10—6—1991.

2. ஸ்ரீமான் உ. வே. தி. அ. கோபாலாசாரிய சுவாமி, காஞ்சி, 18—6—1991.

---